| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 33 | 28 | எலாதுய் யென்......இடை | எல்லாது என்......கடை |
| 34 | 28,29 | இவ்விருவரிகளையும் நீக்கிவிடுக | |
| 35 | 19 | மஃகான | மஃகான் |
| 38 | 9 | றளதப | றளதம |
| „ | 10 | யாமைன் | யாமையென் |
| „ | 12 | னஃஃகிய வெஃஃகுணர் | னஃகிய வெஃகுணர் |
| „ | 13 | வெஃஃகுவர் | வெஃகுவர் |
| „ | 21 | பவள | பவள்ள் |
| „ | 22 | பவளக் | பவள்ள் |
| 40 | 24 | கூறுமாற்றே | கூடுமாற்றாற் |

„ இப்பக்க முடிவில்,

'வெள்ளையுட் பிறதளை விரவா' என்னும் இலக்கணத்தோடு மாறுகொள்ளுமாகலின், ஆண்டுக் குற்றியலிகரத்தை இவ்விலக்கணத்தால் அலகுபெறா என்று விலக்க வேண்டாமையாம். 'அருளல்லதியாது' என்புழிக் குற்றியலிகரமாமாறு—என்னும் இவ்வரிகளைச் சேர்த்துக்கொள்க.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 41 | 10 | அழியா | அழிய |
| „ | 11 | ஆண்டுகீ | ஈண்டுக் |
| „ | 22 | ஆண்டுக் | ஈண்டுக் |
| 43 | 5 | அலகியல்பல | அலகியல்பில |
| „ | 25 | கூற்றிசைப்பப் | கூற்றிசைப்ப |
| 44 | 6 | தூஉபத் | தூஉஉத் |
| „ | 8 | மிசையான் சொன்ன நறுநுதலா | மிசையான்கொ ன்ன னறுநுத |
| „ | 9 | ராஅமெ | லார்மாமை |
| „ | 23 | றளதப | றளதம |
| „ | 28 | என்றும் | என்று |
| „ | 29 | ஒருகாற் | ஒருசார் |
| 45 | 8 | றளதப......கின்றள | றளதம......யென்றள |
| „ | 17 | யிசைப்பப் | யிழைப்பப் |
| „ | 27 | யெழுந்தள | யெழுத்தள |
| „ | 28 | வியற்பா | யியற்பா |
| 46 | 16 | தேட்டிடத்து | தெட்டிடத்து |
| 50 | 16 | வேண்டிப் | வேண்டிப்— |
| 57 | 16 | இயற்சீரை, | இயற்சீரை |
| „ | „ | உரிச்சீரை | நேரீற்றுரிச்சீரை |
| „ | „ | பொதுச் | நிரையீற்றுரிச் |
| „ | 17 | நூலுடையார் ; என்னை ? | நூலுடையார். |
| „ | 26 | என்றாராகலின் என்பதை நீக்கிவிடுக. | |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 61 | 1 | ஒரோ அசை | " ஒரோ வகை |
| ,, | 2 | சீரெனப் படுமே | சீரெனச் செப்பினர் புலவர் " |
| ,, | 9 | நான்கினும் | நான்கினுன் |
| 63 | 33 | வளவயலி டைக் | வள வயலிடைக் |

64 26,27 இவ்வரிகளின் பாடபேதத்தையே பாடமாகக் கொள்க.

65 21-வது வரிக்குக்கீழ், 'கருவிளந்தண்ணிழல் கூவிளந்தண்ணிழல்' என்றும்,

,, 22-வது வரிக்குக்கீழ், 'கருவிளந்தண்பூ கூவிளந்தண்பூ' என்றும்,

,, 23-வது வரிக்குக்கீழ், 'கருவிளநறும்பூ கூவிளநறும்பூ' என்றும்,

,, 24-வது வரிக்குக்கீழ், 'கருவிளநறுநிழல்' கூவிளநறுநிழல்' என்றும் சேர்த்துக்கொள்க.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 66 | 2 | முன்னிறீ இக்-காக்கு | முன்னிறீ இ-ீக்கா |
| ,, | 4 | ஞலசைச்சீர்ச் | ஞலசைச்சீர் |
| ,, | 22 | குடை நவை | குட னவை |
| ,, | 24 | துபி | துமி |
| 67 | 29 | பனிமொழி | பணிமொழி |
| 68 | 25 | 'பெருது' | 'பெருதும்' |
| ,, | ,, | வஞ்யுரிச்சீர் | வஞ்சியுரிச்சீர் |
| 69 | 2 | பெருது | பெருதும் |
| 69 | 15 | வகரமியையின்மகரமுங் | வகார மிசையு மகாரங் |
| ,, | 21 | எனவும் | என்னும் இதன் புறனடையானும், |
| ,, | 27 | லானெனங்க. | லானும் எனக. |
| 70 | 2 | முண்மையி | முறைமையி |
| ,, | 10 | றந்த......வந்தனகூறிய | ருகலுமந்த......வந்தன |
| ,, | 11 | வஞ்சிக் குரைத்தன | கூறிய வஞ்சிக் குரியன |
| ,, | 19 | அதனுட் | அகவலுட் |
| ,, | 22 | நேருற்ற | நேரிற்ற |
| 71 | 24 | உடல்......வொண்ணுத | துடல்......வொன்ணுத |
| 72 | 11 | துழுத | வுழுத |
| 73 | 21 | இது | இஃது |
| ,, | 25 | மருந்தே நல்குறு | மருந்தே......நல்குறு |
| ,, | 26 | இது | இஃது |
| 75 | 1 | ஓரடியிற் | ஓரடியில் அருகிக் |
| ,, | 3 | ஆசிடையிட்டும் | ஆயிடையிட்டு |
| ,, | 5 | வுறுப்பினிறுதிக் | வுறுப்பின் |
| 76 | 13 | என்னுங் | எனவும் |
| ,, | 16 | யுருவிக்குப் | யுருவக்குப் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ,, | 26 | வளிதலைஇய | வளித்தலைஇய |
| ,, | 30 | மணியணிப்புனற் | மணியணைப்புன் |
| 77 | 4 | என | எனஇய் |
| 78 | 4-வது வரிக்குக்கீழ், | என்னும் இவ்வஞ்சி விருத்தத்துள் [illegible]ரசைப் பொதுச் சீர்வந்தது.—என்று சேர்த்துக்கொள்க. | |
| ,, | 9 | இவ்வரியை நீக்கிவிடுக. | |
| ,, | 10 | "குர......எனவும் | எனவும், "குர......... எனவும் வரும் |
| ,, | 24 | பாவே | பெயரே |
| ,, | 26 | செய்யுளகத்தும்-என்றவத | செய்புளகத்து'-என்றத |
| 79 | 2 | தாகலின் | னவாகலின் |
| ,, | 25 | வந்தது. | வந்தன. |
| 80 | 3 | ரன்ன | ரன்னவென் |
| ,, | 4 | டுறவாய் நீயே | டுறவா நீமே |
| ,, | 6 | "வரைவிலவே" | 'வரை' |
| ,, | 23 | தாக | துள்ளாக |
| ,, | 29 | நிகழ்விப்பது நியம | நிகழ்விப் பதுநியம |
| 81 | 10 | நின்ற | நின்றன |
| 82 | 4 | நடுநே ரியலா | நடுவு நேரியல் |
| ,, | 7 | வியலா | வியல |
| 84 | 3 | என்றூராகலின், | என்றூராகலின். |
| ,, | 5 | கூறியதனாற் | கூறியவதனாற் |
| 86 | 5 | யிரண்டு | அவ்விரண்டு |
| ,, | 14 | சிறப்பிலாசிரிய | சிறப்புடையாசிரிய |
| ,, | 15 | நேரசைத்தளை | நேர்தளை |
| ,, | 18 | யத்தளை | யநேர்த்தளை |
| ,, | 23 | யத்தளை | யநிரைத்தளை |
| ,, | 27 | யத்தளை | யநிரைத்தளை |
| 87 | 15 | வருஞ்சீர் நேரீற்றுச் | வருஞ்சீரும் நேரீற்றுரிச் |
| 88 | 6 | அசைச்சீர் | அச்சீர் |
| ,, | 10 | வாசிரியச் சீர்க்கென்று | வாசிரியக் கென்றமையான் |
| ,, | 12 | மென்கவக | மென்றக |
| ,, | 21 | முதலசைச்சீர் | முதலசை |
| 89 | 9,10, 11,12 | இவ்வரிகளில் 'எலாம் என்பவைகளை 'எல்லாம்' எனத் திருத்திக் கொள்க. | |
| ,, | 31 | புக்காரே | புக்கார் |
| 93 | 8 | வரினும்.........வரினும் | வருதலும்.........வருதலும் |
| ,, | 13 | கலித்தளை | கலியடி |
| ,, | 16 | வெண்டளையும் என்பதை நீக்கிவிடுக. | |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 96 | 18 | பிறதளை | வெண்பாவினமும் பிறதளை |
| ,, | 24 | சாரார் | சாராரும் |
| 97 | 4 | 'கோவின்மையோ வென்புழி' | 'கோவின்மையோ'வென்புழி, |
| 98 | 6 | மாறும் | மாறும், |
| ,, | 7 | யறையும், | யறையும் |
| ,, | 24 | பட்டதெவமையும் | பட்டதெனவுமமையும், |
| ,, | ,, | இதுவுங்......கலின் | இது.........கலின் |
| 99 | 11 | லரிபறக் | லரிதுபடக் |
| ,, | 21 | முதலிய | முதலாகிய |
| ,, | 27 | சென்றதெனை | சென்றவென |
| 101 | 6 | ஞெருகையாய | ஞெருகையாய் |
| | 7,8,9 | இவ்வரிகளின் கடை மூன்று சீர்களை,<br>......வுண வின் ஞெழியா துமுற்றுஞ்<br>......சுடர்சூ ழொளிமூர்த் தியாகி<br>......பணிந்தார் வினைநீங் கினின்றார்''<br>என்றிவ்வாறு பிரித்துக் கொள்க. | |
| ,, | 20 | முதலாகப் | முதலாக வொன்றுதலைச் சிறந்து |
| 102 | 20 | இவ்வடியை 'திரைக்க ரங்களிற் செழுமலைச் சந்தனத் திரள்களைக் கரைமேல்வைத்' என்றிவ்வாறு பிரித்துக்கொள்க. | |
| ,, | 26 | இவ்வடியை 'துணிகொண் டிலங்கு சுடர்வேலி ஞேடு வருவாணி தென்கொ றுணிவே' என்றிவ்வாறு பிரித்துக் கொள்க. | |
| 103 | 26 | மாறுபொருண்மேன் | மாறு பொருண்மேன் |
| 106 | 2 | அருகிவரும்; என்னை ? | அருகிவரப் பெறும் என்றும் கூறினர் ஆசிரியர் தொல்காப்பியனர் என்பதறிவித்தற்கு வேண்டப்பட்டது, |
| ,, | 3,4 | இவ்விருவரிகளையும்நீக்கிவிடுக | |
| ,, | 19 | தெண் ஞுழிக் | தெண் ஞுங்கின் றுழிக் |
| 107 | 12 | உரிச்சீரடி | உரியடி |
| ,, | 13 | இருசீர் | இருசீரும் |
| ,, | 16 | றைக் | றுற் |
| ,, | 26 | புலவரெனச் | புலவரென்பதனைச் |
| 108 | 1 | சிந்தடி | குறளடி |
| 110 | 4 | வரும்: 'அவையே' | வரும் எனக்கொள்க. 'அவை' |
| 111 | 5 | கன்னே | கண்ணே |
| 113 | 23 | வேந்தன்போ னின்ற | வேந்தன் போனின்ற |
| ,, | 24 | யேங்தெழி லாக | யேங் தெழிலாக |
| 114 | | இப்பக்கத்தில் வரும் 'அறிவா ரறியும்' என்னும் செய்யுளில் அடிதோறும் ஐந்தாஞ் சீரையும் ஒன்பதாம் சீரையும் காய்ச்சீர்களாகவும் ஏனைச்சீர்களை மாச்சீர்களாகவும் பிரித்துக் [illegible]ள்க. | |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 115 | 7 | வதனையென்று | வதனை |
| ,, | 9 | னம் பிறவும் | னம். பிறவும் |
| 116 | 20 | வெள்ளடி | இயற்சீர் வெள்ளடி |
| ,, | 25 | மனைக் கலக்கி | மனைக்கலக்கி |
| 118 | 12 | மொழியசை | மொழியிசை |
| ,, | ,, | வழியிசை | வழியசை |
| ,, | 16 | பெருமைய வணக்கு | பெருமை யணக்கு |
| 119 | 3 | பாவினம் | பா |
| ,, | 18 | விதவகையா | விதிவகையா |
| ,, | 29 | மயக்கியும் | மயக்கி |
| 122 | 11 | 'வாசிரியப்பாவிற்கு' என்பதை | நீக்கிவிடுக |
| ,, | 31 | "விரைப்பைம்பூண்" | "அவிர்பைம்பூண்" |
| 125 | 7 | "ஆசிரிய...... | "அவற்றள், ஆசிரிய |
| 126 | 8 | நலமென்றற் | நயமென்றற் |
| 127 | 25 | †............ | *............† |
| 129 | 2 | 6 கீழ்க்கதுவாய் | 6 மேற்கதுவாய் |
| ,, | 3 | 7 மேற்கதுவாய் | 7 கீழ்க்கதுவாய் |
| ,, | 6 | டை.........வழுக்காது | டையை......வழக்குமின்றழ |
| ,, | 27 | சிறப்புடைத்து. | சிறப்புடைத்து |
| ,, | 28 | கொள்க | கொள்க. |
| 136 | 31 | வல்லின | மெல்லின |
| ,, | 32 | சங்கயாப்பிற் | வந்தவழிக் |
| 137 | 1 | வல்லினவெதுகை | வல்லினவெதுகை, |
| 143 | 8 | பௌவம் வார்முகக் | பௌவ மறமுகக் |
| 144 | 25 | உவை | அவை |
| 145 | 11 | தழங்குரன் | தழங்குகுரன் |
| 146 | 1,2 | * செந்நீர......பொருள். இதன்பாட பேதமாகக் கீழே குறிக்கப்பட்டிருப்பதே சரியான பாடம். அதனையே கொள்க. | |
| 147 | 3 | 'பொருளால் வந்து' என்பதை நீக்கிவிடுக | |
| 151 | 2 | மயிலும் | குயிலும் |
| 155 | 9 | திறவாய் | திறவா |
| ,, | 21 | வந்ததாயினு | வந்ததாயினுமா |
| 159 | 16 | வது வரிக்குக்கீழ்—இணைத்தொடையாமாறு.—என்பதை சேர்த்துக்கொள்க. | |
| ,, | 17 | 2. | 42. |
| ,, | 23 | யெழுத்தோன்றின் | யெழுத்தொன்றின் |
| 161 | 8 | வினவும் | வினவவும் |
| ,, | 18 | பொழிப்புமோனை | பொழிப்புத்தொடை |
| 164 | 20 | பல்லோர் | பல்லே |
| 165 | 7 | கூழை | கூழைத்தொடை |
| 167 | 1 | மேற்கதுவாய் | மேற்[illegible]த்தொடை |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 168 | 20 | கீழ்க்கதுவாய்மோனை | கீழ்க்கதுவாய்த்தொடை |
| 170 | 24 | முற்றுமோனை | முற்றுத்தொடை |
| 171 | 4 | சிறப்பித்ததனுற் | சிறப்பித்தது |
| ,, | 6 | முரணேயாம் | முரணேயாம் என்றற்கும், |
| ,, | 9 | முற்றேற்கும் | மென்றற்கும் |
| ,, | 17 | ரருளிலா | ரருளில |
| 173 | 26 | ஆமாறு | அந்தாதித்தொடையும் ஆமாறு |
| ,, | 27 | கூறுதும் | கூறுப |
| 184 | 10 | ஈண்டு உடுக்குறியிட்ட இடத்தில் கீழ் உடுக்குறியிட்டுக் காட்டிய பாடத்தைச் சேர்த்துக்கொள்க. | |
| ,, | 16 | இடையிட்டந்தாதி | இடையிட்டந்தாதி, இடையிட்டடியந்தாதி |
| ,, | 23 | சந்தனக் | வாசஞ் |
| ,, | 24 | குழம்பு | சந்தனக்குழம்பு |
| 185 | 15 | இயின்றித் | யின்றித் |
| 189 | 6 | பொழிப்பு | கூழை |
| 193 | 13 | பெறுபவோ | பெறுபவே |
| 197 | 23 | கண்டலவந் | கண்டலந் |
| 200 | 20 | னும், | ன், |
| ,, | 20,21 | 'கொள்ளுமோ வெனினும்' என்பதை நீக்கி விடுக. | |
| 203 | 1 | பெருங்குழிசி மன்றமறுக | பெருமன்ற மறுக |
| 206 | 5 | மாலகாப்ப | மால்காப்ப |
| ,, | 24 | வேரரும்ப | வேரரும்பும் |
| 208 | 4 | வஞ்சியென | வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சியென |
| 227 | 26 | 'நா—லோரடியாய்' | —'நாலோரடியாய்' |
| 268 | 9 | முகுகுயிர்த்து | முருகுயிர்த்து |
| 273 | 19 | நலத்வை | நலத்தவை |
| 275 | 29 | வானவனுந் | மாயவனும் |
| 277 | 23 | வமைதித்தய் | வமைதித்தாய் |
| 278 | 10 | பெண்ணெரு | பெண்ணொரு |
| 279 | 27 | வென விவ்வாற் | வெனவும் இவ்வாற் |
| 289 | 1 | வுயிக்கர | வுயிர்க்கர |
| 296 | 21 | 23, 24, 25 இவ்வரிகளில் நீ என்னும் அசையைத் தனியாகக் கொள்ளாது அதன் முன்னுள்ள சீரோடு சேர்த்துக்கொள்க. | |
| 331 | 2 | சண்டயா | சடையா |
| 346 | 8 | மாறற்குச | மாறற்குச் |
| 349 | 2 | பெரிதருளி | பெரிதருளித் |
| | | 103, 105, 107, 109, 111 இப்பக்கங்களின் தலைப்பில் 'தளையோத்து' என்றிருப்பதை 'அடியோத்து' எனத் திருத்திக்கொள்க. | |

# பாட பேதங்கள்.



| பக்கம். | வரி. | வேறு பாடம். |
|---|---|---|
| 12 | 29 | கருத்தே செலுத்தலென் றிரைங் கிளவியு |
| ,, | 30 | நெறிப்பட வருவது பனுவற் றுறையே" |
| ,, | 31 | என்றோதப்பட்டன. |
| 72 | 7 | "அலரிநாறு துவர்வா யமர்ந்த நோக்கி |
| ,, | 17 | ............கருநீல மதுவுண்ணவும் |
| ,, | 25,26 | செழுநீர் நல்வய லூரன் |
| 83 | 14 | ஏழாவன:—வெண்டளை இரண்டும், ஆசிரியத்தளை இரண்டும், கலித்தளை ஒன்றும் |
| ,, | 15 | வஞ்சித்தளை இரண்டும் என. |
| 90 | 16 | கிளவி வேண்டியது விளக்கும்' என்பதாகலின். "தேமா புளிமா.........நாண்மலரே." "தண்ணிழறண்பூ...ஒண்டளைக்கே." இவற்றை விரித்துரைத்துக்கொள்க. பிறரும், |
| 92 | 16 | என்றார் மயேச்சுவரர். "தண்சீர்......... ஒண்ணுதலே" "திருமழை............உதாரணமே" என வரும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க. |
| 95 | 24 | மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.<br>"கருவிப் புட்டிலின் கண்டமும்<br>மருவிப் பக்கரைப் பொழ்களும்<br>விரவிப் போர்க்கள வாயெலாம்<br>புரவித் துண்டங்கள் போர்த்தவே."<br>இவ்வஞ்சி விருத்தத்துள் ஆசிரியத் தளையும் வெண்டளையும் வந்தன. பிறபாவினங்களுள்ளும் தளைமயங்குமாறு வந்த வழிக் கண்டுகொள்க. |
| 97 | 13 | பிறவுமிவ்வாறு வழுவி வந்தன கண்டுகொள்க. "மாஞ்சீர்......... பூங்கொடியே' என்னும் இதனை விரித்துரைத்துக் கொள்க. |
| 99 | 3,4 | 'குறள்சிந் தளவு நெடில்கழி நெடிலென்றுங் |
| ,, | | கனைவகை மரபின வடிவகை தானே' |
| 106 | 7,8 | "நாலெழுத் தாதி யாக வாறெழுத் |
| ,, | | தேறிய நிலத்தே குறளடி யென்ப' |
| ,, | 27 | தளவிரண்டு மொன்ற நெடில்கழியு மொண்பாற் |
| 107 | 3 | "அளவியற்பா வான்றசீ ரைந்தெழுத்திற் பல்கா |

| பக்கம். | வரி. | வேறு பாடம். |
|---|---|---|
| 107 | 15,16 | பிறவாற்றுற்கூறப் பலவுமாம். "குறளிருசீரடி.........கழிநெடிலே" இதனை விரித்துரைத்துக்கொள்க. |
| 108 | 18 | தாழையோடு முருகுயிர்ப்ப |
| ,, | 20 | கண்டலோடு கடலுந்தித்துத் |
| 109 | 4 | "பாலத்தஞ்செல விவளொடு படுமாயி |
| ,, | 21 | "அகவ வென்ப தாசிரியப் பெயரே" |
| ,, | 23,24, 25,26 | ஞது, 'கலியொடு வெண்பா வகவல்' என்று தலை தடுமாற்றந் தந்து புணர்ந்துரைத்ததனுல் கலியுள் அம்போதரங்க உறுப்புச் சில இருசீரடியாலும், முச்சீரடியாலும் வரும்; அராக உறுப்பு நாற்சீரடியின் மிக்கு வரும் எனக்கொள்க. அவை போக்கிக் கலிப்பாச் |
| 115 | 15,16 | வான் எடுத்துக் கோடலின், இச்சூத்திரம் ஆசிரியப்பாவினுள் அல்லாப் பாவினடி மயங்குமாறுணர்த்துதல் நுதலிற்று. |
| | 26 | "வஞ்சி விரவ லாசிரிய முரித்தே |
| 119 | 25 | ............ஆசிரியவடி விரவவும் |
| | 28 | .........வெள்ளடி அருகிவரவும் பெறும்; |
| 120 | 19,20 | இது குறளடியுஞ் சிந்தடியு மயங்கி வந்த வஞ்சிப்பா. 'வஞ்சியுளகவல் மயங்கவும் பெறும்' என்ஞது 'மயங்கினும் வரையார்' என்று மற்றொரு வாய்பாட்டாற் சொல்லவேண்டியதென்னை? வஞ்சிப்பாவினுள் ஆசிரிய மயங்கி வருவது அகத்திணையல்லாத வழியே என்ப ஒரு சாராசிரியர் என்றற்கு வேண்டப்பட்டது. என்னை? |
| 121 | 13 | என்றார் நாலடி நாற்பதுடையா ரெனக்கொள்க. 'இயற்சீர் வெள்ளடி..............முறைமையினே' இதனை விரித்துரைத்துக்கொள்க. |
| 122 | 24 | ...............முடியெல்லாந் தத்துந்தம் |
| 123 | 16 | "படைப்போர் குறிப்பினை நீக்கிப் பெருமை |
| 124 | 21 | தீர்பில வெள்ளைக் கடித்தொகை தானே" |
| 125 | 25 | என்றார் பரிமாணனார். 'வெள்ளைக் கிரண்டடி.........காரிகையே' 'அறத்தாறி துவென.........பூங்கொடியே' என்னும் யாப்பருங்கலப் புறனடைகளைப் பதமெகிழ்த் துரைத்துக் கொள்க. |
| 126 | 15 | யடுத்து நடப்பி னடியாம்-வடுத்தீர்ந்த |
| 127 | 15 | "தொடையெனப் படுவ நடைவகை தெரியின் |
| 128 | 11 | ...........பாகுபாட்டைச் சொல்லு மென்ற |
| 131 | 3 | ..............யம்பலைத் தமர்ந்த |
| 133 | 19 | ......................தான் செல்லும் |
| 139 | 22 | இறைக்காச்சா னேசமருண் மாலையு மாலை |
| 141 | 1-4 | "மாக்கொடி யானையு மௌவற் பந்தரும் கார்க்கொடி முல்லையுங் கலந்து மல்லிகைப் |

| பக்கம். | வரி. | வேறு பாடம். |
| --- | --- | --- |
| | | பூக்கொடிப் பொதும்பரும் கானனூழலுந் |
| | | தூக்கொடி கமழ்ந்துதான் றுறக்க மொக்குமே" |
| 143 | 20 | பாவகை நான்காம் பகருங் காலே" |
| " | 25 | அஃதொழித் தொன்றி னைதுகை யாகும் (இது தொல்காப் பிய அச்சுப்பிரதியின் பாடம்) |
| 147 | 20 | இது நத்தத்தனார் கூறியது. |
| " | 22 | இது பல்காயனார் கூறியது. |
| 149 | 15 | இப்பாட்டுக் கையனார் காட்டிய தெனக்கொள்க. |
| 153 | 17 | திருநுதற் பொறித்த திலகமு மணங்கே". |
| 155 | 4,5,6, | "பரவை மாக்கடற் றொகுதிரை வரவும் |
| | | பண்டைச் செய்தி யின்றிவண் வரவும் |
| | | பகற்பின் முட்டா திரவினது வரவும் |
| 166 | 11 | படிய பாவை மாயோ ளொண்கண் |
| 167 | 25 | தெண்கடற் சேர்ப்பனை......... .. |
| 169 | 27 | "கருங்கண் வெள்வளை வார்கோற் சேயிழை |
| 170 | 7 | இன்னுமியாமின் னுயிர்தீ ரேமுளேம்" |
| 174 | 1 | ............சொல்லி யுலப்பிக்கலாகா. |
| 181 | 24 | .......... ......அலகிருக்கையா |
| 1·2 | 26 | 'அடலமர் வேனோக்கி' 'அடல்வே லமர்நோக்கி' என்பவும் [பாடம். |
| 186 | 9 | வகைமுடி வில்வினை வாடுக வெனவே |
| 186 | 22 | பொழின்மலர்ப் பூம்புன்னை |
| 187 | 6 | "மேனமக் கருளும் வியனருங் கலமே |
| 194 | 11 | " அ இ உ எ ஒ என்னு மைந்தெழுத்தல்லாத |
| 195 | 10 | இவ்வரியிலுள்ள 'விசற்பம்' என்பது சில ஏடுகளிவில்லை. |

——•——

-i-

# YÁPPARUNGALAM

AN

ANCIENT AND COMPREHENSIVE WORK ON TAMIL PROSODY

BY

AMRITASAKARANAR

WITH

AN ELABORATE COMMENTARY

EDITED BY

RÁO BAHADUR S. BAVÁNANDAM PILLAI,

F. R. H. S. (Lond.) & M. R. A. S. (Lond.)

MEMBER OF THE TAMIL BOARD OF STUDIES AND OF THE TAMIL COMPOSITION COMMITTEE, MADRAS UNIVERSITY. MEMBER OF THE TEXT BOOK COMMITTEE OF THE MADRAS EDUCATIONAL DEPARTMENT AND OF THE TAMIL COMMITTEE OF THE MADRAS SCHOOL BOOK & LITERATURE SOCIETY.

[Vol. II.]

PUBLISHED BY

LONGMANS GREEN & Co.,

167, MOUNT ROAD, MADRAS.

BOMBAY AND CALCUTTA

1917

௨௨௨

அமிர்தசாகரனார்

இயற்றிய

# யாப்பருங்கலம்

மூலம்

(பழைய விருத்தியுரையுடன்)

ராவ் பஹதூர் - ச. பவானந்தம் பிள்ளை அவர்கள்
எப். ஆர். எச். எஸ். (லண்டன்.) எம். ஆர். ஏ. எஸ். (லண்டன்.)
[சென்னை சர்வகலாசாலையின் தமிழ்க் கல்விச்சபை, தமிழ் வியாச சபை
இவற்றின் அங்கத்தினர். சென்னை 'கல்வி' இலாகாவைச்
சேர்ந்த 'டெக்ஸ்ட்புக் கமிட்டி' அங்கத்தினர். சென்னை
'ஸ்கூல்புக் அண்ட் லிட்டரேச்சர் சொஸைட்டி'
தமிழ்க் கமிட்டி அங்கத்தினர்]
பதிப்பித்தது.

[பகுதி-2.]

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு."—திருக்குறள்.

சென்னை :
1917

# முன்னுரை

"ஏரண முருவம் யோக மிசைகணக் கிரதஞ்சாலந்
தாரண மறமே சந்தந் தம்பநீர் நிலமுலோகம்
மாரணம் பொருளென் றின்ன மானநூல் யாவும்வாரி
வாரணங் கொண்ட தந்தோ வழிவழிப் பெயருமாள"

என்று நாம் ஏங்கிப் புலம்புமாறு, எத்தனையோ அருந்தமிழ் நூல்கள் கருங்கடலுக் கிரையாகியும் கனலுக்கிரையாகியும் அழிந்து விட்டன. எஞ்சி யுள்ளன சிலவும் ஆதரிப்பாரின்றிக் கறையான் வாய்ப்பட்டுக் கரைந்து வருகின்றன. அங்ஙனம் கரையும் நூல்களைக் கரைந்தொழிய விடாமல், அச்சிட்டு நிலைநிறுத்த வேண்டும் என்ற பேரவாக் கொண்டு, சொல்லற் கரிய பெருமை வாய்ந்தும் காலகதியாற் செல்லுக்கிரையாகி வாராநின்ற இவ்வியாப்பருங்கல விருத்தியை அச்சிடலாயினோமென்பது இந்நூலின் முதற்பகுதியின் கண் உள்ள பதிப்புரையில் கூறப்பட்டது. இப்பகுதியோடு இந்நூல் முற்றுப் பெறுகின்றமையின், பெயரளவில் நின்றுவிடும் நிலையிலிருந்த ஒரு நூல், ஏதோ ஒருவகையில் உருப்பெற்று நிலைத்து விட்டதென்று அறிந்து உள்ளம் உவப்பெய்துகின்றது.

இனி, இந்நூல் முதற்பகுதியின் பதிப்புரையில் இந்நூலாசிரியர் பெயர் முதலியன ஒருவாறு ஆராயப்பட்டன. ஆதலால், இவ்விரண்டாம் பகுதியின் முன்னுரையாகக் கூறக் கிடப்பன இந்நூலின் காலம் முதலிய வைவே.

இவ்வியாப்பருங்கலத்தின் இறுதிச் சூத்திரம் வீரசோழிய உரையில் எடுத்தாளப்பட்டுள்ளது என்பது, முன்னமே குறிக்கப்பட்டது. ராஜேந்திரன் என்று பெயர் வழங்கிய வீரசோழன் என்னும் அரசன் காலத்தில் அவன்பெயரால் வீரசோழியம் என்னும் நூல் இயற்றப்பெற்றதென்பது அந்நூலினின்றே அறியக்கிடப்பதொன்று. அவ் வீரசோழன் கி. பி. 1064 முதல் 1070 வரை அரசாண்டவனென்று சரித்திர ஆராய்ச்சியால் தெரியவருகிறது. ஆகவே வீரசோழியம் இயற்றப்பட்ட காலமும் அக்காலமே யாதல் வேண்டும். அதன் உரையில் யாப்பருங்கலம் மேற்கோளாகக் காட்டப்படுவதால், யாப்பருங்கலத்தின் காலம் வீரசோழியத்தின் காலத்திற்கு முற்பட்டதாகல் வேண்டுமேயன்றி பிற்பட்டதாகாது. அதாவது, பதினோராவது நூற்றாண்டின் முற்பகுதியே யாப்பருங்கலத்தின் காலத்திற்குக் கீழ்வரம்பாகும்.

இனி, இவ்விருத்தியுரையுள், எட்டாரைச் சக்கரத்திற்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ள 'பருவரைசிவந்து' (பக்கம்-495) என்னும் பாட்டு 'ஆராழி பாய்ந்த விடந்தோ றழகிதாப்—பாராளும் பல்லவமல்லன்' (பக்கம்-496) என்று அமையப் பாடியதாகும். ஆகவே, பல்லவமல்லனைக் குறித்துப் பாடிய செய்யுளை உதாரணமாகக் காட்டிய உரையாசிரியர், பல்வமல்லனுக்குப் பிற்பட்டவரே யென்பது கூறுமலே அமையும். பல்லவமல்லன் காலம் எட்டாவது நூற்றாண்டின் முற்பகுதியாயிருக்கவேண்டு மென்பது சாஸன பரிசோதகர் துணிபு*. ஆகவே, விருத்தியுரைகாரர் எட்டாவது நூற்றாண்டுக்குப் பிற்பட்டவராவார். இனி, யாப்பருங்கலக் காரிகை—பத்தாவது செய்யுள் உரையில், "வெண்பாவினோடும், ஆசிரியத்தினோடும் வந்த மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா யாப்பருங்கல விருத்தியுள் 'காமர் கடும்புனல்' என்னும் பழம் பாட்டிற் கண்டு கொள்க" என்று குணசாகரர் கூறியிருப்பது கொண்டு, யாப்பருங்கலக் காரிகையுரையும் யாப்பருங்கல விருத்தியும் சமகாலத்தினவாகவேனும், விருத்தி முற்பட்டதாகவேனும் இருத்தல் வேண்டுமென்று துணியலாகும். [குணசாகரரும் அமிர்தசாகரனாரும்] சமகாலத்தினராயிருத்தல் வேண்டுமென்பது பண்டிதர் பலர் கொள்கை. இக்கொள்கை நிலையுறுமாயின், காரிகையுரையும் விருத்தியுரையும் ஏறக்குறைய சமகாலத்தின வாகல் வேண்டும்; என்னை? அமிர்தசாகரனார் இயற்றிய யாப்பருங்கலத்துக்கு விருத்தியுரை கண்டவர், அமிர்தசாகரனாருக்கு முற்பட்ட காலத்தவராதல் இயலாதாகலின். விருத்தியுரையும் காரிகையுரையும் சமகாலத்தினவாயின், காரிகையுரையும் காரிகையும் சமகாலத்தின என்பது கொண்டு விருத்தியுரையும் யாப்பருங்கலக் காரிகையும் சமகாலத்தின வென்பது துணியப்படும். யாப்பருங்கலக் காரிகையாசிரியரே யாப்பருங்கல ஆசிரியர் என்பது முதற்பகுதியின் பதிப்புரையிற் பெறப்பட்டது. ஆகவே இந்நூலும் இதன் விருத்தியுரையும் ஒரேகாலத்தினவாகல் வேண்டும். விருத்தியுரைகாரர், பல்லவமல்லன் காலமாகிய எட்டாவது நூற்றாண்டுக்குப் பிற்பட்டவர் என்பது முன்னர்க் காட்டப்பெற்றது. ஆதலால், இந்நூல் எட்டாவது நூற்றாண்டுக்குப் பிற்பட்டதாக வேண்டும். அதாவது, இந்நூலின் காலத்திற்கு எட்டாவது நூற்றாண்டு மேல் வரம்பாகும். கீழ்வரம்பு பதினோராவது நூற்றாண்

* Vide "The Dynasties of the Kanarese districts of the Bombay Presidency from the earliest Historical Times to the Musalman Conquest of A. D. 1318" by Jhon Faithfull Fleet, Ph. D., C. I. E., of the Indian Civil Service, embodied in the Gazetteer of the Bombay Presidency. Vol. I. Part II. (History of the Konkan Dakhan and Southern Maratha Country), page 323.

* கொங்கண, தக்ஷண, தென்மராட்டிய தேச சரித்திரமடங்கிய, 'பம்பாய் கஜட்டீர்' முதற்பிரிவு இரண்டாவது பகுதியில (பக்கம்-323) ஜான் பெயித்புல் ப்ளீட், பி. எச். டி., ஸி. ஐ. இ. எனனும் ஆங்கில துரைமகனார் எழுதியுள்ள கன்னட வமசாவளியிற் காண்க.

டென்பது முன்னர்க் கூறப்பட்டது. ஆகவே, இந்நூலும் உரையும் எட்டாவது நூற்றாண்டுக்கும் பதினோராவது நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் இயற்றப் பெற்றிருத்தல்வேண்டும். அதாவது, இந்நாலின் காலம் சற்றேறக்குறைய பத்தாவது நூற்றாண்டென்பது ஒருவாறு துணியத்தக்கது.

ஆயினும், தமிழறிஞர்கள் இந்நூலின் காலத்தைத் திட்டமாயறிய முற்பட்டு முயல்வார்களாயின், அவர்கள் முயற்சி பயன்படுமென்பதில் ஐயமில்லை.

இனி, இவ்விருத்தியுரையுள் பேராசிரியர் சூத்திரங்கள் பல மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. இப் பேராசிரியர் 'பிறை நெடுமுடிக் கறைமிடற் றரனார் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்' எனவும் 'நீர்மலிந்த வார்சடையோன் பேர் மகிழ்ந்த பேராசிரியர்' எனவும் இன்னும் பலவாறாகவும் இவ்விருத்தியுரைகாரரால் சிறப்பித்துக் கூறப்படுகிறார். இங்ஙனம் வரும் அடைமொழித் தொடர்களெல்லாம் சிவபெருமானைக் குறிப்பனவாகவுள்ளன. யாம் அறிந்த அளவில், இந்நூலைத் தவிர்த்துப் பிறநூல்களில் பேராசிரியர் எனக் குறிக்கப்படுவோர் இருவர் உளர். ஒருவர் இளம்பூரணர் முதலிய உரையாசிரியர்களாற் சுட்டப்படும் ஆத்திரையன் பேராசிரியன் என்பார். மற்றவர் தொல்காப்பியத்திற்கு உரையியற்றிய பேராசிரியர். விருத்தியுரையுட் கூறப்பட்ட பேராசிரியர் இவ்விருவருள் ஒருவரேயோ, அன்றிப் பிறர் ஒருவரோ என்பது ஆராயத்தக்கது. தொல்காப்பியம் செய்யுளியலுரையால் தெரியக் கிடக்கும் பேராசிரியர் கொள்கைகள் சிலவற்றோடு, இவ்விருத்தியுரையிற் கண்ட பேராசிரியர் சூத்திரங்கள் மாறுபடுகின்றன. அதுகொண்டு ஈண்டுச் சுட்டப்பட்டவர், தொல்காப்பியத்திற் குரையியற்றிய பேராசிரியர் அல்லரென்பது துணியப்படும்.

இனி, 'சென்னை ராஜாங்கத்தார் உத்தரவின்மேற் பிரசுரிக்கப்பட்ட தமிழ் ஏட்டுப்பிரதிகளைப் பற்றிய ஆராய்ச்சிப் பத்திரத்தினின்று' எடுக்கப்பட்டு இந்நூலின் முதற்பகுதி முகத்தே சேர்க்கப்பட்டுள்ள யாப்பருங்கல விருத்தியைப் பற்றிய ஆங்கில வியாசத்தில், இந்நூலிற் சுட்டப்படும் பேராசிரியர், கடைச்சங்கப் புலவரும், களவியல் ஆசிரியருமான இறையனார் என்பவராக வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. அக்கூற்றுக்கு ஆதாரம் அவ்வியாசத்தையன்றி வேறு காணுவது அரிது. அதுகிடக்க. இவ்விருத்தியுரையுள் பேராசிரியர் என வருமிடங்களிற் சில ஏடுகளின் பாடம் 'மயேச்சுரர்' என்று காணப்படுகின்றமையின், அப்பேராசிரியர்தம் இயற்பெயர் மயேச்சுரர் என்று எண்ண இடமுண்டு. மயேச்சுரர் என்பது சிவபெருமான் பெயர்களுள் ஒன்றாதலும், பேராசிரியருக்குக் கொடுக்கப்பட்டுள்ள அடைமொழித் தொடர்களெல்லாம் சிவபெருமான் பெயரையே குறிப்பனவதாலும், இக்கூற்றை வலியுறுத்தும். அன்றியும், மயேச்சுரரால் யாப்பிலக்கணம் ஒன்று இயற்றப் பட்டுள்ளதென்பது, யாப்பருங்கலக் காரிகைப் பாயிரவுரையில் 'மயேச்சுரர் யாப்பே

போல உதாரண மெடுத்தோதி' என்று குணசாகரர் கூறியிருப்பது கொண்டு அறியலாகும். யாப்பருங்கலக் காரிகையுரையில் மயேச்சுரர் சூத்திரங்களாகக் காட்டப்பட்டுள்ளவற்றுட் சில, இவ்விருத்தி யுரைகாரரால் பேராசிரியர் சூத்திரங்களெனக் காட்டப்படுகின்றன. விருத்தி யுரைகாரர் பேராசிரியர் எனச் சிறப்பித்துக்கூறுவது மயேச்சுரர் என்னும் ஆசிரியரையே என்று நாட்டுவதற்கு இஃதொன்றே போதிய சான்றாகுமன்றோ ? இதன் உண்மை எவ்வாறிருப்பினும், இப்பேராசிரியர் விருத்தியுரைகாரரால் பெரிதும் மதிக்கப்பட்டவரென்பதில் ஐயமில்லை. இது நிற்க.

இவ்விருத்தியுரையில் எடுத்தாளப்பட்ட நூற்கள், நூலாசிரியர்கள் முதலிய விவரக் குறிப்பு, முதற்பகுதி முகத்தே சேர்க்கப்பட்டுள்ள ஆங்கில வியாசத்திற் காணலாகும்.

சங்க காலத்து வழங்கிய யாப்பு வகைகளையும், பிற்காலத்து அவை யடைந்த மாறுதல்களையும் ஆராய்ந்தறிய அவாவும் தமிழறிஞர்கள், இந்நூலையும் தொல்காப்பியம் செய்யுளியலையும் ஒருங்காராய்தல் சாலப் பயன்றருவதொன்றாம். நிற்க.

இந்நூல் இனிது முடியுமாறு தோன்றாத் துணையாய் உடனிருந் துதவிய எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளை மனமொழி மெய்களால் வழிபடுகின்றனம்.

'குணநாடிக் குற்றமு நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்'



Ro 11-66
1104-22167



# ஒழிபியல்

[தனிச்சொல் நிற்குமிடம்.]

94. *அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொலஃ*
*திறுதியும் வஞ்சியு ளியலு மென்ப.*

இஃதென்னுதலிற்றோ வெனின், மேற்சொல்லப்பட்ட பாக்கட்குத் தனிச்சொல் நிற்குமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள்: அடிமுதற்கட் செய்யுளகத்துப் பொருளைத் தழீஇத் தனியே நிற்பது தனிச்சொல் எனப்படும்; அது வஞ்சிப் பாவின் ஈற்றின்கண்ணும் வரப்பெறும் என்ப புலவர் என்றவாறு.

'இறுதியும் வஞ்சியு ளியலுமென்ப' என்னும் உம்மையால் தனிச்சொல் இடையும் வஞ்சியுள் நிற்கப்பெறும் எனக்கொள்க. அல்லதூஉம் பிறரு மிவ்வாறே சொன்னார்; என்னை?

"உறுப்பிற் குறைந்தவும் பாக்கண் மயங்கியும்
மறுக்கப் படாத மரபின வாகியும்
எழுவா யிடமா யடிப்பொரு ளெல்லாம்
தழுவ நடப்பது தான்றனிச் சொல்லே"

"வஞ்சி மருங்கி னிறுதியு மாமெனக்
கண்டனர் மாதோ கடனறிந் தோரே"

என்றார் காக்கைபாடினியார்.

"தனியே,
யடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொலஃ
திறுதியும் வஞ்சியு ணடக்கு மென்ப"

என்றார் அவிநயனார்.

தனிச்சொல்லைக் கூன் என்று வழங்குவாருமுளர் எனக்கொள்க; என்னை?

"அடியினிற் பொருளைத் தானினி து கொண்டு
முடிய நிற்பது கூனென மொழிப"
"வஞ்சி யிறுதியு மாகு மதுவே"
"அசைகூ னாகு மென்மனார் புலவர்"

என்றார் பல்காயனா ராகலானும்,

"தானே யடிமுதற் பொருள்பெற வருவது
கூனென மொழிப குறியுணர்ந் தோரே"
"வஞ்சி யிறுதியும் வரையா ரென்ப"

என்றார் நத்தத்தனா ராகலானும் என்க. வரலாறு:

"உதுக்காண், சுரந்தானா வண்கைச் *சுவானமாப் பூதன்
பரந்தானாப் பல்புகழ் பாடி—யிரந்தார்மாட்
டின்மை யகல்வது போல விருணீங்க
மின்னு மளித்தேர் மழை"

என இவ்வெண்பா அடிமுதற்கண் 'உதுக்காண்' எனத் தனிச்சொல் வந்தவாறு கண்டுகொள்க.

"அவரே, கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே
யானே, தோடா ரெல்வளை ஞெகிழ வேங்கிப்
பாடமை சேக்கையுட் படர்கூர்ந் திசினே
அன்ன ளளிய ளென்னாது மாமழை
இன்னும் †பெய்ய முழங்கி
மின்னுந் தோழியென் னின்னுயிர் குறித்தே" (குறுந்-216.)

என இவ்வாசிரியத்துள் 'அவரே' எனவும், 'யானே' எனவும் கூன் வந்தவாறு கண்டுகொள்க.

"உலகினுட், பெருந்தகையார் பெருந்தகைமை பிறழாவே பிறழினும்
இருந்தகைய விருவரைமே லெரிபோலச் சுடர்விடுமே
சிறுதகையார் சிறுதகைமை ‡சிறப்பென்றும் பிறழ்வின்றி
யுறுதகைமை யுலகிற்கோ ரொப்பாகித் தோன்றாவே"

* 'சுவணமாப் பூதன்' என்பதும் பாடம்.
† 'பெய்யும் முழக்கும்' என்பதும் பாடம்.
‡ 'சிறப்பென்னும்' என்பதும் பாடம்.

இக்கலியடிமுதற்கண் 'உலகினுள்' எனத் தனிச்சொல் வந்த வாறு கண்டுகொள்க.

"உலகே, முற்கொடுத்தார் பிற்கொளவும்
பிற்கொடுத்தார் முற்கொளவும்
உறுதிவழி *யொழுகுமென்ப
அதனால்,
நற்றிற †நாடுத னன்மை
பற்றற யாவையும் பரிவறத் துறந்தே"

என இவ்வஞ்சிப்பாவி னடிமுதற்கண் 'உலகே' எனத் தனிச்சொல் வந்தவாறு கண்டுகொள்க.

"தாழிரும் பிணர்த்தடக்கை"‡ என்னும் வஞ்சிப்பாட்டினுள் அடிமுதற்கண் "வென்றியான்" எனவும், "அதற்கொண்டும்" எனவும் சீர் கூனாய் வந்தன.

"மாவழங்கலின் மயக்குற்றன, வழி" என வஞ்சியினிறுதி தனிச்சொல் வந்தவாறு கண்டுகொள்க. "கலங்கழாலிற்—றுறை—கலக்கானாதே" என வஞ்சியடியின் நடு 'துறை' எனத் தனிச்சொல் வந்தவாறு.

"காமர் கடும்புனல்"§ என்னும் குறிஞ்சிக் கலியுள், "சிறுகுடியீரே சிறுகுடி யீரே" என ஓரடியாற் றனிச்சொல் வந்தவாறு; ஓரடியாலுங் கலிக்கண் தனிச்சொல் வரப்பெறுமாகலின். என்னை?

"வெண்சீர் வரைவின்றிச் சென்று விரவினும்
தன்பான் மிகுதியின் வருவன வெல்லாம்
வஞ்சி யுரிச்சீர் விரவினும் வெண்பா
வருகுந் தனிச்சொ லசைச்சீ ரடியே"

என்றாராகலின்.

'அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்
இறுதியும் வஞ்சியு ளியலு மென்ப'

* 'ஒழுகுமே' என்பதும் பாடம்.
† 'நாடுக நன்மை' என்பதும் பாடம்.
‡ இச்செய்யுளை 348-ஆம் பக்கத்திற் காண்க.
§ இச்செய்யுளை 320-ஆம் பக்கத்திற் காண்க.

வருதல் ஒருவிய பொருளைப் பயக்கும். 'அஃது' என்று மிகுத்துச் சொல்லவேண்டிய தென்னையோ வெனின், நான்கு பாவின் அடிமுதற்கண்ணும் ஓர் கூன்வரப்பெறும் என்பாராயினும், வஞ்சியடியின் முதற்கண் அசை கூன் வருவதுமே, உகர ஈறாகிய நேரீற்றியற்சீர் கூன் வருவதுஞ் சிறப்புடைய; வஞ்சியடியின் இடையும் இறுதியும் அசை கூன் வருவதன்றிச் சீர் கூன்வாராது; ஆண்டும் உகரவீறாகிய நேரீற்றியற்சீர் அருகிக் கூன் வரவும் பெறும்; அச்சீர் அல்லாப்பாவின் அடிமுதற்கண் அருகியல்லது கூன் வாராது; கொச்சகக் கலியுள் ஓரடி கூன் வருமாயினுஞ் சிறப்பில்லை; வெண்பா ஆசிரியம் கலி என்னும் இவற்றின் அடியுள் இடையும் இறுதியுங் கூன் வரப் பெறாதென்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

வரலாறு: "அடி, யதர்சேர்தலி னகஞ்சிவந்தன" எனவும், "மா, வெறித்தானிடங் காட்ட" எனவும் வஞ்சியடியின் முதற்கண் 'அடி' எனவும், 'மா' எனவும் அசைகூன் வந்தவாறு. "வேந்து, வேரல் வாங்கிப் பிடித்தருத்தலின்" எனவும், "தெருவு, தேரோடத் தேய்ந் தகன்றன" எனவும் வஞ்சியடியின் முதற்கண் உகரவீறாகிய நேரீற்றியற்சீர் கூன் வந்தவாறு. வஞ்சியடியிறுதி அசை கூன் வந்தன மேற்காட்டின வெனக்கொள்க.

"வடாஅது, பனிபடு நெடுவரை வடக்குந் தெனாஅ
துருகெழு குமரியின் றெற்குங் குணாஅது
கரைபொரு தொடுகடற் குணக்குங் குடாஅது
தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்குங் கீழது
முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டி னீர்நில
வெருவப்பின் கீழு மேல" (புறம்-6.)

என்னு மாசிரியத்துள், அடிமுதற்கண் 'வடாஅது' என வுகரவீறாய நேரீற்றியற்சீர்க்கூன் அருகிவந்தது. பிறவற்றுள்ளும் வந்தவழிக் கண்டுகொள்க. வஞ்சியல்லாப் பாக்கள் அடி இடையும் இறுதியும் கூன் வாராதவாறு மேற்காட்டியவற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் கண்டு கொள்க.

"அடிமுதற்க ணென்கிற்குஞ் சீர்கூன் மாகும்
இடைகடையும் வஞ்சிக் கசை"

என்றாரு முளர். (௧)

[புறனடை.]

95. நிரனிறை முதலிய பொருள்கோட் பகுதியும்
அறுவகைப் பட்ட சொல்லின் விகாரமும்
எழுத்த லிசையை யசைபெறுத் தியற்றலும்
வழக்கா மரபின் வகையுளி சேர்த்தலும்
அம்மை முதலா வாயிரு நான்மையும்
வண்ணமும் பிறவும் மரபுளி வழாமைத்
திண்ணிதி னடத்த *தெள்ளியோர் கடனே.

இஃதென்னுதலிற்றோ வெனின், மேற்சொல்லப்பட்ட செய்யுட் கட்கெல்லாம் எய்தியதோர் புறனடையிலக்கணம் உணர்த்துதல் நுத

இதன்பொருள்: நிரனிறை முதலாகிய பொருள்கோளும், அறுவகைப்பட்ட சொல்லினது விகாரமும், எழுத்தல்லாத கிளவியை யசைபெறுத் தியற்றலும், வகையுளி சேர்த்தலும், அம்மைமுதலாகிய எட்டு யாப்பலங்காரமும், வண்ணங்களும், மற்றொழிந்தனவும் வரலாற்று முறைமையோடும் பொருந்த நடாத்துதல் புலவர் கடன், என்றவாறு.

நிரனிறை முதலாகிய பொருள்கோட் பகுதியாவன: நிரனிறையும், சுண்ணமொழிமாற்றும், அடிமறிமொழிமாற்றும், அடிமொழி மாற்றும், பூட்டுவிற் பொருள்கோளும், புனல்யாற்றுப் பொருள்கோளும், அளைமறிபாப்புப் பொருள்கோளும், தாப்பிசைப் பொருள்கோளும், கொண்டுகூட்டுப் பொருள்கோளும் என விவ்வொன்பதுமெனக்கொள்க.

அவற்றுள், நிரனிறைப்பொருள்கோள் இரண்டு வகைப்படும்: பெயர் நிரனிறையும், வினை நிரனிறையும் என.

அவற்றுட் பெயர் நிரனிறை வருமாறு:

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவளம் முத்த முகம்வாய் முறுவல்

* 'தெளிந்திசினோர் கடனே' என்பதும் பாடம்.

பிடிபிணை மஞ்ஞை நடைநோக்கே சாயல்
வடிவினளே வஞ்சி மகள்''

எனவும்,

"பொறையன் செழியன் பூந்தார் வளவன்
கொல்லி கொற்கை நல்லிசைக் குடந்தை
பாவை முத்த மாயிதழ்க் குவளை
மாயோண் முறுவன் மழைப்பெருங் கண்ணே'

எனவும்,

"கடைசெப்பும் வேயுங் கதிர்முலையுந் தோளும்
இடைசெப்பி னேர்கொடி யன்ன—நடைசெப்பில்
வண்டுவாழ் கூந்தலாள் வாயு மடநோக்கும்
தொண்டைமா னுறை மகட்கு''

எனவும்,

"வாக்கு முகந்தேன் மலர்க்கமலம் வண்குவளைப்
பூக்குரும்பை வேய்கண் புணர்முலைதோ—ளேக்கல்குல்
மான்றேர் மயிந்தன் மணியருவி வேங்கடத்துத்
தேன்றேர் குறவர் மகட்கு''

எனவும்,

"பூமலை நீருறையுள் புள்ளேறு புட்கொடி
வாய்மைவே லாழிப் படைக்கலம்—நாமம்
பிரம னிறைகண்ணன் பொன்றீக்கார் மேனி
கருமம் படைப்பழிப்புக் காப்பு''

எனவுங் கொள்க.

இனி, எழுத்துமாறு நிரனிறை வருமாறு:

"காமவிதி தண்முக மென்மருங்குல் செய்யவாய்
தோமி றுகடினி சொல்லமுதந்—தேமலர்க்
காந்தள் குரும்பை கனக மடவாள்கை
யேந்திளங் கொங்கை யெழில்''

இஃது எழுத்தாற் கொள்ளுமாறு: காவி கண்ணென்றும், மதி முகமென்றும், துடி மருங்குல் என்றும், கனி வாய் என்றும் விடுக்க.

இனி, வினை நிரனிறை வருமாறு:

"அடல்வே லமர்நோக்கி நின்முகங் கண்டே
உடலு மிரிந்தோடு மூழ்மலரும் பார்க்கும்

கடலுங் கனையிருளு மாம்பலும் பாம்புந்
தடமதியு மாமென்று தாம்''

எனவும்,

"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய—நீதியான்
மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்''

எனவும்,

"உண்டார்ந் துதைத்தழித் தூதிக்காத் தேற்றளந்து
கொண்டெடுத்து வாய்போழ்ந்து சென்றாக்கிக்—கண்டறுத்தான்
பேய்முலை புட்சகடஞ் சோகோடான் நீர்நிலம்
பூமலைமா தூதமிர்த நஞ்சு''

எனவும்,

"இறுத்தொசித் தட்டுதைத் தேந்திப்போழ்ந் தாடிப்
பறித்தெறிந் தூர்ந்தணைந்து காத்தான்—செறுத்த
விடைகுருந்த மல்ல னுருள்மாலை மாகூத்துப்
படைவிளவு புட்பாம் பினம்''

எனவும்,

பேய்முலை வியன்ஞாலம் பூங்குருந்த மதவேழம்
வைமருப் *பெழிலேறு வாட்கண்ணார் குரவைச்சீ
ருண்டானு மளந்தானு மொசித்தானுங் காத்தானுங்
கொண்டானுங் கொடுத்தானும் கொடியுவணத் தவனரோ''

எனவும் இன்ன பிறவும் வந்தவாறு கண்டு கொள்க.

இனி, முறை நிரனிறை, எதிர்நிரனிறை, மயக்கநிரனிறை என்று வேண்டுவாரு முளர்.

அவற்றுண் முறைநிரனிறை வருமாறு:

"பிரமன்மால் பினாகி யிந்துப் பேரிருள் செம்மை பீதம்
விரவலில் வெண்மை வட்ட மிக்கமுக் கோண நாற்கோண்
வரிசிலை வாயு வன்னி மாநிலம் வருண ராசன்
பரலவ மெடுத்த லேந்த லிழித்தலே கெடுத்த லாமே''

* 'பொழிலேறு' என்பதும் பாடம்.

" இருணிறம் வளையம் வாயு வெடுப்புதல் பிரமன் யஃகான்
எரிதிரி கோணஞ் செம்மை யேற்றன்மா லிரேபை யாகும்
பெருநிலஞ் சதுரம் பீதம் பிஞகிகோ ளிழைத்த லஃகான்
வருணன்விற் றவள மிந்து மாற்றுதல் வகாரம் வித்தே"

" புள்ளிப் பொறியே சுடர்நந்தி போர்க்குலிசம்
வள்ளிதழ்த் தாமரையும் வைக்கவம் மண்டலத்தே
மண்டலத்தைப் புள்ளின் வதனமுத லாகக்
கொண்டொழியச் சிந்திப்பக் குன்றுங் கொடுவிடமே"

எனவும்,

அடிமுழந் தாளோ டுந்தி யணிமிட றுதி யாகப்
படுபனி கந்தி முந்நீர் பருதியஞ் சனமென் றின்ன
வடிவுடை வயின தேயன் வலிமிகு நகுலன் குக்கில்
இடியுரு மேற்றோ டின்ன வியைந்தவ ணுகத் தானே "

எனவும்,

" முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு " (நிறை)

எனவும்,

" வாய்பவளம் வேய்தோண் மருங்கு லிளவஞ்சி
யாய்மலர்க் கோதை யவட்கு "

எனவும்,

நிரல் பட்டு " ஆனை யூற்றின் மீன்சுவையி னசுண மிசையி னளிநாற்றத்
தேனைப் பதங்க முருவங்கண் டிடுக்க ணெய்து மிவ்வனைத்துங்
கான மயிலஞ் சாயலார் காட்டிக் களவை விளைத்தாலும்
மான மாந்த ரெவன்கொலோ வரையா தவரை வைப்பதே "

எனவும்,

" மலைமுலை நீராடை மாரிமென் கூந்தல் "

எனவும், இன்னவை பிறவும முறைநிரனிறை. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இனி, எதிர்நிரனிறை வருமாறு:

" குன்ற வெண்மணை லேறி நின்றுநின்
றின்னக் காண்குவம் வம்மோ தோழி

களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே''

எனவும்,

"அனந்தனுங் குளிகனு மாதி யாகிய
நனந்தலைப் பெருங்குல நான்கு நாட்டிய
கனங்கெழு கருடனு லகத்துக் காணலாம்
இனம்புரி யெதிர்விர னிறையு மென்பவே''

எனவும்,

"நெருப்பினு நிலத்தினு நிவந்த காற்றினுந்
திருத்தகு நீரினுந் திருந்தத் தோன்றிய
பெருக்கிய தவளமே பீதஞ் செம்மையோ
டிருட்பிழம் பெனவுண ரிவற்றின் வண்ணமே''

எனவும்,

"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துட் பேதை புகல்'' (குறள்-பேதை-10.)

எனவும்,

" விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்'' (குறள்-கேள்வி-10.)

எனவும்,

"வில்லம்பு வேய்தோள் விலங்கரிக்கண் வேல்புருவம்
பல்வாய் மொழிதேன் பவளம் பனிமுத்தம்
நல்லானு ரன்னு ணடைசாய னேக்கமான்
மல்குசீர் மஞ்ஞை பிடி''

எனவும்,

"ஆடவர்க ளெவ்வா *றகல்வரளி வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா—நீடியமான்
நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றே
மன்றார் †கலிக்கச்சி மாண்பு''

---

* 'அகல்வரணி' என்பதும் பாடம்.

† 'மலிகச்சி' என்பதும் பாடம்,

னவுங் கொள்க. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இனி, மயக்கநிரனிறை வருமாறு:

" கண்ணன் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்னன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்னன் னுழைமருங்குன் மேதகு சாயலாள்
என்னன் பிறமகளா மாறு"

எனவும்,

* " இரங்கு குயின்முழவா"

எனவும் வரும். இனி யொருசாராசிரியர், நிறையெண்ணிரனிறை, குறையெண்ணிரனிறை, மிகையெண்ணிரனிறை என்று வேண்டுவாருமுளர் எனக் கொள்க. வரலாறு:

" சாந்துந் தண்டழையுஞ் சுரமங் கையர்க்
கேந்தி நின்றன விம்மலை யாரமே
வாய்ந்த பூம்பெடை யும்மலர்க் கண்ணியும்
ஈய்ந்த சாய்கைய விம்மலை யாரமே" (சூளா-சீய-180.)

இதனுள் இரண்டு பொருள் நிறீஇப் பின்னும் இரண்டு பொருள் நிறீஇனமையால் நிறையெண்ணிரனிறை.

" யானுந் தோழியு மாயமு மாடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்
தேனும் பாலும் போல்வன †சொல்லிப் பிரிவானேற்
கானும் புள்ளுங் கைதையு மெல்லாங் கரியன்றே"

இதனுண் மூன்றுபொருள் நிறீஇ, யொருவழி யிரண்டே நிறீஇனமையாற் குறையெண்ணிரனிறை.

---

* இச்செய்யுளை 267-ஆம் பக்கத்திற் காண்க.
† 'செப்பி' என்பதும் பாடம்.

" ஆசை யல்குற் பெரியாரை யருளு மிடையுஞ் சிறியாரைக்
கூச மொழியும் புருவமுங் குடில மாகி யிருப்பாரை
வாசக் குழலு மலர்க்கண்ணு மனமுங் கரிய மடவாரைப்
பூசல் பெருக்க வல்லாரைப் பொருந்தல் வாழி மடநெஞ்சே "

இதனுள் இரண்டு பொருள் நிறுவிப் பின் ஒருவழி மூன்று பொருள் நிறுவினமையான் மிகையெண்ணிரனிறை. பிறவு மன்ன.

இனி யொருசாராசிரியர் ஒருமுதனிரனிறை, இருமுதனிர னிறை, உய்த்துணர் நிரனிறை என்று வேண்டுவாருமுளர். வரலாறு:

" மீனொடு தண்டேறு வேதிய ராதியா
வானாத வைந்தொன்பா னயினவுந்—தேனார்
விரைக்கமல வாண்முகத்தாய் வெள்ளை முதலா
யுரைத்தன மிவ்வாறே யொட்டு "

இது முதனிறுத்த முறையானே முற்று நிறுவாது முதல் ஒன்றே சொன்னமையான் ஒருமுதனிரனிறை.

" வெண்பா முதலாக வேதிய ராதியா
மண்பால் வகுத்த வருணமா—மொண்பா
வினங்கட்கு மிவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூல்
மனந்தட்பக் கற்றோர் மகிழ்ந்து "

இஃது இருதிறமு முதலே சொன்னமையால் இருமுதனிர னிறை.

" செய்யோன் செழும்புகரோன் றெள்ளியோன் றேய்கதிரோன்
வெய்யோன் புதன்வெளியோன் வென்றிசெய்—பொய்யாப்பொன்
செல்லாச் சனிகாரி தேவர்கோன் மந்திரியே
யில்காற் கிறைவரா வார் "

" *சேய்புகர் மால்மதி யாளுமுன் னொளினைக்
காய்கதிர் மால்பகர் சேயிடை நாளினை
மாசறு பொன்சனி காரிபொன் னங்கடை
யாசறு நாள்களை யஞ்சக லூணே.

* 'சேய்பகர்' என்பதும் பாடம்.

இது, பன்னிரண்டு பொருணிறுவி ஒழிந்தவற்றை ஆதியும் நடையுங் கொள்ளாது ஓரிராசிக்கும் காலுக்கும் இறைவர் என்று பேர்குறியாது சொன்னாராயினும் மேட முதலாகிய விராசியென்று, மேடத்தின் முதற்காலும், முதனாளின் முதற்காலும் என்று உய்த் துணர வைத்தமையான் உய்த்துணர் நிரனிறை. அஞ்சகம் ஒரு நா ளுக்கு நாலு காலாக வொட்டிக்கொள்க.

" பூமன் றெறுகதிரோன் பொன்காரி யொண்புகரோன்
வாமப் புதன்வெளியோன் மாமந்தன்—சோமன்சேய்
சந்திரனே செவ்வாய் சதமகன்றன் மந்திரியே
யந்திரையைக் காணமாள் வார் "

" ஆடரிவி லாதிநடு வந்தமுறை சேயிரவி யம்பொ னியலும்
சேடிசுற வேறுசனி வெள்ளிபுத னள்ளுமெறி தேள்வ லவன்மீ
னேடுமுயல் திங்களிறெ டங்கிகுரு வுண்டலுணர் தண்டு துலைநீர்
மூடுகுட மோடுபுகர் காரிபுத னேரிதனை யுண்ணு முறையே "

இவையு முய்த்துணர் நிரனிறை. இவ்விரண்டுந் திரையக்கா ணம். ஓரிராசி மும்மூன்றாக ஒட்டிக்கொள்க.

இனி யொருசாராசிரியர் நிரனிறையைத் தொடைப்பாற் படுத்து, அடிநிரனிறை, இணைநிரனிறை, பொழிப்புநிரனிறை, ஒரூஉ நிரனிறை, கூழை நிரனிறை, மேற்கதுவாய் நிரனிறை, கீழ்க்கதுவாய் நிரனிறை, முற்றுநிரனிறை என்று வேண்டுவாருமுளர் எனக் கொள்க. வரலாறு:

" முலைகலிங்க மூரி கிலமா மகட்கு
மலைபரவை மாரிமென் கூந்தல்—குலநதி
தண்ணாரங் காஞ்சி தகைநான் முகமவட்குக்
கண்ணாவா னேறுயர்த்த கோ "

" கொடிவடிவேல் கூட்டழிக்குங் கொவ்வைவாய் மாதர்
இடைநெடுங்க ணென்னு முறப்பு "

இவை அடிதோறு முதற்சீர்க்கண்ணே நிரனிறுத்தமையான் அடிநிரனிறை.

" நண்ணினர்க்கு *நண்ணார்க்கு நாடோறுங் கோடாமைத்
தண்ணியராய் வெய்யராய்த் தக்காரோ—டெண்ணிக்

* 'ஏனோர்க்கும்' என்பதும் பாடம்.

கருங்கடல்சூழ் மாநிலத்தைக் காப்பதா மன்றே
இருங்கழற்கால் வேந்தர்க் கியல்பு"

எனவும்,

"எண்ணின ரெண்ணகப் படாத செய்கையா
னண்ணிய ரகன்றவர் திறத்து மாணையா
னண்ணுநர் பகைவரென் றிவர்க்கு நாளினுந்
தண்ணியன் வெய்யனந் தானை வேந்தனே" (சூளா-நகர-17.)

இவை முதலிருசீர்க்கண்ணு நிரனிறுத்தமையான் இணைநிர னிறை.

"புருவமும் பூணார் புணர்முலையுங் கூறின்
வரிசிலையு மாண்பமைந்த கோங்கும்—தெரியுங்கால்
நல்லிடை மெல்லியலார் நாட்ட மிவையிரண்டும்
வல்லி வசைதீர் மலர்"

இது முதற்சீர்க்கண்ணு மூன்றாஞ் சீர்க்கண்ணு நிரனிறுத்த மையால் பொழிப்புநிரனிறை.

"புரிகுழலும் பூணார் முலையா டிருமுகமுங்
கொன்றையுங் குன்று தொளிசிறக்கும்—திங்களும்
என்றுரைப்பி னல்ல தினிவே றுவமமற்
றொன்றுரைக்க லாமோ வொருங்கு"

இது முதற்சீர்க்கண்ணு நான்காஞ்சீர்க்கண்ணு நிரனிறுத்த மையால் ஒரூஉநிரனிறை.

"கண்ணும் புருவமு மென்றோளு மிம்மூன்றும்
வள்ளிதழும் வில்லும் விறல்வேயும் வெல்கிற்கும்
பல்லும் பகரு மொழியு மிவையிரண்டும்
முல்லையும் யாழு மிகும்"

இது நான்காஞ்சீரின்றி முதன் மூன்று சீர்க்கண்ணு நிரனிறுத்த மையாற் கூழைநிரனிறை.

"பல்லும் பணிமொழியாள் வாயும் பணைமுலையும்
முல்லையு முந்நீர்ப் பவளமுங் கோங்கரும்பு
நல்லிணர்க் கோதை நறுநுதலு நாட்டமும்
வில்லுங் கயலு மிகும்"

இஃது இரண்டாஞ் சீர்க்கண்ணின்றி யொழிந்த மூன்றுசீர்க் கண்ணு நிரனிறுத்தமையான் மேற்கதுவாய்நிரனிறை.

" பொறையன் செழியன் பூந்தார் வளவன்
கொல்லி கொற்கை நல்லிசைக் குடந்தை
பாவை முத்த மாயிதழ்க் குவளை
மாயோண் முறுவன் மழைப்பெருங் கண்ணே "

இது மூன்றாஞ் சீர்க்கண்ணின்றியொழிந்த மூன்று சீர்க்கண்ணு நிரனிறுத்தமையாற் கீழ்க்கதுவாய்நிரனிறை.

" *அடல்வே லமர்நோக்கி" என்பது நான்கு சீர்க்கண்ணு நிரனிறுத்தமையான் முற்றுநிரனிறை.

"இரண்டு நான்கு மெட்டு மிரட்டியு
மிரண்டடி யோரடி முச்சீ ரிருசீர்
நிரந்த முறைமையி னீர்த்திரை போல்வரின்
அம்போ தரங்கமென் றறிந்தனர் கொளலே"

இதுவுமது.

இனி யொருசாராசிரியர், "பகற்செய்யுஞ் செஞ்ஞாயிறும், இரவுச்செய்யும் வெண்டிங்களும்" என்றிவ்வாறு வருவனவற்றை முரணிரனிறை என வேண்டுவர்.

" நிரனிறை தானே,
வினையினும் பெயரினு நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையும் "

என்பது நிரனிறைக் கிலக்கணம்.

இனிச் சுண்ணமொழிமாற்று வருமாறு:

" சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

இதனுள், 'சுரை' என்று நின்றது 'மிதப்ப' என்பதனோடு பொருள் கொள்ளவும், அயல் நின்றது 'நிலை' என்பதனோடு பொருள் கொள்ளவும் வந்தமையாற் சுண்ண மொழிமாற்று.

* இச்செய்யுளை 360-ஆம் பக்கத்திற் காண்க.

"சுண்ணந் தானே,
பட்டாங் கறைந்த வீரடி *யெண்சீர்
ஒட்டுவழி யறிந்து துணிந்தன ரியற்றல்"

என்றாராகலின்:

இனி, அடிமறிமொழிமாற்று வருமாறு:

"சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
வார லெனினே யானஞ் சுவலே
சார னாட நீவர லாறே"

எனவும்,

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
ஏறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே"

எனவும்,

"இட்டி விரும்புழை யிருளிய பொழுதே
பட்டி யுளியங் கொட்கு மாங்கே
பொற்றொடி யுண்க ணீர்நில் லாவே
வெற்ப வாரல் வியன்மலை யாறே"

எனவுங் கொள்க. இவை வேண்டிற் றோரடி முதலாகச் சொன்னா லும் பொருள்கொண்டு நிற்றலான் அடிமறிமொழிமாற்று.

"அடிமறிச் செய்தி யடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே"

என்பதாகலின்.




இனி, அடிமொழிமாற்று வருமாறு:

"ஆலத்து மேல குவளை குளத்துள
வாலி னெடிய குரங்கு"

இதனுள் 'ஆலத்துமேல' என்பதனோடு 'வாலினெடியகுரங்கு' என்பதனைக்கூட்டியும், 'குவளை' என்பதனோடு 'குளத்துள' என்ப

* 'ஒண்சீர்' என்பதும் பாடம்.

தனைக் கூட்டியும் பொருள் கொண்டமையால் அடிமொழிமாற்று. இரண்டடி மொழிமாற்று எனவும் அமையும்.

"மொழிமாற் றியற்கை,
சொன்னிலை மாற்றிப் பொருளெதி ரியைய
முன்னும் பின்னுங் கொள்வழிக் கொளாஅ" (தொல்-சொல்-409.)

என்பதாகலான்.

"குன்றத்து மேல குவளை குளத்துள
செங்கோடு வேரி மலர்"

என்பதும்,

"உள்ளடி யுள்ளன வேலை செவியுள
முள்ளஞ்சித் தொட்ட செருப்பு"

என்பதும், இன்னவை பிறவும் அன்ன.

"சொல்லாதல் சொல்லின் பொருளாதன் முன்முறைவைத்
தவ்வகை நேர்கொ ணிரனிறையா மவ்வவ்
விடையிட் டெதிரும் விராய்ச்சொல் லிடையிடை
யிட்டன சுண்ண மிரண்டடியாற் சொல்வர
விற்ப தடிமொழி மாற்றல் லதடி
மறியா முழுதும்யாப் பு"

இதனைப் பதநெகிழ்த் துரைத்துக் கொள்க.

இனிப், பூட்டுவிற் பொருள்கோள் வருமாறு:

"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேத—முறந்தையர்கோன்
றண்ணார மார்பிற் *றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு"

இதனுள் 'திறந்திடுமின்' என்பது 'கதவு' என்பதனோடு பொருளேக்குடைமையிற் பூட்டுவிற் பொருள்கோளாயிற்று.

இனிப், புனல்யாற்றுப் பொருள் கோள் வருமாறு:

* 'தமிழின் பெருமானை' என்பதும் பாடம்.

"அலைப்பான் பிறிதுயிரை யாக்குதலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்"

இஃது அடி தோறும் பொருளற்று மீளாது சேறலின் புனல் யாற்றுப் பொருள்கோ ளாயிற்று.

இனி, அளைமறிபாப்புப் பொருள்கோள் வருமாறு:

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடர்விளிந்து நாற்கதிக்கட் சுழல்வார் தாமு
மூழ்ந்து பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே"

இதனுள், "வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதார்" என்னும் இறுதிச்சொல் முதலும் இடையுஞ் சென்று மறிந்துபொருள்கோடலின் அளைமறிபாப்புப்பொருள்கோ ளாயிற்று.

இனித், தாப்பிசைப் பொருள்கோள் வருமாறு:

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு" (குறள்-புலான்-5.)

இஃது, "ஊன் உண்ணாமை யுள்ள துயிர்நிலை" எனவும், "ஊன் அண்ணாத்தல் செய்யா தளறு" எனவும் நடுநின்ற 'ஊன்' என்னுஞ் சொல்லே முதலும் இறுதியும் நின்று பொருள் கொண்டமையால் தாப்பிசைப் பொருள்கோ ளாயிற்று.

இனிக், கொண்டு கூட்டுப் பொருள்கோள் வருமாறு:

"குவியிணர்த் தோன்றி யொண்பூ வன்ன
தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்
நள்ளிருள் யாமத் தில்லெலி பார்க்கும்
பிள்ளை வெருகிற் கல்கிரை யாகிக்
கடுநவைப் படீஇயரோ நீயே நெடுநீர்
யாண ரூரன் றன்னொடு
வதிந்தவெம் மின்றுயி லெடுப்பி யோயே" (குறுந்-107.)

இதனுள் "தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்" என்பதனையும் "கடுநவைப் படீயரோ நீயே" என்பதனையும், "இன்றுயி

லெடுப்பியோய்" என்பதனையுங் கூட்டிப் பொருள் கொண்டமையான் கொண்டு கூட்டுப் பொருள்கோ ளாயிற்று.

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்"

இதனுள் 'அஞ்சனத்தன்ன பைங்கூந்தல்' எனவும், 'தெங்கங் காய் போலத் திரண்டுருண்ட வெண்கோழி முட்டை யுடைத்தன்ன பசலை' எனவும் சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருள் கொண்ட மையால் இதுவுங் கொண்டு கூட்டுப் பொருள்கோள் எனப்படும்.

"ஆரிய மன்னர் பறையி னெழூந்தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை—காரி
விறன்முள்ளூர் வேங்கை வெதிர்நாணுந் தோளாள்
திறனுள்ளு ருள்ள தலர்"

இதனுள், 'வெதிர்நாணுந் தோளாள்' என்றும், 'திறன் வேங் கை' என்றும், 'அலர் ஆரிய மன்னர் பறையி னெழூந்தியம்பும்' என்றும் சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருள் கொண்டமை யால் இதுவுமது. பிறவு மன்ன. கொண்டுகூட்டு தன்னுள்ள சொல்லாதல், பொருளாதல் கொணர்ந்து கூட்டிச் சொல்லப்படுவன வும், தன் இல்லாத சொல்லாதல், பொருளாதல் கொணர்ந்து கூட் டிச் சொல்லப்படுவனவும் என நான்காம். அவை வந்தவழிக் கண்டு கொள்க. நிரனிறை, சுண்ணம், அடிமறிமொழிமாற்று, அடிமொழி மாற்று என்னும் இந்நான்கினோடும், பூட்டுவில், புனல்யாறு, தாப் பிசை, அளைமறிபாப்பு, கொண்டுகூட்டு என்னும் இவ்வைந்தும் உறழ இருபதாம். 'அவை வந்தவழிக் கண்டு கொள்க. இருபது வகையானுங் காட்டினார் அவிநயனார் எனக்கொள்க.

ஆதி தீபகம், அந்த தீபகம், மத்திம தீபகம், சிங்க நோக்கு, தேரைத்தத்து, பாசி நீக்கு, ஒருசிறைநிலை என்றிவ்வாறு *பொருள் கோள் சொல்வாரு முளர். அவையு மவற்றுள்ளே யடங்கும் எனக் கொள்க. அவை யெல்லாம் †வல்லார்வாய்க் கேட்டுணர்க. ஈண் டுரைப்பிற் பெருகும்.

* 'பொருள்சொல்வாருமுளர்' என்பதும் பாடம்.
† 'நல்லாசிரியர்' என்பதும் பாடம்.

அறுவகைப்பட்ட சொல்லின் விகாரமாவன:

" அந்நாற் சொல்லுந் தொடுக்கும் காலை
மெலிக்கும்வழி மெலித்தலும் வலிக்கும்வழி வலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழி தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலுங் குறுக்கும்வழி குறுக்கலும்
நாட்டல் வலிய வென்மனார் புலவர்" (தொல்-சொல்-எச்-71.)

என்றோதப்பட்டன.

வரலாறு:

" தண்டை யினக்கிளி கடிவோள்
பண்டைய ளல்லண் மானோக் கினளே"

இதனுள் 'தட்டை' எனற்பாலதனைத் 'தண்டை' என்று மெலிக்கும்வழி மெலித்தவாறு.

" குறுத்தாட் பூதஞ் சுமந்த வறக்கதி ராழியெம் மண்ணலைத் தொழினே"

இதனுள் 'குறுந்தாள்' எனற்பாலதனைக் 'குறுத்தாள்' என்று வலிக்கும்வழி வலித்தவாறு.

" வெண்மணை லெக்கர் விரிதிரை தந்தநீர்
கண்ணுடி மண்டிலத் தூதாவி யொத்திழியும்
தண்ணந் துறைவர் தகவிலரே தற்சேர்ந்தார்
வண்ணங் கடைப்பிடியா தார்"

இதனுள் 'தண்டுறைவர்' எனற் பாலதனைத் 'தண்ணந்துறைவர்' என விரிக்கும்வழி விரித்தவாறு.

" பூத்தாட் புறவின் புனைமதில் கைவிடார்
காத்தவிக் காவல ரேனையார்—பார்த்துநூர்
வேண்டார் வணக்கி விறன்மதிரூன் கோடன்
வேண்டுமாம் வேண்டார் மகன்"

இதனுள் 'வேண்டாதாரை வணக்கி' எனற்பாலதனை 'வேண்டார் வணக்கி' என்று தொகுக்கும் வழி தொகுத்தவாறு.

" பாசிழை யாகம் பசப்பித்தான் பைந்தொடியை
மாசேன னென்று மனங்கொளீஇ—மாசேனன்

சேயிதழ்க் கண்ணி *தருகிலான் சேர்தியென்
னோய்தீர நெஞ்சின்மேல் வைத்து''

இதனுட் 'பச்சிழை' எனற்பாலதனைப் 'பாசிழை' என நீட்டும் வழி நீட்டியவாறு.

"†தென்னன் றிருத்தார்நன் றென்றேன் றியேன்"

இதனுள், 'தீயேன்' எனற்பாலதனைத் 'தியேன்' என்று குறுக்கும்வழி குறுக்கியவாறு. பிறவுமன்ன.

'அறுவகைப்பட்ட சொல்லின் விகாரமும்' என்ற உம்மையால் தலைக்குறைத்தலும், இடைக்குறைத்தலும், கடைக்குறைத்தலும் என விவையும் வரலாற்று முறைமையோடுங் கூட்டி வழங்கப்படும்.

"மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி"

இதனுள் 'தாமரை' எனற்பாலதனை 'மரை' என்று தலைக்குறைத்து வழங்கியவாறு.

"வேதின வெரிநி னோதி முதுபோத்து" (குறுந்-140.)

இதனுள் 'ஓந்தி' எனற்பாலதனை '‡ஓதி' என்று இடைக்குறைத்தவாறு.

"அகலிரு விசும்பி னாஅல் போல
வாலிதின்§விரிந்த புன்கொடிமுசுண்டை"(பத்து-மலைபடு-100-101)

இதனுள் 'ஆரல்' எனற்பாலதனை 'ஆல்' என்று இடைக்குறைத்தவாறு.

"நீலுண் டுகிலிகை கடுப்பப் பலவுடன்"

இதனுள் 'நீலமுண்டுகிலிகை' எனற்பாலதனை 'நீலுண்டுகிலிகை' என்று கடைக்குறைத்தவாறு. பிறவுமன்ன.

இனி 'எழுத்த லிசையை யசைபெறத் தியற்றலும்' என்பது எழுத்தல்லாத முற்கும், வீளையும், இலதையும், அனுகரணமும்

---

* 'தருதலான்' என்பதும் பாடம்.

† இவ்வடியுடைய செய்யுளை 237-ஆம் பக்கத்திற் காண்க.

‡ ஓதி எனவும் ஓந்திக்கொரு பெயர் உண்டு; 'ஓமா னோதி யோத்தியோந் திப்பெயர்' என்பது பிங்கலந்தை.

§ 'மலர்ந்தன' என்பதும் பாடம்.

முதலாக வுடையன செய்யுளகத்து வந்தால் அவற்றைச் செய்யுள் நடை யழியாமை, அசையுஞ் சீருந் தளையும் அடியும் தொடையும் பிழையாமைக் கொண்டு வழங்குதலும் என்றவாறு.

வரலாறு:

"மன்றலங் கொன்றை மலர்மிலைந் துஃகுவஃ
கென்று *பயிலு மிடைமகனே—சென்று
மறியாட்டை யுண்ணுமை வண்கையால் வல்லே
யறியாயோ வண்ணுக்கு மாறு.

ஒழிந்தன இடைக்காடனார் பாடிய ஊசிமுறியுட் கண்டு அலகிட்டுக் கொள்க. பிறவுமன்ன.

"எழுத்தல் லிசையே யசையொடு சீர்க்கண்
ணிறைக்கவும் படுமென நேர்ந்திசி னோரே"

என்றார் பிறரும்.

'வழூக்கா மரபின் வகையுளி சேர்த்தலும்' என்பது அசையும், சீரும், தளையும், அடியும், தொடையும், வண்ணமும செய்யுட்கட் கழியாமை வகையுளி சேர்த்தலும் என்றவாறு.

'வகையுளி' என்பது முன்னும் பின்னும் அசைமுதலாகிய உறுப்புக்கள் நிற்புழியறிந்து குற்றப்படாமை வண்ணமறுத்தல் என்றவாறு. அவற்றுட்சில வருமாறு:

"கடியார்பூங் கோதை கடாயினுன் றிண்டேர்
சிறியார்தஞ் சிற்றில் சிதைத்து"

இதனுள் 'கடியார்' என்றும், 'பூங்கோதை'. என்றும் 'கடாயினுன்' என்றும் அலகிடின், ஆசிரியத்தளையும், கலித்தளையும் தட்டு 'வெள்ளையுட் பிறதளை விரவா' என்னு மிலக்கணத்தொடு மாறு கொள்ளுமாகலின், அதனைக் 'கடியார்பூ' என்று, புளிமாங்காயாகவும், 'கோதை' என்று தேமாவாகவும் அலகிடத் தளையும், சீரும், வண்ணமுஞ் சிதையாவாம்.

"பாடுநர்க்கு மாடுநர்க்கும் பண்டுதாங் கண்டவர்க்கும்
ஊடுநர்க்குங் கூடுநர்க்கு மொத்தலால்—நீடுநீர்

* 'திரியும்' என்பதும் பாடம்.

நல்வய லூர னறுஞ்சாந் தணியகலம்
புல்லலி னூட லினிது"

இப்பாட்டினுள் டகரமும், நகரமும் பிரிந்திசைத்தனவாயினும் இரண்டினையுங்கூட்டி நிரையசையாக அலகிட்டுக்கொள்க. அல்லா விடின் வண்ண மழிந்துகிடக்கும்.

"போதார் கூந்த லிவணனி யழுங்க
வேதிலா ளனைய நீபிரிந் ததற்கே
கிழலவிர் மணிப்பூ ணன்னை
யழலா னுவெங் கண்ணே தையோ"

இதனுள் 'அழலானு' என்றும், 'எங்கண்ணே' என்றும், 'தையோ' வென்றும் அலகிடிற் குற்றப்படாநிற்கும்; ஆசிரிய முச்சீரால் இறுகவென்னு மோத்திலாமையின். அதனை வகையுளிசேர்த்தி, முதற் சீரைப் புளிமா வென்னுஞ் சீராகவும் அல்லாதன மூன்றுந் தேமா வென்னுஞ் சீராகவும் அலகிட்டுக்கொள்ளப் பிழையாதாம்.

'*தாழிரும்பிணர்த்தடக்கை' என்பதனுள், 'தாழிரும் பிணர்த் தடக்கை' என்பது ஓரடியாகவும், 'தண்கவுளிழிகடாத்த' என்பது ஓரடியாகவும் 'தாழ்வாகத்தம்பேணு' என்பது ஓரடியாகவும், 'கடுஞ் சினத்த கதக்களிற்ற' என்பது ஓரடியாகவும் அலகிட்டால் இரு சீரடி வஞ்சிப்பாவாய்த் தனது தூங்கலோசை பிழையாது நிற்கும் என்ப ஒருசாராசிரியர். இனி யொருசாரார் வஞ்சிப்பாவினுட் கலி யடியும் வரப்பெறு மாகலின் முதலிரண்டடியுங் கலியாகக்கொண்டு கலியடி விரவிய வஞ்சிப்பா என்று அடிவழங்குவர் எனக்கொள்க. பிறவுமன்ன.

" அருளேக்கு நீரா ரசைச்சீ ரடிக்கட்
பொருளேக்கா தோசையே நோக்கி—†மருணீக்கிக்
கூம்பவுங் கூம்பா தலரவுங் கொண்டியற்றல்
வாய்ந்த வகையுளியின் மாண்பு"

இதனை விரித்துரைத்துக் கொள்க. பிறரும்,

1 " எழுத்தல் கிளவியி னசையொடு சீர்கிறைத்
தொழுக்கலு மடியொடு தளைசிதை யாமை
வழுக்கில் வகையுளி சேர்த்தலு முரித்தே."

* 'இச்செய்யுளை 348-ஆம் பக்கத்திற்காண்க.
† 'மருணீங்க' என்பதும் பாடம்.

என்றார் எனக்கொள்க.

'அம்மை முதலிய வாயிரு நான்மையும்' என்பது அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என இவை யெட்டும் எனக்கொள்க.

அம்மையாவது, சிலவாய மெல்லியவாய சொற்களால் ஒள்ளியவாய பொருண்மேற் சிலவடியாற் சொல்லப்படுவது; என்னை?

"சின்மென் மொழியாற் *றாய பனுவலோ
டம்மை தானே யடிநிமிர் வின்றே" (தொல்-பொ-செய்-236.)

என்றாராகலின். வரலாறு:

"அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக் கடை" (குறள்-இன்னா-5.)

எனக்கொள்க.

அழகாவது, செய்யுட் சொல்லாகிய திரிசொல்லினால் ஓசையினியதாக நன்கினிது யாக்கப்படுவது; என்னை?

"செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பி
னவ்வகை தானே யழகெனப் படுமே" (தொல்-பொ-செய்-237.)

என்றாராகலின். வரலாறு:

"துணியிரும் பௌவங் குறைய வாங்கி
யணிகிள ரடுக்கின் முற்றிய வெழிலி
காலொடு மயங்கிய கனையிரு ணடுநாள்
யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப
நெடுவரை மருங்கிற் பாம்பற விழிதரும்
கடுவரற் கலுழி நீந்தி
வல்லியம் வழங்குங் கல்லதர் நெறியே"

எனக் கொள்க.

தொன்மையாவது, பழைமைத்தாய் நிகழ்ந்தபெற்றி யுரைக்கப்படுவது; என்னை?

"தொன்மைதானே,
யுரையொடு புணர்ந்த பழைமை மேற்றே" (தொல்-பொ-செய்-238.)

என்றாராகலின்.

---

* 'சீரிது நுவலின்' என்பதும் பாடம்.

வரலாறு:

“ செறிதொடி யுவகை கேளாய் செஞ்சுடர்த்
தெறுகதிர்ச் செல்வன்”

என்பதூஉம், பாரதமிராமாயண முதலானவுங் கொள்க.

தோல் என்பது, இழுமென்ற மெல்லியவாய சொற்களால் விழுமியவாய்க் கிடப்பனவும், எல்லாச் சொற்களோடுங்கூடிய பல வடியை யுடையவாய்க் கிடப்பனவும் என இரண்டு வகைப்படும். என்னை ?

“ இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியா லடிநிமிர்ந் தொழுகினுந்
தோலென மொழிப தொன்மொழிப் புலவர்”

(தொல்-பொ-செய்-239.)

என்றாராகலின். வரலாறு:

“ மாயிரும் பரப்பகம் புதையப் பாம்பின்
ஆயிர மணிவிளக் கழலுஞ் சேக்கைத்
துணிதரு வெள்ளந் துயில்புடை பெயர்க்கு
மொளியோன் காஞ்சி யெளிதினிற் கூறின்
இம்மை யில்லை மறுமை யில்லை
நன்மை யில்லைத் தீமை யில்லை
செய்வோ ரில்லைச் செய்பொரு ளில்லை
யறிவோர் யாரஃ திறுவுழி யிறுகென”

இது மார்க்கண்டேயனார் காஞ்சி. இழுமென்மொழியால் விழுமியது நுவன்றது.

“திருமழை தலைஇய விருணிற விசும்பின்” (பத்து-மலைபடுகடாம்) என்பது பரந்தமொழியா லடிநிமிர்ந்தொழுகியது. இது மலைபடுகடாம்.

விருந்து என்பது புதியவாயினவற்றின்மேற்று. அவை இப்பொழுதுள்ளாரைப் பாடும் பாட்டு.

“ விருந்தே தானும்,
புதுவது புனைந்த யாப்பின் மேற்றே” (தொல்-பொ-செய்-240.)

என்றாராகலின். அவை வழிப்பட்டுழி யறிந்து கொள்க.

இயைபு என்பது: ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள எனப்பட்ட பதினொரு புள்ளியீறாய் வந்த பாட்டெல்லாம் இயைபு எனப்படும். பதினோருதாரணமும் அவை வந்தவழிக் கண்டுகொள்க. என்னை?

"ஞகாரை முதலா ளகாரை யீற்றுப்
புள்ளி யிறுதி யியைபெனப் படுமே" (தொல்-பொ-செய்-241.)

என்றாராகலின்.

புலன் என்பது, இயற்சொல்லாற் பொருள் தோன்றச் செய்யப்படும் பாட்டு; என்னை?

"சேரி மொழியாற் செவ்வி திற்கிளந்
தோதல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே" (தொல்-பொ-செய்-242.)

என்றாராகலின். வரலாறு:

"பாற்கடன் முகந்த பருவக் கொண்மூ
வார்செறி முரசின் முழங்கி யொன்னார்
மலைமுற் றின்றே வயங்குதுளி சிதறிச்
சென்றவ டிருமுகங் காணக் கடுந்தே
ரின்றுபுகக் கடவுமதி பாக வுதுக்காண்
மாவொடு புணர்ந்த மாஅல் போல
இரும்பிடி யுழைய தாக
பெருங்காடு மடுத்த காமர் களிறே"

எனக் கொள்க.

இழைபு என்பது, வல்லொற்றியாதுந் தீண்டாது செய்யுளியலுடையாரால் எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட குறளடிமுதலாப் பதினேழ்நிலத்து ஐந்தடியு முறையானே யுடைத்தாய் ஓங்கிய சொற்களான் வருவது; என்னை?

"ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா *வைந்தடி யொப்பித்
தோங்கிய மொழியா னோங்கன மொழுகின்
இழைபி னிலக்கண மியைந்த தாகும்" (தொல்-பொ-செய்-243.)

என்றாராகலின்.

* 'ஐந்தடி காறும்' என்பதும் பாடம்.

வரலாறு:

" போந்து சென்று சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து
வண்டு சூழ விண்டு வீங்கு
நீர்வாய் கொண்டு நீண்ட நீல
மூர்வா யூதை வீச வீர்வாய்
மதியோர் நுண்டோ டொல்கி மாலை
நன்மணங் கமழும் பன்னெல் லூர
அமையோர் மென்றோ ளாயரி நெடுங்கண்
இணையீ ரோதி யேந்திள வனமுலை
யிறும்ப மென்மல ரிடையெழுந்த மாவின்
நறுந்தழை *யலமருஞ் செறிந்தேந் தல்குலள்
அணிநகை யசைஇய வரியமை சிலம்பின்
மணிமருள் வளர்குரல் வளரிளம் பிறைநுதல்
ஒளிநிலவு வயங்கிழை யுருவுடை மகளொடு
களிமுழவ முழங்கிய வணிநிலவு நெடுநகர்
இருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை
கலனளவு கலனளவு கலனளவு கலனளவு
பெருமணம் புணர்ந்தனை யென்பவஃ
தொருநீ மறைப்பி னொழிகுவ தன்றே"

எனக் கொள்க.

வண்ணமும், என்பது வண்ணங்களு மென்றவாறு. அவ்வண்ணந்தானே யிருபதெனக்கொள்க; என்னை?

" வண்ணந் தானே நாலைந் தென்ப" (தொல்-பொ-செய்-213.)

என்றாராகலின்.

" அவைதாம்,
1 பாஅ வண்ணந் 2 தாஅ வண்ணம்
3 வல்லிசை வண்ண 4 மெல்லிசை வண்ணம்
5 இயைபு வண்ண 6 மளபெடை வண்ணம்
7 நெடுஞ்சீர் வண்ணங் 8 குறுஞ்சீர் வண்ணம்
9 சித்திர வண்ண 10 நலிபு வண்ணம்
11 அகப்பாட்டு வண்ணம் 12 புறப்பாட்டு வண்ணம்
13 ஒழுகு வண்ண 14 மொரூஉ வண்ணம்

---

* 'துயல்வரூஉஞ் செறிந்தேந்தல்குல்' என்பதும் பாடம்,

15 எண்ணு வண்ண 16 மகைப்பு வண்ணம்
17 தூங்கல் வண்ண 18 மேந்தல் வண்ணம்
19 உருட்டு வண்ண 20 முடுகு *வண்ணமென்
றாங்கன மறிப வறிந்திசி னோரே" (தொல்-பொ-செய்-214.)

என்றோதப்பட்டன.

அவற்றுட் பாவண்ணம் சொற்சீரடியால் நூலுட் பயிலவருவது; என்னை?

"அவற்றுட், பாஅ வண்ணஞ்
சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும்" (தொ-பொ-செய்-215.)

என்றாராகலின்.

வரலாறு:

"குஐ ஆனொன வரூஉ மிறுதி
அஒடுஞ் சிவணுஞ் செய்யு ளுள்ளே." (தொல்-சொல்-வேற்-25.)

எனவும்,

"அஇ உஅம் மூன்றுஞ் சுட்டு." (தொல்-எழுத்-நூன்-31.)
எனவுங் கொள்க.

தாஅ வண்ணமாவது, தோன்றுமிடத்து ஓரோவடி யிடையிட்டு வந்த வெதுகைத்தாகும்; என்னை?

"தாஅ வண்ண,
மிடையிட்டு வந்த வெதுகைத் தாகும்." (தொல்-பொ-செய்-216.)

என்றாராகலின்.

வரலாறு:

"தோடா ரெல்வளை நெகிழ நாளும்
நெய்த லுண்கண் பைதல் †லுழவா
வாடா ‡வவ்வரி தைஇப் பசலையும்
வைக றோறும் பைப்பயப் பெருக
§நீடா ரிவரென நீண்மணங் கொண்டோர்
கேளார் கொல்லோ காதலர் தோழி

* 'வண்ணமோ—டாங்கவை யென்ப வறிந்திசி னோரே' என்பதும் பாடம்.
† 'கலுழி' என்பதும் பாடம்.
‡ 'வல்வரி' என்பதும் பாடம்.
§ 'நீடா ரிவணென்' என்பதும் பாடம்.

வாடாப் பௌவ மறமுகந் தெழிலி
பருவஞ் செய்யாது வலனேர்பு வளைஇ
யோடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே.''

என்னும் பாட்டுக்கொள்க.

வல்லிசை வண்ணமாவது, வல்லெழுத்துமிக்குவருவது; என்னை?

"வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் *பயிலும்.''

(தொல்-பொ-செய்-217.)

என்றாராகலின்.

வரலாறு :

"வட்டொட்டி யன்ன வனமுடைப் புன்னைக்கீழ்க்
கட்டிட்டுக் கண்ணி தொடுப்பவர் தாழைப்பூத்
தொட்டிட்டுக் கொள்ளுங் கடற்சேர்ப்ப னின்னொடு
பட்டொட்டி யுள்ளம் விடாது வினையுமேல்
விட்டொட்டி நீங்காதே யொட்டு.''

எனக் கொள்க.

மெல்லிசை வண்ணமாவது, மெல்லெழுத்து மிக்குவருவது; என்னை?

"மெல்லிசை வண்ண மெல்லெழுத்து மிகுமே''

(தொல்-பொ-செய்-218.)

என்றாராகலின்.

வரலாறு:

"பொன்னி னன்ன புனைநுண் டாது
மணியி னன்ன நெய்தலங் கழனி
மனவெவ வுதிரு மாநீர்ச் சேர்ப்ப
மாண்வினை நெடுந்தேர் பூண்மணி யொழிய
மம்மர் மாலை வாநீ
நன்மா மேனி நயந்தனை யெனினே''

எனக் கொள்க.

இயைபு வண்ணமென்பது, இடையெழுத்து மிக்கு வருவது; என்னை?

"இயைபு வண்ண மிடையெழுத்து மிகுமே.''

(தொல்-பொ-செய்-219.)

* 'மிகுமே' என்பதும் பாடம்.

என்றாராகலின்.

வரலாறு:

" வால்வெள் ளருவி வரைமிசை யிழியவும்
கோள்வல் லுழுவை விடரிடை யியம்பவும்
வாருகி ருளியம் வரையக மிசைப்பவும்
வேலொளி விளக்கி நீவரினே
யாரோ தோழி வாழ்கிற் போரே."

எனக் கொள்க.

அளபெடை வண்ணமாவது, அளபெடை பயின்றுவருவது; என்னை?

" அளபெடை வண்ண மளபெடை பயிலும்." (தொல்-பொ-செய்-220.)

என்றாராகலின். வரலாறு:

" தாஅம் படுநகர்க்குத் தண்ணீ ருளகொலோ
ஆஅம் பலபழி யன்னை யறிவுறில்
வாஅம் புரவி வழுதியோ டெம்மிடை
தோஒ நுவலுமிவ் வூர்."

நெடுஞ்சீர் வண்ணமென்பது, நெட்டெழுத்து மிக்குவருவது; என்னை?

" நெடுஞ்சீர் வண்ண நெட்டெழுத்துப் பயிலும்"

(தொல்-பொ-செய்-221.)

என்றாராகலின். வரலாறு:

" நீரூர் பாணு யாறே காடே
நீலூர் காயாம் பூவீ யாவே
காரூர் பாணு மாலே யானே
யாரோ தாமே வாழா மோரே
*யூரூர் பாகா தேரே
பீரூர் தோளாள் பேரூ ராளே."

எனக் கொள்க.

குறுஞ்சீர் வண்ணமென்பது, குற்றெழுத்து மிக்குவருவது; என்னை?

" குறுஞ்சீர் வண்ணங் குற்றெழுத்துப் பயிலும்"

(தொல்-பொ-செய்-122.)

* 'ஆயூர்' என்பதும் பாடம்.

என்றாராகலின். வரலாறு:

" உறுபெய லெழிலி தொகுபெயல் பொழியச்
சிறுகொடி யவரை பொரிதளை யவிழக்
குறிவரு பருவ மிதுவென மறுகு
செறிதொடி நலமிலை யழிய
லறியலை யரிவை கருதிய பொருளே"

எனக் கொள்க.

சித்திர வண்ணமென்பது, குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் விரவிவருவது; என்னை?

" சித்திரவண்ணம்,
நெடியவுங் குறியவு நேர்ந்துடன் வருமே" (தொல்-பொ-செய்-223.)

என்றாராகலின். வரலாறு:

" ஊர்வாழி யூரர் தேர்தார் வாசி
பேர்சேரி கார்பே ரிரைய
வாரி பீர்நீர தோழி தோளே"

எனக் கொள்க.

நலிபு வண்ணமென்பது, ஆய்த முடைத்தாய்வருவது; என்னை?

" நலிபு வண்ண மாய்தம் பயிலும்" (தொல்-பொ-செய்-224.)

என்றாராகலின். வரலாறு:

" எஃகொ டவன்காப்ப வேமாந்தாள் போதந்தாள்
அஃகுநீர்க் கான்யாற் றயன்மண லெக்கர்மே
லிஃதோகின் பாவை திருந்தடிப் பின்றை
யஃதோ விடலை யடி"

எனக் கொள்க.

அகப்பாட்டு வண்ணமென்பது, முடியாதது போன்று முடிவது; என்னை?

" அகப்பாட்டு வண்ணம்,
முடியாத் தன்மையின் முடிந்தன மேற்றே."
(தொல்-பொ-செய்-225.)

என்றாராகலின். வரலாறு:

" பன்மீ னுணங்கற் படுபுள் ளோப்பியும்
புன்னை நுண் டாது நம்மொடு தொடுத்தும்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றித்
தோழி நீங்காமை சூளிற் றேற்றியு
மணந்ததற் கொவ்வான் றணந்து புறமாறி
யினைய ளாகி யீங்குனைத் துறந்தோன்
பொய்த லாயத்துப் *பொலங்கொடி மகளிர்
கோடுயர் வெண்மணை லேறி
யோடுகல மென்னுந் துறைவன் றோழி."

எனக் கொள்க.

புறப்பாட்டு வண்ணமென்பது, முடிந்ததுபோன்று முடியாததன் மேற்று; என்னை?

" புறப்பாட்டு வண்ணம்,
முடிந்தது போன்று முடியா தாகும்" (தொல்-பொ-செய்-226.)

என்றாராகலின். வரலாறு:

" நிலவுமணை லகன்றுறை வலவ னேவ
வின்றி மணிப்புள் ளினமெடுப்ப நெருநலும்
வந்தன்று கொண்கன் றேரே யின்றும்
வருகுவ தாயிற் சென்று சென்று
தோன்றுபு துதைந்த புன்னைத் தாதுகு
தண்பொழின் மெல்லக வனமுலை நெருங்கப்
புல்லி னெவனோ மெல்லிய னீயும்
நல்காது விடுகுவை யாயி னகலும்
படர்மலி யுள்ளமொடு மடன்மா வேறி
யுறுதுய ருலகுட னறியநஞ்
சிறுகுடிப் பாக்கத்துப் பெரும்பழி தருமே"

எனக் கொள்க.

ஒழுகுவண்ண மென்பது, ஓசையினொழுகிக் கிடப்பது; என்னை?

"ஒழுகு வண்ண மோசையி னொழுகும்" (தொல்-பொ-செய்-227.)

என்றா ராகலின்.

---

* 'பொலன்றொடி' என்பதும் பாடம்.

வரலாறு:

"அம்ம வாழி தோழி காதல
ரினமீன் பனிக்கு மின்று வாடையொடு
புன்கண் மாலை யன்பின்று நலிய
வுய்யல ளிவளென வுணரச் சொல்லிச்
சொல்லுநர்ப் பெறினே செய்ய வல்ல
வின்னளி யிறந்த மன்னவர்
பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே"

எனக் கொள்க.

ஒரூஉ வண்ணமென்பது, ஒன்றாத்தொடையாற் கிடப்பது. அஃதியாதோ வெனிற் செந்தொடை; என்னை?

"ஒரூஉ வண்ண மொரீஇத் தொடுக்கும்." (தொல்-பொ-செய்-228.) என்றாராகலின். வரலாறு:

"தொடிநெகிழ்ந் தனவே கண்பசந் தனவே
யான்சென் றுரைப்பின் மாண்பின் றவ்வே
சொல்லாய் வாழி தோழி வரைய
முள்ளில் பொதுளிய வலங்குகுலை நெடுவெதிர்
பொங்குவா ளிளமழை துவைப்ப
மணிநிலா விரியுங் குன்றுகிழ வோர்க்கே."

எனக் கொள்க.

எண்ணு வண்ணமென்பது, செவ்வெண்ணினாலும், உம்மை எண்ணினாலும், என வெண்ணினாலும், என்று வெண்ணினாலும், பிறவும் யாதானுமோ ரெண்ணினாலும் வருவது; என்னை?

"எண்ணு வண்ண மெண்ணுப் பயிலும்" (தொல்-பொ-செய்-230.) என்றாராகலின். வரலாறு:

"பொறையன் செழியன் போர்வேற் கிள்ளி
கொல்லி கொற்கை நல்லிசைக் குடந்தை
பாவை முத்தம் பல்லிதழ்க் குவளை
யாயிழை நல்லா ளரிவை
மாயோள் வெண்பற் சேயரிக் கண்ணே"

எனக் கொள்க. இது செவ்வெண்பெற்றது. பிறவுமன்ன.

அகைப்புவண்ண மென்பது, அறுத்தறுத்துச் சொல்லப்படுவது; என்னை?

"அகைப்பு வண்ண மறுத்தறுத் தொழுகும்" (தொல்-பொ-செய்-230.)
என்றாராகலின். வரலாறு:

"தொடுத்த வேம்பின்மிசைத் துதைந்த பொங்கையிடை
யிசைத்தவாரம் மலைப்பாட்டு ரண்ண லென்பொனியன்ற
சேனைமுர சிரங்கும் தானையெதிர் முயன்ற
வேந்த ருயிர்முருக்கும் வேலின் னவன்"

எனக் கொள்க.

தூங்கல் வண்ணமென்பது, பெரும்பான்மையும் வஞ்சிபயின்று வருவது. என்னை?

"தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்" (தொல்-பொ-செய்-231.)

என்றாராகலின். வரலாறு:

"தென்குமரி வடவிமையமாவெல்லைத் தம்புகழ்
விளங்கக் கடலன்ன படைநாப்பண் மலையன்ன
களிற்றெருத்தின் ஞாயிற்றன்ன சேண்விளங் குந்திறலர்
திங்களன்ன வெண்குடை யுயரிய வொன்னுதார்
மிடல்சாயத் துன்னரிய வகழ்க டந்தவர்
பொன்னுடைய வெயின் முருக்கி யோவத்தன்ன
வினைபுனை நல்விற் கோபத் தன்ன
கனையெரி கவரச் சென்ற வர்திறன்
மழுங்க வாற்றலிற் புலவர்பல புகழ்கொண்டு
பெறலரிய விழுத்தாயம் விறலியர்க்கு மகிழ்ந்து
வீசினை யொன்னார் துப்பிற் றென்னவர்
மருக புல்கினை பசிநோ னுது
கல்பி றங்கிய சுரநீந்தி யிவண்
வந்தநசை வாழ்ந னெனவைத் தெல்லாம்
பிறர்க்கு மீந்ததெல்லா மெனக்காகும் பொருள்கொடுத்தும்
புகழ்கொள்வ னெனவிவற் கீயே னெனக்கிவ
னென்ன வென்னேக் காது நின்னேக்கி
யென்னை விடுமதி வெள்வேல் வழுதி
வெயிற்கதிர் நுழையா வியன்பெருங் காவிற்
றண்புனல் வையை யொண்டுறை தொகுத்த
கோடுயர் மணலினு மேத்திப்
பாடுதும் பெருமநின் னுடைறும் புகழ்ந்தே."

ஏந்தல்வண்ணமென்பது, சொல்லிய சொல்லிற் சிறந்துவருவது;
என்னை?

"ஏந்தல் வண்ணம்,
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்"
(தொல்-பொ-செய்-232.)

என்றாராகலின். வரலாறு:

"கடுவார் கடல்கள் கட லெனப்படா
கடலிற் கடலே கடலுங்—கடல்
அருவிய முல்லை யரும்பவிழு மாலை
பிரியிற் பிரிவே பிரிவு"

எனக் கொள்க.

உருட்டுவண்ண மென்பது, அராகத்தொடைமேல் வருவது; என்னை?

"உருட்டு வண்ண மராகந் தொடுக்கும்" (தொல்-பொ-செய்-233.)

என்றாராகலின். வரலாறு:

"அணிகிளர் சிறுபொறி யவிர்துத்தி மாசுணத் தெருத்தேறித்
துணியிரும் பனிமுந்நீர்த் தோட்டவிழ்ந்து மலர்ந்தனையே
ஆர்கலி யுயரக லெழில்வானத் தமரர்கண முடனேர்ப்ப
*வார்புன லிகன்மிகல மறமல்லனை மாய்க்கலிற் பொங்கினை
முன்னெயிற் றரிமருள்க ணுய்த்தியரொடு விரைகடுக்க
வரைதிர ணிமிர்தடக் கையினனி மலையெடுத் தேந்தினை
காமரு தகைய கல்லியன் மார்பினை
கண்பொரு சுடரொளி நேமியை
பூமலி வினைபுனை தாரினை
பொன்புனை வினைபுனை யுடுக்கையை
அனைபன
பலவுடன் புகழ்த கப்பயந் தோய்கின்
இணைபுணர் கழலடி பரவுதுந்
துணைபுண ருவகையொடு மன்னுது மெனவே"

எனக் கொள்க.

முடுகுவண்ண மென்பது, அடியற்றவழி அறியலாகாதாய், நீண்டவடித்தாய், அராகந் தொடுத்து வருவது; என்னை?

* 'வார்புகல் கழன்மறவர்' என்பதும் பாடம்.

"*முடுகுவண்ணம்,
அடியிறந் தோடு மதனோ ரற்றே" (தொல்-பொ-செய்-234.)

என்றாராகலின். வரலாறு:

"பெருகலி யொலிமலி துணையணி பிறழத்
துயல்வியல் வளனுரை பிதிரவதிரு
மதிவிலங் குருளுடை யிருண்முந்நீர்
அருங்கலங் கவர்ந்தனையே
வகைதகை வளர்தளி ருறுதுயர் வணரிணர்
துணர்புயல் புகையணங் குறுசினை
வினவா வினவி லுயர்வ ராயின
வினைபடக் கிடந்தோய்நின் சூழுறு சுடரொளி
திகழணி மணியலங் கிலங்கவிர் கதிர்முத்தமோ
டெழுந்தியாத்த தொடையமை துணைபுனைவினை
தொடுகழ லடியிணை பரவுதும் யாமே"

எனக் கொள்க.

இவ்வாறு வண்ணவிகற்பமெடுத்தோதினர் தொல்காப்பியனாரும், கையனாரு முதலாக வுடையார்.

அவிநயனார்,

I. 1. தூங்கிசைவண்ணம்,
2. ஏந்திசைவண்ணம்,
3. அடுக்கிசைவண்ணம்,
4. பிரிந்திசைவண்ணம்,
5. மயங்கிசைவண்ணம்
} என்று இவ்வைந்தினையும்,

II. 1. அகவல் வண்ணம்,
2. ஒழுகிசைவண்ணம்,
3. வல்லிசைவண்ணம்,
4. மெல்லிசைவண்ணம்
} என்று இந்நான்கினையும்,

III. 1. குற்றெழுத்து வண்ணம்,
2. நெட்டெழுத்துவண்ணம்,
3. வல்லெழுத்துவண்ணம்,
4. மெல்லெழுத்துவண்ணம்,
5. இடையெழுத்துவண்ணம்
என்று இவ்வைந்தினையும்

* 'முடுகுவண்ண முடிவறியாமல்—அடியிறந் தொழுகு மதனோ ரற்றே' என்பது பல ஏடுகளிற் கண்ட பாடம்.

 -915

கூட்டியுறழ நூறு வண்ணம் பிறக்கும் என்றார். அவை உறழுமாறு:

## தூங்கிசை வண்ணம் 20.

அகவல். குறிலகவற் றூங்கிசை வண்ணம், நெடிலகவற் றூங்கிசை வண்ணம், வலியகவற் றூங்கிசை வண்ணம், மெலியகவற் றூங்கிசை வண்ணம், இடையகவற் றூங்கிசை வண்ணம் எனவும்;

ஒழுகல். குறிலொழுகற் றூங்கிசை வண்ணம், நெடிலொழுகற் றூங்கிசை வண்ணம், வலியொழுகற் றூங்கிசை வண்ணம், மெலியொழுகற் றூங்கிசை வண்ணம், இடையொழுகற் றூங்கிசைவண்ணம் எனவும்;

வல்லிசை. குறில் வல்லிசைத் தூங்கிசை வண்ணம், நெடில்வல்லிசைத் தூங்கிசை வண்ணம், வலிவல்லிசைத் தூங்கிசை வண்ணம், மெலிவல்லிசைத் தூங்கிசை வண்ணம், இடைவல்லிசைத் தூங்கிசை வண்ணம் எனவும்;

மெல்லிசை. குறில்மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், நெடில் மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், வலிமெல்லிசைத் தூங்கிசை வண்ணம், மெலி மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், இடைமெல்லிசைத் தூங்கிசைவண்ணம் எனவும்

இவை குறிலகவற்றூங்கிசைவண்ண முதலிய விருபது தூங்கல் வண்ணம்.

அவைதாம் முதுபிடி நடந்தாற்போலவும், கோம்பி நடந்தாற் போலவும், நாரைநடந்தாற் போலவும் வரும். அவை யொருபுடை யொப்பினாற் றூங்கிசைவண்ண மெனக்கொள்க.

## ஏந்திசை வண்ணம் 20.

அகவல் குறிலகவ லேந்திசை வண்ணம், நெடிலகவ லேந்திசை வண்ணம், வலியகவ லேந்திசை வண்ணம், மெலியகவ லேந்திசை வண்ணம், இடையகவ லேந்திசை வண்ணம் எனவும்;

ஒழுகல் — குறிலொழுக லேந்திசை வண்ணம், நெடிலொழுக லேந்திசை வண்ணம், வலியொழுக லேந்திசை வண்ணம், மெலியொழுக லேந்திசைவண்ணம், இடையொழுக லேந்திசை வண்ணம் எனவும்;

வல்லிசை — குறில் வல்லிசை யேந்திசை வண்ணம், நெடில் வல்லிசை யேந்திசை வண்ணம், வலிவல்லிசை யேந்திசை வண்ணம், மெலிவல்லிசை யேந்திசை வண்ணம், இடைவல்லிசை யேந்திசை வண்ணம் எனவும்;

மெல்லிசை — குறின்மெல்லிசை யேந்திசை வண்ணம், நெடின்மெல்லிசை யேந்திசை வண்ணம், வலிமெல்லிசை யேந்திசை வண்ணம், மெலி மெல்லிசை யேந்திசைவண்ணம், இடைமெல்லிசை யேந்திசைவண்ணம் எனவும் இவை குறிலகவலேந்திசைவண்ண முதலிய இருபது ஏந்திசைவண்ணம்.

அவைதாம் மதயானை நடந்தாற்போலவும், பாம்பு பணைத்தாற் போலவும், ஓங்கிப்பறக்கும் புட்போலவும் வருமெனக் கொள்க.

### அடுக்கிசை வண்ணம் 20.

அகவல் — குறிலகவ லடுக்கிசை வண்ணம், நெடிலகவ லடுக்கிசை வண்ணம், வலியகவ லடுக்கிசை வண்ணம், மெலியகவ லடுக்கிசை வண்ணம், இடையகவ லடுக்கிசை வண்ணம் எனவும்;

ஒழுகல் — குறிலொழுக லடுக்கிசை வண்ணம், நெடிலொழுக லடுக்கிசை வண்ணம், வலியொழிக லடுக்கிசை வண்ணம், மெலியொழுக லடுக்கிசை வண்ணம், இடையொழுக லடுக்கிசை வண்ணம் எனவும்;

வல்லிசை — குறில்வல்லிசை யடுக்கிசை வண்ணம், நெடில் வல்லிசை யடுக்கிசை வண்ணம், வலிவல்லிசை யடுக்கிசை வண்ணம், மெலிவல்லிசை யடுக்கிசை வண்ணம், இடைவல்லிசை யடுக்கிசை வண்ணம் எனவும்;

குறின்மெல்லிசை யடுக்கிசை வண்ணம், நெடின் மெல்லிசை யடுக்கிசை வண்ணம், வலி மெல்லிசை யடுக்கிசை
மெல்லிசை வண்ணம், மெலி மெல்லிசை யடுக்கிசை வண்ணம்,
இடைமெல்லிசை யடுக்கிசை வண்ணம் எனவும்
இவை குறி லகவலடுக்கிசை வண்ணம் முதலிய விருபது அடுக்கிசை வண்ணம்.

அவைதாம் ஒவ்வா நிலத்திற் பண்டியுருண்டாற்போலவும், நாரை யிரைந்தாற்போலவும், தாராவும் தார்மணி யோசையும் போலவும் வரும்.

பிரிந்திசை வண்ணம் 20.

அகவல் — குறி லகவற் பிரிந்திசை வண்ணம், நெடிலகவற் பிரிந்திசை வண்ணம், வலியகவற் பிரிந்திசைவண்ணம், மெலியகவற் பிரிந்திசைவண்ணம், இடையகவற் பிரிந்திசை வண்ணம் எனவும்;

ஒழுகல் — குறிலொழுகற் பிரிந்திசைவண்ணம், நெடி லொழுகற் பிரிந்திசை வண்ணம், வலியொழுகற் பிரிந்திசை வண்ணம், மெலியொழுகற் பிரிந்திசைவண்ணம், இடையொழுகற் பிரிந்திசை வண்ணம் எனவும்;

வல்லிசை — குறில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், நெடில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், வலிவல்லிசைப் பிரிந்திசை வண்ணம், மெலிவல்லிசைப் பிரிந்திசை வண்ணம், இடைவல்லிசைப் பிரிந்திசை வண்ணம் எனவும்;

மெல்லிசை — குறின் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், நெடின் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், வலிமெல்லிசைப் பிரிந்திசை வண்ணம, மெலிமெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், இடை மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம் எனவும்
இவை குறிலகவற் பிரிந்திசைவண்ண முதலிய இருபதும் பிரிந்திசை வண்ணம்.

அவைதாம் பெருங்குதிரைப் பாய்த்தலும், ஒன்று கொட்டியும், இரண்டு கொட்டியு முதலாகவுடைய அறுத்துக்கொட்டுப் போலவும் வரும்.

## மயங்கிசை வண்ணம் 20.

குறிலகவன் மயங்கிசை வண்ணம், நெடிலகவன் மயங்கிசை வண்ணம், வலியகவன் மயங்கிசை வண்ணம், மெலியகவன் மயங்கிசை வண்ணம், இடையகவன் மயங்கிசை வண்ணம் எனவும்;
அகவல்

குறிலொழுகன் மயங்கிசை வண்ணம், நெடிலொழுகன் மயங்கிசை வண்ணம், வலியொழுகன் மயங்கிசை வண்ணம், மெலியொழுகன் மயங்கிசை வண்ணம், இடையொழுகன் மயங்கிசை வண்ணம் எனவும்;
ஒழுகல்

குறில் வல்லிசை மயங்கிசை வண்ணம், நெடில் வல்லிசை மயங்கிசை வண்ணம், வலிவல்லிசை மயங்கிசை வண்ணம், மெலிவல்லிசை மயங்கிசை வண்ணம், இடை வல்லிசை மயங்கிசை வண்ணம் எனவும்;
வல்லிசை

குறின் மெல்லிசை மயங்கிசை வண்ணம், நெடின் மெல்லிசை மயங்கிசை வண்ணம், வலிமெல்லிசை மயங்கிசை வண்ணம், மெலி மெல்லிசை மயங்கிசை வண்ணம், இடை மெல்லிசை மயங்கிசை வண்ணம் எனவும்
மெல்லிசை

இவை குறிலகவன் மயங்கிசை வண்ண முதலிய யிருபது மயங்கிசை வண்ணம்.

அவைதாம் நகரம் இரைந்தாற் போலவும், தாரை இசையும், ஆர்ப்பிசையும், இயமர விசையும் தேரைக் குரலும் போலவும் வரும்.

சூறைக் காற்றும், நீர்ச்சுழியும்போல வருவது அகவல் வண்ணம்; நீரொழுக்கும், காற்றொழுக்கும்போல வருவது ஒழுகல் வண்ணம்; தோற்கயிறும் இரும்புந் திரித்தாற்போலவும், கன்மேற் கல்லுருட்டினாற் போலவும் வருவது வல்லிசை வண்ணம்; அன்ன நடையும் தண்ணம் பறையும் போலவும், மண்மே னடந்தாற் போலவும் வருவது மெல்லிசை வண்ணம்; இவை தொழில் வகையால் ஒருபுடையொப்புமை காட்டியவாறு.

இவை நூறு வண்ணமும் தம்முண் மயங்கி வரினு மிக்கதனாற் பெயர்கொடுத்து வழங்கப்படும்.

---

* 'தன்னம்பறை' என்பதும் பாடம்.

" தூங்கேந் தடுக்குப் பிரிதன் மயங்கிசைவைத் துப்பின்னும்
ஆங்கே யகவ லொழுகன் வலிமெலிப் பாற்படுத்துப்
பாங்கே குறினெடில் வல்லிசை மெல்லிசை யோடிடையுந்
தாங்கா துறழ்தரத் தாம்வண்ண நூறுந் தலைப்படுமே"

—யாப்பருங்கலக்காரிகை.

இதனை விரித்துரைத்துக் கொள்க.

வரலாறு:

" வினையொழி பொழுதின்கட் செல்வமே போலவஃகிச்
சுனையெழு குவளையு மாம்பலுந் தீய்ந்துவாடிக்
கனையெரி கழைதீண்டிக் காடுவெந் *தோடுகல்லா
நனைவு ளெழில்வேழ நாவைசந் தெய்தியாங்கு"

இன்னவும், ஆசிரியங்களும், பாவைப் பாட்டும், அன்ன பிறவும் குறிலகவற்றூங்கிசைவண்ணம் எனப்படும். இவற்றை ஐந்தெழுத் தின்மேலு மொட்டிக்கொள்க.

" கோல மலர்கொண்டு சிலமந்தி மலைவுடைத்தாய்ச்
சோலை தொறுந்தாழ்ந்த பொழிற்சோர்வி லுயாவிஞ்சை
நீலமடுக் கண்ணினவர் நீடுநனி யேத்தச
சீலமிகு நாதரடி சேரவினை சேரா"

இன்னவும், வஞ்சியும், வஞ்சிப்பாவினமும் ஒழுகிசைத்தூங்கல் வண்ணம் எனப்படும். இவற்றையு மைந்தெழுத்தின்மேலு மொட் டிக்கொள்க.

" ஏறுயர் கொடியி னிருவிசும் பதிரு மெறிமுரச திர்கடற் றூனை
வீறுயர் மணிக்கால் வெண்குடை யோங்கு தண்டுறை யின்பழை [யாற்று
மாறடு படிவ மதியுறுந் தருண மாதவ னேதமில் பாதம்
வீறடு நெறிக ளாழ்கதி வீழ விளங்கிய விழுத்துணை யாமே"

என இச்சந்தத்தனவும்,

" பூவினூர்பொழிற் பிண்டியின் கீழ்ப்பொருவறு திருநகர்ப் பொன் [னெயிலுள்
மாவினூர் நலனேக்கி னல்லா பலர்பணிந்து வந்தடிவணங்கி"

* 'ஒடுக்கல்லா' என்பதும் பாடம்.

என இன்ன வண்ணத்தனவு மெல்லாம் வல்லிசைத் தூங்கல்வண்ணம் எனப்படும். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

"தேனினூர் மலர்ப்பிண்டியி னீழற் றேவரேத்த
வானினூர் குடையா னடிநாளும் வணங்குதுமே"

" தாழி யோங்குமலர்க் கண்ணவர் தண்ணடி
பாழியோங்கு புனலார் பழையாற்றுள்
காழினின்றம் மதியான் மதிசேர்ந்து
வாழி யென்று வணங்க வினைவாரா"

என இன்னவை யெல்லாம் மெல்லிசைத் தூங்கல்வண்ணம் எனப்படும். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

"களவினுற் கொணர்ந்த வெண்காணமும் விழுப்பொன்னு
முளவெனினும் யான்றுய்ப்ப வுலவாது கிடந்தமையால்
வளையினுற் பொலிந்தகை வாட்கண்ணுள் வழிபடு
களைவாரிற் கனையிருட்கட் காணேன்மற் றிதுவல்லால்"

என இன்னவுங், கலிப்பாக்களும், தும்பிப்பாட்டும் குறிலகவ லேந்திசைவண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

"வரையென மாடங்க ளோங்குபு வீதியின் வஞ்சிமன்னவன்
புரைபுரை நின்றலர் பூந்தொடையற் பொறையன்று னருளானேற்
கரையெனக் காலையுங் காண்பரிய கடல்போலுங் கௌவையு
மரையின மேகலை யோடவோடு மிவளாவி யாற்றுதே"

என இன்னவையாகிய சிறுவிருத்தங்களும், வெண்பாக்களும், வெள்ளொத்தாழிசைகளும் எல்லாம் குறிலொழுக லேந்திசைவண்ணம். இவற்றையு மைந்தெழுத்தின்மேலு மொட்டுக.

"நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் * சூடாள்
பொறிமாண் வரியலவ †னுடலு மாடாள்
சிறுநுதல் வேர்வரும்பச் சிந்தியா நின்றுட்
செறிநீர்த்தண் சேர்ப்பயா னென்சொல்லிச் ‡ செல்கோ"

இதுவுமது.

* 'சூட்டாள்' என்பதும் பாடம். † 'ஆட்டலு மாட்டாள்' என்பதும் பாடம். ‡ 'சொல்கோ' என்பதும் பாடம்.

" இட்டகன் றனை யானினி யென்செய்கோ
கட்டெழி லழகா கடிதென்னவே
மட்டெழின் மலர்த்தார்ப் பொலிமார்பனுங்
கெட்டெழுந் திறைகூறுவ னேவெனு"

" பறைபட்டன பட்டன சங்கொலி
முறைவிட்டன விட்டன முன்னுவலாத்
*திறல்விட்டனர் கொட்டினர் திண்கலிமா
கிறைகொட்டின ரொட்டினர் நீண்முழவால்"

என இன்னனவும் குறில் வல்லிசை யேந்திசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

" மான்வீடு போழ்திற் பிணையின்னுயிர் போவதேபோல்
யான்வீடு போழ்தி னிதுவேகொ னினக்குமென்னத்
தேனூறு மின்சொன் மடவாயமு தாற்றகில்லாய்
வானூடு போய வரைகாணிய சென்றகாலை"

என இன்னவும் உழுவரோதை யெனப்படுவனவும் குறின்மெல்லிசை யேந்திசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

" கொடியிடை மாதர் மேனி குவளைமல ருண்க ணென்றும்
பிடிநடை மாதர் மாண்ட நடைதானென வேறு செய்தும்
வடிவொடு வார்ந்த மென்றோள் வளைசேர்ந்தகை காந்த ளென்று
மிடையிடை நின்று நின்று பலகாலு முவப்ப தென்னே"

என இன்ன பிறவும், எழுசீரடியால் வந்தனவும் எல்லாம் குறிலகவல் அடுக்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

" மாலையால் வாடையா லந்தியான் மதியான்
மனமுனை முணர்வது நோயுறச்செய்த
சோலையாற் றென்றலாற் சுரும்பிவர் பொழிலாற்
சோர்தரு காரொடு விரிதரு பொழுதே
கோலவால் வளையாற் கொடுப்பறி யானேற்
கொள்வது முயிரொடு பிறரொடுபோ லன்றே

* 'திறைவிட்டனர்' என்பதும் பாடம்.

தாலையார் வரவே காதலு மாங்கோர்
காலையென் னுங்கட னீந்திய வினையே"

என இன்னவும் பிறவும் எண்சீரடி மிக்கு வருவனவும் குறிலொழுக லடுக்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலு மொட்டிக் கொள்க.

"கடியான் வெயிலெறிப்பக் கல்லளையுள் வெதும்பிய கலங்கற் சின்னீர்
அடியா லுலகளந்த வாழியா னுக்கிய வமிழ்தென் றெண்ணிக்
கொடியான் கொடுப்பக் குடங்கையாற் கொண்டிருந்து குடிக்க [றேற்றான்
வடியேர் தடங்கண்ணி வஞ்சிக்கொம் பீன்றாளிவ் வருவா ளாமே"

எனவும்,

"அடைமின்சென் றடைமின்சென் றவனுக்கிய
சினகரத் திறைவன் றாளை"

எனவும் அறுசீரடியால் வருவன வெல்லாம் குறில் வல்லிசை யடுக்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஓட்டிக் கொள்க.

"பிடியுடை நடையடு நடையின டெரியிற்
கடிபடு மிலமல ரடிநனி தனதாந்
துடியிடை யடுமிவ ணடுவொடி வதுபோல்
வடுவடி யடுமிவ ணெடுமலர் புரைகண்"

எனவும்,

"கடுமுடைய நாறுகரு மேனியின ளாகிப்
படுமுடையுண் மாகுலவர் பாத்துண லுமியார்
இடமுடைய காடுநனி போகெனலும் போகித்
தடமுடைய *கன்முழையி னுடமிய ளாகி"

என இன்னவை யெல்லாங் குறில்மெல்லிசை யடுக்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

"சூரலும் பிரம்புஞ் சுற்றிய"

எனவும்,

* 'கண்முழை' என்பதும் பாடம்.

" முன்றி னின்ற முடமுதிர் பெண்ணைமேல்
அன்றில்கா னும்மை யாற்ற வினவுதும்
தோன்று காலந் தொடர்ந்துட னுடினள்
சென்றுழிச் செல்லுஞ் செந்நெறி யாதென"

எனவும்,

" குரவ ணங்கிலை மாவொடு சூழ்கரைச்
சரவ ணம்மிது தானனி போலுமா
லரவ ணாகுவி லாண்டகை சான்றவன
பிரிவு ணாந்துடன் வாரல னென்செய்கோ"

எனவும் இன்னவை யெல்லாங் குறிலகரப் பிரிந்திசை வண்ணம்.
இவற்றைப் புணைந்தெழுத்தின்மேலு மொட்டிக் கொள்க.

அறிவல் லறிகல் லமுதே யமுதே
யெறிவெண் டிரைமீ திசலிற் றறிவல்
லிறுகல் லிறுகல் லிதுகே ளிதுகேள்
பெறுவல் பெறுவல் பிழைப்பொன்று பேறாய்" 6

எனவும்,

" தேனமருந் திருவாரிள வேனிலின்
மானமரு மடநோக்கியர் நோக்காய்
தானுருகல் லெயிறுங்கி னின்றாய்காரி
* யாமகலா தடியஞ்சலி செய்தும்"

எனவும்,

" கதிர்கொண் மதியுங் கனபொன் களிறும
பயில்கொண் டுபரந் தழகா கியினி"

எனவும இன்னவை யெல்லாங் குறிலொழுகற் பிரிந்திசை வண்ணம்.
இவை புணைந்தெழுத்தின்மேலு மொட்டிக் கொள்க.

" துடித்தடித் திமிழ்தரு துளங்குவெள் ளருவிநீர்த்
தொடுத்தெடுத்த மாலைபோற் றொடர்ந்துதோன்றுந் தூய்மைசால்
அடுத்தடுத் திரைபுக லசைவில்சீ ருசசந்தம்
மடுத்தடுத்து வைகலு மறத்தலின்றி வாழ்த்துவாம்"

* 'யானகலாது' என்பதும பாடம்.

என இன்னவை யெல்லாங் குறில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம். இவற்றையு மைங்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

"சிந்தி வீழ்ந்த கதிர்ச்செய்ய வெய்யோனொளி
யுந்தி நீண்ட குடையொருவ னல்கானெனின்
முந்தி யோடும் வளைமுல்லை மெல்லரகு
மந்தி யாகின்ற தாலாவி யாதாங்கொலே"

என இன்னவை யெல்லாங் குறின்மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம். இவற்றையும் ஐங்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

"வாங்குபு கொள்ள நின்றாள் வாரண வாசி மன்னன்
தேங்கம ழொலிமென் கூந்தற் றேவிநாட் டீன்ற மங்கை
யாங்கவ ளருகலல்லா ளத்தின புரராசன்
வான்புகழ் மங்கை வாகைப் பூநிற மன்ன மேனி"

என இன்னவை யெல்லாங் குறிலகவன் மயங்கிசை வண்ணம். இவற்றையும் ஐங்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

ஆசைப் படுக வருந்தவங் கல்வியல் லாப்*பிறகள்
பேசப் படுவ திலமிவை யாவை பிறப்பாம்
தேசத் தியற்கை தெரிந்துணர் வார்க்குச் சேயிழைமார்
பாசப் படுகுழிப் †பற்றறுத் தார்வினைப் பற்றறுத்தார்

என இன்னவை யெல்லாங் குறிலொழுகன் மயங்கிசை வண்ணம். இவற்றையும் ஐங்தெழுத்தின்மேலு மொட்டிக் கொள்க.

"தாமத் தூண்களைத் தருக்கொடு முருக்குதன் முரணும்
தூமத் தூவக லெடுத்துக்கொண் டுழையவ ரறியும்
வாமத் தோள்களின் வலித்தன்ன புடைத்தெடுத தாற்றும்
பேய்மைத் தீத்தொழில் பெருகிய தரசனு முணர்ந்தான்"

என இன்னவை யெல்லாங் குறில்வல்லிசை மயங்கிசை வண்ணம். இவற்றையும் ஐங்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

"உருகார்தம் மின்னுயிர்காத் தொழியலாமோ வுணர்ந்தார்க்கு
வருகார்போல் வளஞ்சுரந்திவ் வையங்காக்கும் வயமாறன்

---

* 'பிறர்கள்' என்பதும் பாடம்.

† 'பாற்றறுத்தார்' என்பதும் பாடம்.

முருகார மார்பினன் முரசமார்ப்ப முல்லைகாள்
*குருகார்பௌவ முண்டிருண்ட கொண்டலென்று குழைத்திரோ"

எனவும்,

\ "கண்ணுடையா ரவர்கண்டார் கண்ணிலபுண் பிறவெல்லாம்"

எனவும் இன்னவை யெல்லாங் குறின்மேல்லிசை மயங்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலு மொட்டிக்கொள்க.

இவற்றில் ஒரு வண்ணத்தாலேயும் பல வண்ணத்தாலேயும் வரும். இப்பெற்றிய கடையில்லா விகற்பமாம். அவற்றை ஒரு விகற்பத்தாற் சொன்னவாறு. பிறவகைபால் வரும் வண்ணங்களையும் †ஒருவண்ணங்களையும் உரைத்தவற்றோடு ஒருபுடை யொப்புமையாற் சார்த்தியுணர்க. என்னை?

"தூங்கேர் தடுக்கல் பிரிதன் மயங்கிசை வைத்துப்பின்னு
‡மாங்கே யகவ லொழுகிசை வன்மையு மென்மையுமா
வாங்கே குறினெடில் §வல்லிசை மெல்லிசை யோடிடையும்
தாங்கா துறழ்தரத் தாம்வண்ண நூறுந் தலைப்படுமே"

—யாப்பருங்கலக் காரிகை.

எனக் கொள்க.

தூங்கிசை வண்ணம், ஏந்திசை வண்ணம், அடுக்கிசை வண்ணம், பிரிந்திசை வண்ணம், மயங்கிசை வண்ணம் என இவ்வைந்தினையும்; அகவல் வண்ணம், ஒழுகல் வண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம் என்றிந் நான்கினையும்; குற்றெழுத்து வண்ணம், நெட்டெழுத்து வண்ணம், வல்லெழுத்து வண்ணம், மெல்லெழுத்து வண்ணம், இடையெழுத்து வண்ணம் என இவ்வைந்தினையுங் கூட்டிக் குறிலகவற்றூங்கிசை வண்ணம், நெடிலகவற்றூங்கிசை வண்ணம், வலியகவற்றூங்கிசை வண்ணம், மெலியகவற்றூங்கிசை வண்ணம், இடையகவற்றூங்கிசை வண்ணம் என்றிவ்வாறெல்லா முறழ்ந்துகொள்ள நூறு வண்ண விகற்பமாம்.

* 'குருகாரம்' என்பதும் பாடம்.
† 'ஒரூஉ வண்ணங்களையும்' என்பதும் பாடம்.
‡ 'பாங்கே' என்பதும் பாடம்.
§ 'வல்லின மெல்லின மோடிடையும்' என்பதும் பாடம்.

இனி வழு வென்பது குற்றம், அது நான்கு வகைப்படும். எழுத்து வழுவும், சொல் வழுவும், பொருள் வழுவும், யாப்புவழுவு மென. அவற்றுள், எழுத்து வழுவாது எழுத்ததிகாரத்தோடு மாறு கொள்வது. வரலாறு:

"வெறிகமழ் தண்சிலம்பின் வேட்டமே யன்றிப்
பிறிதுங் குறையுடையான் போலுஞ்—செறிதொடீஇ
தேமா னிதணத்தா னுமாக நம்புனத்தே
மாமான்பின் வந்த மகன்"

என விதனுள் 'தேமா' எனற்பாலதனைத் 'தேமான்' என னகர வொற்றுக் கொடுத்தமையால் எழுத்து வழுவாயிற்று. என்னை?

"முன்னிலை நெடிலு மாவு மாவும்
னம்மிகப் புணரு மயங்குதிணை யான"

என்றாராகலின்.

சொல்வழுவாது, சொல்லதிகாரத்தோடு மாறு கொள்வது; ?

"சொல்லின் வழுவே சொல்லோத்து மரபிற்
சொல்லிய குற்றந் *தோன்ற லாமே"

என்றாராகலின். வரலாறு:

"இசையெல்லாங் கொட்ட வெழிற்றானை யூர்ந்து
வசையிலா மன்னர்வந் தேத்த—இசையும்
அடிசில் பருகி யணியார்த்துப் போந்தான்
கொடிமதிற் கோழியார் கோ"

இதனுள் "இசையெல்லாமார்ப்ப" எனவும், "எழிற்றானை நாப்பண்" எனவும், "அடிசி லயின்று" எனவும், "அணியணிந்து போந்தான்" எனவும் இவ்வாறு பொதுவினுலெடுத்துக்கொண்டு பொதுவினுன் முடித்தற்பாலனவற்றைப் பொதுப்பெயரா லெடுத்துக்கொண்டு சிறப்புவினையான் ஒன்றற்கே யுரியசொற் புணர்த்தமையாற் சொல்வழுவாயிற்று. என்னை?

* 'தோன்றலாகும்' என்பதும் பாடம்.

"வேறுவினைப் பொதுச்சொ லொருவினை கிளவார்"
(தொல்-சொல்-கிளவி-46.)

எனவும்,

"வேறுவினை யுடைய பொதுவினை கிளப்பப்
பொதுவினை யுடைய வேற்றுமை யுண்டோ"

எனவுங் கூறினாராகலின்.

பொருள் வழுவாவது, பொருளதிகாரத்தோடு மாறுகொள்வது. என்னை?

"பொருளின் வழுவே தமிழ்நடைத் திரிவே"

என்றாராகலின். வரலாறு:

"முன்னுந் தொழத்தோன்றி முன்னெயிற்று யத்திசையே
இன்னுந் தொழத்தோன்றிற் றீதேகாண்—மன்னும்
பொருகளிமால் யானைப் புகழ்க்கிள்ளி பூண்போற்
பெருகொளியான் மிக்க பிறை"

இது நாணநாட்டம்.

"பண்டிப் புனத்துப் பகலிடத் தேனலுட்
கண்டிக் களிற்றை யறிவன்மற்—றிண்டிக்
கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணாய்
உதிர முடைத்திதன் கோடு"

இது நடுங்கநாட்டம். இவை யிரண்டும் பொருளதிகாரத்தோடு மாறுகொண்டன. என்னை?

"நாணவு நடுங்கவு நாடா டோழி
காணுங் காலைத் தலைமக டேத்து"

என்றாராகலின்.

"வாளை மேய்ந்த வளைகோட்டுக் குதிரை
கோழிலை வாழைக் கொழுமட லுறங்கும்
ஊரன் செய்த கேண்மை
தேரை வாலினும் பெரிதா கின்றே"

இதுவும் பொருளின்மையாற் பொருள்வழுவாயிற்று.

யாப்பு வழுவாவது, யாப்பதிகாரத்தோடு மாறுகொள்வது; என்னை ?

"யாப்பின் வழுவே யாப்பின திலக்கணம்
கோப்ப வாராக் கோவைத் தாகும்"

என்றாராகலின். வரலாறு:

"குமண வாழி குமண வுமணருப்பிற்
றேய்களின் பகையே யான்சில
பெருமை வேண்டி வந்தே
னீனின் பெருமை வேண்டிற்று"

இப்பாட்டு முதலெடுத்துக்கொண்ட வோசையிற் கெட்டுப் பின் பரவிக் கட்டுரையால் வந்தமையால் யாப்புவழு. பிறவு மன்ன.

அறுத்திசைப்பும், வெறுத்திசைப்பும், அகன்றிசைப்பும் என்னும் ஓசைக்குற்றம் வருமாறு:

"வீங்குமணிவிசித்த விளங்குபுனைநெடுந்தேர்
காம்புநீடு மயங்குங்காட்டுட்
பாம்புபெரிது வழங்குதோறுந்கு
வயங்குகலிமா விரைபுவிரைபு
வலவன்வாம்பரி கடவிவந்தோன்
கெழூஉமணியகலந் தழூஉமதிவிரைந்தே"

இது நாலசைப் பொதுச்சீர் பலவும் வந்து வஞ்சிதூங்கினமையின் அறுத்திசைப் பென்னுங் குற்றமாயிற்று.

"ஓங்கிலை வேலோ னொளியா லளிபெற்ற
பூந்துடியாய் போன்றேமும் யாமேமற்—றேய்ந்து
தகைமொய்ம்பிற் றாழ்தடக்கைத் தண்ணருவி நாடன்
பகைமுனை போன்றேமும் யாம்"

இதனுள் 'தகைமொய்ம்பிற் றாழ்தடக்கை' என்புழி வஞ்சி தூங்கிசைத்தமையால் வெறுத்திசைப்பு.

"சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கா னாளை
பெறுநன்றி மன்னும் பெரிதென்—றுறுநன்றி
தானவாய்ச் செய்வதூஉந் தானமன் றென்பவே
வானவா முள்ளத் தவர்"

இதனுள் 'சிறுநன்றி யின்றிவர்க்கியாம்' என்புழிக் குற்றிய லிகரம் வந்து வெட்டென்று இன்னோங்கா யிசைத்தமையால் வெறுத் திசைப் பாயிற்று.

"கற்றற் றற்ற சுடற்ற கடற்றிரை
விற்றற் றற்ற வில்லேர் புருவத்தவன்
சொற்றற் றற்ற சுடர்க்குழை மாதரோ
டுற்றற் றற்றதென் னெஞ்சு"

இதுவும் வெறுத்திசைப்பு.

"கானக நாடன் கருங்கோன் பெருமலைமே
லானை கிடந்தாற்போ லாய பெருங்கற்க
டாமே கிடந்தன கொல்லோ வவையேற்றிப்
பெற்றிப் பிறக்கி வைத்தா ருளர்கொல்லோ"

இது முன் செய்யுளாய்வந்து இறுதி பரவிக் கட்டுரையால் வந்த மையால் அகன்றிசைப் பென்னுங் குற்றமாயிற்று. இதுவும் யாப் புக் குற்றத்துள்ளே பட்டடங்கும். பிறவு மன்ன. இன்னும் 'வழு' என்பதனாலே ஆனந்த முதலாகிய குற்றங்களு மறிந்துகொள்க. பிறவு மன்ன.

'திண்ணிதி னடத்த றெள்ளியோர் கடனே' என்பதனால் அவற் றை யெல்லாம் பிழையாமே நடாத்துதல் புலவர்கள் கடன் என்ற வாறு. இச்சூத்திரத்துட் 'பிறவும்' என்று சொல்லியவதனானே நூலும், சூத்திரமும், ஒத்தும், படலமும், பிண்டமும் ஆமாறும் அடியின்றி நடப்பனவும் ஓரடியாய் நடப்பனவும், புனைந்துரையாய் நடப்பனவும் ஆமாறு உணர்ந்து கொள்க.

நூலாவது, மூவகைத்தாய், மூவரினடைபெற்று, நால்வகைப் பயத்ததாய், எழுவகை யாசிரிய மதவிகற்பத்ததாய்ப், பத்துவகைக் குற்றத்திற்றீர்ந்து, பத்துவகை மாண்பிற்றாய்ப், பதின்மூன்று வகை பான் உரைபெற்று, முப்பத்திரண்டு தந்திர வுத்தியொடும் புணர்ந்து வருவது.

அவற்றுண், மூன்றுவகையாவன, தந்திரம், சூத்திரம், விருத்தி யென விவை.

மூவரினடைபெறுத லென்பது, அம்மூன்றும் நடாத்துவார் மூவராசிரியர் எனக்கொள்க.

நால்வகைப்பயனுவன, அறம், பொருள், இன்பம், வீடென்பன.

எழுவகை யாசிரிய மதவிகற்பமாவன, உடம்படுதல், மறுத்தல் என்பன முதலாகவுடையன எனக்கொள்க.

பத்துவகைக் குற்றமாவன, குன்றக்கூறன் முதலாகவுடையன எனக்கொள்க.

பத்துவகை மாண்பாவன, சுருங்கவைத்தன் முதலாகவுடையன எனக்கொள்க.

பதின்மூன்றுவகை யுரையாவன, சூத்திரந்தோற்றன் முதலாகவுடையன எனக்கொள்க.

முப்பத்திரண்டு தந்திர யுத்தியாவன:

"நுதலிப் புகுத லோத்து முறைவைத்தல்
தொகுத்துக் காட்டல் வகுத்துக் காட்டல்
முடிவிடங் கூறன் முடித்துக் காட்டல்
தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்
சொற்பொருள் விரித்த லிரட்டுற மொழிதல்
ஏதுவின் முடித்த லெடுத்த மொழியி
னெய்த வைத்த லின்ன தல்ல
திதுவென மொழித றன்னின முடித்தல்
எஞ்சிய சொல்லி னெய்தக் கூறன்
மாட்டெறிந் தொழிதல் பிறநூன் முடிந்தது
தானுடம் படுத றன்குறி வழக்க
மிகவெடுத் துரைத்த லிறந்தது விலக்கல்
எதிரது போற்றன் முன்மேற் கோடல்
பின்னது நிறுத்த லெடுத்துக் காட்டல்
முடிந்தது முடித்தல் சொல்லின் முடிவின்
அப்பொருண் முடித்த றொடர்ச்சொற் புணர்த்தல்
யாப்புறுத் தமைத்த லுரைத்து மென்றல்
விகற்பத்து முடித்த றொகுத்துடன் முடித்தல்
ஒருதலை துணித லுய்த்துணர வைத்தல்"

எனவிவை; பாடலனாருரை.

"நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலு முடிவு மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி

உண்ணின் றகன்ற வுரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே."(தொல்-பொ-செய்-167)

"அதுவே தானு மீரிரு வகைத்தே" (ஷை-ஷை-ஷை-168.)

"ஒருபொரு ளுதலிய சூத்திரத் தானு
மினமொழி கிளந்த வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானு
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்
றாங்கனை மரபி னியலு மென்ப." (ஷை-ஷை-ஷை-169.)

"அவற்றுட், சூத்திரந் தானே
யாடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே." (ஷை-ஷை-ஷை-170.)

"நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவா" (ஷை-ஷை-ஷை-.171.)

"ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரின தது படல மாகும்." (ஷை-ஷை-ஷை-172.)

"மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயிற்
றோன்றுமொழிப் புலவர துபிண்ட மென்ப." (ஷை-ஷை-ஷை-173.)

இவை நூலும், சூத்திரமும், ஒத்தும், படலமும், பிண்டமும் ஆமாறு சொன்னவாறு. இவை யெல்லா முன் சொல்லிப் போந்தன வன்றோ வெனின், உரைப்பான் புகுகின்றுழி இது நூலாமாறு என்று காட்டிற்றல்லது, இந்நூலுட் சூத்திரத்தின் பொருள் என்று அப் பொழுது சொல்லிற்றில்லை யெனக்கொள்க.

"உரையொடு நூலிவை யடியில நடப்பினும்
வரைவில வென்ப வாய்மொழிப் புலவர்"
"மொழிபிறி முதுசொ னென்று மன்ன"

என்றார் பல்காயனார்.

"உரையு நூலு மடியின்றி நடப்பினும
வரைவில வென்ப வயங்கி யோரே"

வாய்மொழி பிசியே முதுசொல் லென்றாங்
காமுறை மூன்று மன்ன வென்ப"

என்றார் நத்தத்தனார்.

இவை அடியின்றி நடப்பன உரைத்தவாறு.

"செயிர்தீர் செய்யுட் டெரியுங் காலை
யடியி னீட்டத் தழுகுபட் டியலும்"

* "ஒரோவடி யானு மொரோவிடத் தியலும்"

"அவைதாம்,

பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் லங்கதம் வாழ்த்தொடு பிறவும்
ஆக்கின வென்ப வறிந்திசி னோரே"

என்றார் † பல்காயனார்.

இவை ஓரடியா னடப்பன வுரைத்தவாறு.

புனைந்துரை யிருதிறத்தன, பெரியதனைச் சுருக்கிச் சொல்லுதலும், சிறியதனைப் பெருக்கிச் சொல்லுதலும் என. என்னை?

"உரைக்கப் படும்பொருட் கொத்தன வெல்லாம்
புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை யாகும்."

என்றாராகலின். வரலாறு:

"அடையாரூங் கோதையாட் கல்குலுந் தோன்றும்
புடையார் வனமுலையுந் தோன்று—மிடையாதும்
கண்டுகொளா தாயினுங் காரிகை நீரமையாட்
குண்டாகல் வேண்டு நுசுப்பு."

"அயிர்ப்பாக னொக்குவேன் கண்டேன் ‡ மயிர்ப்பாகிற்
பாகத்திற் பாக நுசுப்பு"

என இவை பெரியதனைச் சுருக்கின.

"கடைக்கணார் கின்றிட்ட பூசல் கடைக்கணார்
கேளாமே நீண்டன கண்"

எனவும்,

"பொன்மலி கூடற் பூமலி கச்சி
மாரி யீகை மணியணி மாடம்"

---

* 'ஓரடி யானும்' என்பதும் பாடம்.

† 'அவிநயனார்' என்பதும் பாடம்.

‡ 'மயிர்ப்பாதி' என்பதும் பாடம்.

எனவும் இன்னவை யெல்லாம் சிறியவற்றைப் பெருக்கின. பிறவு மன்ன.

இன்னும் 'வண்ணமும் பிறவும்' என்றதனாலே, நாலசைச் சீரின் றியே நடாத்துமாறும், நான்கசையும் எண்பத்திரண்டுசீருங் கொண்டு இயற்று மாறும், எழுபது தளைவழுவிற்றீர்ந்த அறுநாற் றிருபத்தைந் தடியும் ஆமாறும், சந்தமும் தாண்டகமும ஆமாறும, பாக்கட்கு வருணமுதலாயினவற்றை வகுத்து வழங்குமாறும் உரைத்துக் கொள்க. அவை சொல்லுமாறு:

"குற்றுகர மொற்றாக்கிக் கூன்வகுத்தச சிந்தியற்றி
மற்று நெடிலும் வகையுளியுஞ்—சொற்றபின்
மேலசைச்சீர் நாட்டி யளபெடையை வீறழித்தா
னாலசைச்சீர்க் கில்லை நடை"

என்பது எழுநயமுந் தொடுத்தவாறு.

"காக்கை பாடினி யார்முத லாகிய
மாக்க விப்புல வோர்மதம் பற்றியீங்
கூக்க மின்மை யுண்டாமுக ரத்தையொற்
றாக்கி னாலசைச் சீரணை யாதரோ"

இதன் கருத்து,

"குண்டுநீடுநீர் குவளைத்தண்சுனை"

எனவும்,

"குறித்துக்கூடுவோர் நெறிமயங்கல்"

எனவும்,

"போதுசேர்ந்து கூடுபொறிவண்டினம்"

எனவும்,

"புரிந்தவர்க்கு வீங்குரம்பிவர்தல்"

எனவும்,

"கொன்றுகோடுநீடு குருதிமாறவும்"

எனவும் இத்தொடக்கத்தனவற்றுள் ஐயசைச்சீரும் ஆறசைச் சீரும் வந்தனவற்றைக் காக்கைபாடினியார் முதலாகிய வொருசார் ஆசிரியர்,

"இஉ விரண்டன் குறுக்கந் தளைதவ
விற்புழி யொற்று நிலைமைய வாகும்"

எனவும்,

"இஉ விரண்டன் குறுக்கந் தளைதவின்
ஒற்றெழுத் தாகு முயிரள பெடையும்"

எனவும்,

"சீர்தளை சிதைவுழி யீருயிர்க் குறுக்கமு
நேர்த லிலவே யுயிரள பெடையும்"

எனவும்,

"உயிரள பெடையுங் குறுகிய வுயிரின்
இகர வுகரமுந் தளைதவி னொற்றாஞ்
சீர்தவ வரினு மொற்றியற் றாகும்"

எனவும்,

"ஐந்தா றசையி னருகி யுகரத்தின்
வந்தசீ ரொன்றிரண்டொற் றொப்பித்து—நந்துவித்தால்
வஞ்சிப்பா விற்கியலு நாலசைச்சீ ரல்லுரிச்சீர்
தங்கி விரவத் தகும்"

எனவும் இவ்விலக்கணங்களினாலே ஆண்டுக் குற்றியலுகரங்களை ஐய
சைச் சீரும் ஆறசைச் சீரும் அல்லவென்று அவ்வாறே யவற்றையுங்

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்" (பத்துப்-பட்டின-1.)

எனவும்,

"சோறுவாக்கிய கொழுங்கஞ்சி" (பத்துப்-பட்டின-44.)

எனவும்,

"களிறுவழங்குதெருவி னெடுந்தேரேறி"

எனவும்,

"திரைந்து திரைந்து திரைவரத் திரண்முத்தங் கரைவாங்கி
விரைந்து விரைந்து சிறுதளைச்சியர் நெடுங்கானல் விளையாடவும்"

எனவும்,

"இரவுவரவு பேரின்றொநெறி"

எனவும் வரும் இத்தொடக்கத்தனவற்றையும் இவ்விலக்கணத் தாலும்,

'தளைசீர் வண்ணந் தாங்கெட வரினே
குறுகிய விகரமுங் குற்றிய லுகரமும்
அளபெடை யாவியு மலகியல் பிலவே' (யாப்பருங்கலம்-4.)

என்னும் இவ்விலக்கணத்தாலும் குற்றுகரங்களை யொற்றாக்கிக் கொள்ள மூவசைச் சீரே யாமென்பது.

நேர்பசை நிரைபசை வெண்டுமாசிரியர்க்கு அவையெல்லா மூவசைச் சீரேயாம் எனக்கொள்க.

" குற்றிய லிகரமுங் குறுக லின்றியே
மற்றுல நாலசை வந்த வாவெனின்
முற்றிய முதனடு விறுதி வஞ்சியுட்
குற்றமில் கூன்வரக் குற்ற மில்லையே"

என்பதன் கருத்து, " அடி, யதர்சேர்தலி னகஞ்சிவந்தன " எனவும், "மா, வேறித் தானிடங்காட்ட" எனவும், "மண்கொண்ட-குழி-குவளை பூக்குந் தண்சோணாட்டுப் பொருநன் " எனவும், " கலங்க மூவிற்-றுறை-கலக்கானு " எனவும், " மாவழுங்கலின் மயக்குற்றன, வழி " எனவும், " தேனூறுபூந் தெரிகுவளை, மிசை " எனவும் இத் தொடக்கத்தனவற்றுட் குற்றுகர மின்றியேயும் நாலசைச்சீர் வந் தனபிற வெனின், அவற்றுள் அடியென்பதும், மாவென்பதும் முதற் கட்கூனுகவும், குழியென்பதும், துறையென்பது மிடைக்கட் கூனுக வும், வழியென்பதும், மிசையென்பதும் கடைக்கட் கூனுகவும் வைப்ப நாலசைச்சீர் அன்றும்.

வஞ்சியடியின் முதலும் இடையும் இறுதியும் அசை கூனுகப் பெறும். வஞ்சியடி முதற்கட் சீர்கூனுகவும் பெறும். இடையும் இறுதியும் உகரவீறுகிய நேரீற்றியற்சீருங் கூனுய் வரப்பெறும். அல்லாச் சீர் கூனுய் வரப்பெறு. நேர்பசை நிரைபசைவெண்டும் ஆசிரியர்க்கும் உகரவீறுகிய நேரீற்றியற் சீரும் அசையாம். இவை யெல்லாவாசிரியர்க்குந் துணிபு எனக்கொள்க. பிறவுமன்ன. இவை யும் அவர் காட்டியவே எனக்கொள்க. இன்னும் அவர் காட்டுமாறு:

"அதற்கொண்டு, கலங்கொண்டன கள்ளென்கோ—காழ் கோத்தன சூட்டென்கோ" எனவும், "வேந்து, வேல்வாங்கி வியந் துருத்தலின்" எனவும், "தெருவு, தேரோடத் தேய்ந்தகன்றன" எனவும் கொள்க. இவற்றுள் 'அதற்கொண்டும்' எனவும், 'வேந்து' எனவும், 'தெருவு' எனவும் இவையெல்லாம் சீர்கூனாயின.* இவற்றிற் கிலக்கணஞ் சொல்லுமாறு:

"உறுப்பிற் குறைந்தவும் பாக்கண் மயங்கியு
மறுக்கப் படாத மரபின வாகி
யெழுவா யிடமா வடிப்பொரு ளெல்லாந்
தழுவி நடப்பது தான்றனிச் சொல்லே"

"வஞ்சி மருங்கி னிறுதியு மாமெனக்
கண்டனர் மாதோ கடனறிந் தோரே"

என்பது காக்கைபாடினியம்.

"தனிச்சொல் லென்ப தடிமுதற் பொருளொடு
தனித்தனி நடக்கும் வஞ்சியு ளீறே"

என்பது சிறுகாக்கைபாடினியம்.

"தனியே யடிமுதற் பொருள்பெற வருவது
தனிச்சொல் லிறுதியும் வஞ்சியு ணடக்கும்"

என்பது அவிநயம்.

"அடியினிற் பொருளைத் தானினிது கொண்டு
முடிய விற்பது கூனென மொழிப
வஞ்சிக் கிறுதியு மாகு மதுவே
யசைகூ னாகு மென்மனார் புலவர்"

என்பது பல்காயம்.

"தானே யடிமுதற் பொருள்பெற வருவது
கூனென மொழிப குறியுணர்ந் தோரே
வஞ்சி யாயி னிறுதியும் வரையார்"

என்பது நத்தத்தம்.

---

* 'சில ஏடுகளில் 'களிறணைப்பக் கலங்கின கா' என்பதனையும் இங்கு உதாரணமாகக் காட்டி 'கா' என்பதனையும் சீர்கூனாகக் கூறப்பட்டிருக்கின்றது. 'கா' என்பது அசையாவதன்றிச் சீராகாமை யுணர்க.

"வட, வீமொடு தென், பொதியிலிடை" என்பதனுள் 'வட' என்பதும், 'தென்' என்பதும் கூன் எனக்கொள்க.

"அந்தமு மாதியு நடுவுங் கூனசை
வந்தன வன்றியும் வந்த வாமெனின்
முந்திய குறளடி மொழிந்த தன்றது
சிந்தென நாலசை சேர்வ தில்லையே"

என்ற விதன்கருத்து, வஞ்சிப்பாவின் முதனடுவிறுதி கூனின்றியும்,

"தண்முகைமென்குழற்பெருந்தடங்கண்
பூவேகலந் தொலைந்தினியாற்றலள்"

எனவும்,

"வலமாதிரத்தான் வளிகொட்ப"

எனவும்,

"அள்ளற்பள்ளத் தகன்சோணாட்டு"

எனவும்,

"வேங்கைவாயில் வியன்குன்றூரன்"

எனவும்,

"அங்கண்வானத் தமரரசரும்"

எனவும் இத்தொடக்கத்தனவற்றுள் நாலசைச்சீர் வந்தனபிறவெனின், அவை குறளடிவஞ்சியல்ல; சிந்தடி வஞ்சியாக வைப்ப நாலசைச்சீரல்லவாம் என்பது. பிறவுமன்ன. எல்லா வாசிரியரும் வஞ்சியுண் மூன்றிடத்தும் நிரையீற்றியற்சீர் மிக்குவரும்; நேரீற்றியற்சீர் முதலு மிடையு மருகிவரப்பெறும் என்ப. என்னை?

"தாழ்பொழிற் றடமாஞ்சினை
வீழ்குயிற் பெடை*மெலிவினை"

எனவும்,

"தவளமுத்தஞ் சங்கீன்று
பவளமொடு ஞெமிர்ந்துராய்"

எனவும்,

"புன்காற் புணர்மருதின்
போதப்பிய புனற்றாமரை"

எனவும்,

"உடைமணி யரையுருவக் குப்பாயத்து"

எனவும்,

---

* 'மெலிவன' என்பதும் பாடம்.

"தேந்நாட் டீங்கரும்பின்"

எனவும்,

"பூந்நாட் புனற்றாமரை"

எனவும் காட்டுவராகலின். பல்காயனார் நேரீற்றியற்சீர் வஞ்சி யடியினிறுதியும் அருகிவரப்பெறு மென்றார். அவர் கூறுமாறு:

" இயற்சீர் நேரிற றன்றளை யுடைய
கலிக்கியல் பிலவே காணுங் காலை
வஞ்சி யுள்ளும் வந்த தாகா
வாயினு மொரோவிடத் தாகு மென்ப "

என்பது பல்காயம்.

" கலிதளை யடிவயி னேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே
வஞ்சி மருங்கினு மிறுதி நில்லா "

என்பது நத்தத்தம்.

" செங்கண்மேதி கரும்புழக்கி " என்றித்தொடக்கத்தனவற்றைச் சிந்தடியும் குறளடியும் விரவிவந்த வஞ்சிப்பா வெனக்கொள்க.

" நேரசை யிறுதியாய் நிகழு மீரசைச்
சீர்க்கடை வஞ்சியுட் செலவுங் கூறினர்
நோவிரை நேர்பொடு நிரைபு நாலசைச்
சீருநன் கெடுத்துடன் செப்பி னனரோ "

இது பல்காயனார் மதம்.

" குற்றிய லுகரமுங் கூனுஞ் சிந்துமா
முற்றிய வன்றியு மொழிவ ராமெனிற்
றெற்றென நெடிலடி சேரு மென்பது
சொற்றபி னலசைத் தோற்ற மில்லையே "

இதன்கருத்து, *"சிறுசோற் றானு நனிபல கலத்தன்மன்னே" என்றித்தொடக்கத்த வாசிரிய வடிகளுள்ளும்,

" கண்டல் வண்டற் † கழிபிணங்கிக் கருநீலமது விம்மவும்
கொண்டகொண்ட பனைமுன்றிற் பண்ணையாயங் குடிகெழுவவும் "

---

* புறம்-235. † 'கழிபிணங்க' என்பதும் பாடம்.

என்றித்தொடக்கத்துக் கொச்சக வடிகளுள்ளும் முன்சொன்ன பெற்றியன்றி நாலசைச்சீர் வந்தனபிற வெனின், அவைதாம் நாற் சீரல்லவென்று ஐஞ்சீரடியாகவைப்ப நாலசைச்சீரல்லவாம்; தொல் காப்பியனார் நக்கீரனார் முதலாகவுள்ளார் ஒருசாராசிரியர் ஆசிரியத் துள்ளும், கலியுள்ளும் ஐஞ்சீரடியும் அருகிவரப்பெறு மென்று*

"என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே
யம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே" †

என்னும் ஆசிரியவடிகளும்,

"அணிகிளர் பொறியவிர் துத்திமா ஞகத் தெருத்தேறி"

என்னுங் கலியடியுங் காட்டுவாராகலினென்பது. அவர் சொல் லுமாறு:

"வெண்டளை விரவியு மாசிரியம் விரவியும்
ஐஞ்சீ ரடியு முளவென மொழிப" (தொல்-பொ-செய்-63.)

என்பது தொல்காப்பியம். ஆசிரியங் கலி யென்றதிகாரம் வருவித் துரைக்கப்பட்டது இச்சூத்திரம்.

"ஐஞ்சீ ரடுக்கலு மண்டில மாக்கலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல"

என நக்கீரர் நாலுள் 'வெண்பாயாப்பிற்குரியவல்ல' வென்றமையால், ஆசிரியத்துக்கும் கலிக்கும் ஐஞ்சீரடி புகுதலும், மண்டிலமாகலும் உரித்தென்று விரித்துரைத்தார் எனக்கொள்க.

"சேரு நேரடிப் பாவிலேஞ் சீரடி
யேரும் வெள்ளையல் லாவழி யென்பது
சோர்வி லாத்தொல் காப்பியத் துள்ளுநக்
கீர ரைடி நூலுள்ளுங் கேட்கவே"

இதனை விரித்துரைத்துக்கொள்க.

"தகைபெறு பொதியிலென் தலைவ ஞணையிற்
றொகைவகை விரிபடச் சொற்ற நூல்களுள்
வகையுளி சேர்த்துதல் வகுப்ப ராதலால்
தகைபெற நாலசை நடப்ப தில்லையே"

* 'இவ்வாசிரியங்களும்' என்பதும் பாடம். † புறம்-235.

இதன் கருத்து,

"கங்கணக்கைப் பைந்தார்க் கனைகழற்காற்
கருவரைபோ னீண்டமார்பிற் காமர் கோலம்
பொங்கிய சாமரை பொற்பவேந்திப்
புடையின் றியக்கர்கள் போற்றி வீசச்
சிங்கஞ்சுமந் துயர்ந்தவா சனத்தின்மேற்
சிவகதிக்கு வேந்தாகித் தேவ ரேத்த
வங்கம்ப யந்த வறிவனுகிய *வறப்படைமுன்
ரேய்ந்தானடி யடைவா மன்றே"

இவ்வெழுசீ ராசிரியவிருத்த முதலாக வுடையனவற்றின், மேற்சொன்ன பெற்றியன்றியேயும் நாலசைச்சீர் வந்தனபிற வெனின், அகத்தியனுராணையினுற் செய்யப்பட்ட நூல்களெல்லாம் வகையுளிசேர்த்துகவென்பதனுற் "போற்றிவீச" வென்பதனையும், "ஆசனத்தின்மேல்" என்பதனையும் வகையுளி சேர்த்த மூவசைச் சீரென்பதாம். நாலசைச்சீர் வேண்டு மாசிரியரும்,

"பாடுநர்க்கு மாடுநர்க்கும் பண்டுதாங் கண்டவர்க்கும்
ஊடுநர்க்குங் கூடுநர்க்கு மொத்தலா—னீடுநீர்
நல்வய லூர †னறுஞ்சாந் தணியகலம்
புல்லலி னூட லினிது"

என்பதனுள் டகர நகரங்களை வகையுளி சேர்த்தி மூவசைச் சீரேயாக வைப்பாராகலின் என்பது.

"எழுத்தல் கிளவியி னசையொடு சீர்சிதைத்
தொழுக்கலு மடிதொடை தலையழி யாமை
வழுக்கில் வகையுளி சேர்த்தலு முரித்தே"

என்ருர் அவிநயனுர்.

"குன்றியுந் தோன்றியும் பிறிது பிறிதாகியும்
ஒன்றிய மருங்கினு மொருபுடை மகார
மசையுஞ் சீரு மடியு மெல்லாம்
வகையுளி சேர்த்தல் வல்லோர் மேற்றே"

என்ருர் நத்தத்தனுர்.

* 'அலப்படைமுன் வந்தான்' என்பதும் பாடம்.
† 'நறுஞ்சாந்து' என்பதும் பாடம்.

"அசைகளு மொரோவழி யாகுஞ் சீரிய
லிசைபெற நிற்புழி யென்ப துண்மையா
லிசைபெறு துறையினை விருத்த மாக்கினுல்
நசைபெறு நாலசை நடப்ப தில்லையே"

இதன் கருத்து,

"குயிலுங் குழலு மலைத்தன தீஞ்சொற்கள் கொவ்வைச்செவ்வாய்
கயலு மலருங் கடுத்தன வுண்கண்கள் வெண்முத்தம்பல்
இயலும் படியுள தாவது நன்றன்றித் தோன்றியக்கால்
அயிலுஞ்செவ் வேலு மழலம்பு மாம்பிற வாடவர்க்கே"

எனவும்,

"இருநெடுஞ் செஞ்சுட ரெல்கமொன் றேந்தி யிரவின்வந்த
வருநெடுங் காதற்கன் றேதரற் பாலதல் லாதுவிட்டால்
கருநெடு மால்கட வேந்திய கோன்கயல் சூடுநெற்றிப்
பெருநெடுங் குன்றம் விலையே கருதிலெம் பெண்கொடிக்கே."

எனவும் இத்தொடக்கத்துக் கலித்துறையுள் நாலசைச்சீர்வந்தன பிற வெனின், அவை கலித்துறையல்லவென்று சீர்சீராக இறுவழி யசைச்சீராக வாசிரிய விருத்தமாம்; பலருமவற்றை விருத்தமென்று வழங்குவராகலின். எல்லாவாசிரியரும் அசையு மொரோவழிச் சீராம் என்ப;

"ஊரலரெழச் சேரிகல்லென"

எனவும்,

"உரிமை யின்க ணின்மையால்
அரிமதர் மழைக் கண்ணள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற வென்பவே"

எனவுங் காட்டுவராகலின் என்பது.

"இசைநிலை நிறைப்ப நிற்குவ வாயி
னசைநிலை வரையார் சீர்நிலை பெறலே" (தொல்-பொ-செய்-27.)

என்றார் தொல்காப்பியனார்.

"நேர்நிரை வரினே சீர்நிலை யெய்தலும்
பாவொடு பிறவு மாகு மொரோவழி"

என்றார் அவிநயனார்.

"நேரு நிரையுஞ் சீரா யிறுதலுஞ்
சீருந் தளையுஞ் சிதைவுழிக் கொளலும்
யாவரு மறிவர் நால்வகைப் பாவினும்"

என்றார் மயேச்சுரர்.

"தளையொடு சீர்தபிற் றக்க வாவிகள்
அளபெடை யெடுப்பினு மலகு காரியம்
விளைவில வென்பவர் மீட்டு நாலசை
யுளசில சீருமென் றுரைப்ப தென்கொலோ"

இதன்கருத்து,

"தாஅய்த்தாஅய்ச் செல்லுந் தளர்நடைப் புன்சிறார்
போஒய்ப்போஒய்ப் பூச லிடச்செய்து—போஒய்ப் போஒய்
நிற்குமோ நீடு நெடும்புதவந் தானணைந்து
பொற்குமோ வென்னுது போந்து"

இதனுண் மேற்சொன்ன பெற்றியன்றியேயு நாலசைச்சீர் வந்தனபிறவெனின், அற்றன்று;

"நிலம்பாஅய்ப்பாஅய்ப் பட்டன்று நீலமா மென்றோள்
கலம்போஒய்போஒய்க் கெளவை தரும்."

இத்தொடக்கத்தனவற்றுள் தளையும், சீரும், வண்ணமுங் கெடலில்லாமையின் அளபெடா. அளபெடுப்பினும் அலகுகாரியம்பெறா வென்று மூவசைச் சீராக வைப்பாராகலானும்,

"காஅரி கொண்டான் கதச்சேய் மதனழித்தான்
ஆஅழி யேந்த லவன்."

இத்தொடக்கத் தனவற்றுள்,

"மாத்திரை வகையாற் றளைதம கெடாநிலை
யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்"

என்று தளை கெடாமற்பொருட்டு அளபெடுத்து வெண்டளை யாக்குவராகலானும், இவ்வாறே "தாஅய்த்தாஅய்" என்று இத்

தொடக்கத்தனவற்றுள்ளும் சீரும், தளையுங் கெட்டு மில்லாவாகலின் ஓரளபெடையை அளபெடா தென்று நெட்டெழுத்தே போலக் கொண்டு அலகிட மூவசைச்சீரேயாம். நாலசைச்சீர் கொள்வான் புகினும் உதாரணவாய்பாட்டான் ஓசையூட்டி வண்ணம் அறுக்கும் பொழுது சான்றோர் கோவையுள் வெண்பாப்போல ஓசையுண்ணாது செப்பலோசை வழுவும் என்பது.

“ இஉ இரண்டன் குறுக்கந் தளைதப
நிற்புழி யொற்றா கிலைமைய வாகும்
மூயிரள பேழு முரைத்த முறையான்
வருமெனி னவ்வயல் வைக்கப் படுமே.”

என்றார் காக்கைபாடினியார்.

“ சீர்தளை சிதைவுழி யீருயிர்க் குறுக்கமு
நேர்த லிலவே யுயிரள பெடையும்”

என்றார் மயேச்சுரர்.

“ உயிரள பெடையுங் குறுகிய வுயிரின்
னிகர வுகரமுந் தளைதபி னொற்றாம்
சீர்தப வரினு மொற்றியற் றாகும்”

என்றார் அவிநயனார்.

“ கோவா முத்திற் கண்பனி கால
வழுத்தாண் *மார்வ பழுதற வஞ்சி
வாரா வாரிரு ளோரிழிந் தழிய
வளைவாய் தேய்ந்தனள் களைவரு காதலின்
ஆனு வழுகி தானனி புலம்பி
யழல்சேர் மெழுகிற் கலுழ்வனள் கவல
வாரா விடினவ ளாருயி ரிழத்தலின்
பெரிய வரியவிவன் பருவரல் பெருகலின்
இனியே, யல்ல குறிப்பினு மாகுவ
களவியல் வேண்டுங் கடுப்பொடு மடுத்தே.”

முன்சொன்னதேயன்றி இவ்விருசீரடி வஞ்சிப்பாவினுள் நாலசைச்சீர் பதினாறும் வந்தனபிற வெனின், அது வஞ்சிப்பாவன்று,

* ‘மாத ரழுதர’ என்பதும் பாடம்.

அகவலோசைத்தாய் நாற்சீரடியால் வந்தமையால் இயற்சீரால் வந்த நேரிசையாசிரியப்பாவாகக் கொள்ள நாலசைச்சீர் அன்றாம். தனிச்சொல் ஆசிரியத்துள்ளும் வருமெனக்கொள்க.

> "உமணர்சேர்ந்து கழிந்த மருங்கி னகன்றலை
> வூர்பாழ்த் தன்ன வோமையம் பெருங்கா
> டின்னா வென்றி ராயின்
> இனியவோ பெரும தமியோர்க்கு மனையே." (குறுந்-124.)

இதன் முதற்கண் நாலசைச்சீர் வந்ததன்றோவெனின், அஃது ஐஞ்சீரடியாக வைப்பினும், குற்றுகரத்தை ஒற்றாகக்கொண்டு நாற்சீரடியாக வைப்பினும் நாலசைச்சீர் இன்றாம், 'இனியிரந்து வாங்கின்' என்னும் அடியினும் மூன்றாஞ்சீர்க்கண் நாலசைச்சீர் வந்ததெனினும் ஆண்டுக் குற்றுகரத்தை ஒற்றாகக்கொள்ளவும், அளபெடை அலகு காரியம்பெறாது என்று விலக்கவும், ஐஞ்சீரடியாக்கவும், நாலசைச்சீர் இன்றாம்.

> "கோடன்மன்னு பூங்கானற் குயில்கண்மன்னு நீர்சோலை
> நாடர் *நம்பி நீயா நயந்து."

எனவிதனுள்ளும் நாலசைச்சீர் வந்தனவெனின், அதனை முதலடி அறுசீராகவும், ஈற்றடி நாற்சீராகவும் அலகிட்டு அந்தடிகுறைந்து வந்த தாழிசைக்குறள் என்று வழங்க நாலசைச்சீரின்றாம்.

> "காம்புதேம்பா வெற்பிற் கல்லளையுள் வாழ்கின்ற
> பாம்பிற் கடிய புலி."

இதனுள் முதலடி முதற்கண் நாலசைச்சீர்வந்ததுபிற வெனின், முதலடியை ஐஞ்சீரடியாகக்கொண்டு ஈற்றடிகுறைந்த தாழிசைக் குறளாகக்கொள்ள நாலசைச் சீரின்றாம். நாலசைச்சீர் வேண்டும் ஒருசா ராசிரியரும் வெண்பாவினுள் அளபெழுந்தாலன்றி நாலசைச்சீர்வாராவென்று இத்தொடக்கத்தனவற்றையுந் தாழிசைக் குறளையாகக்கொள்வர் எனக்கொள்க.

"கொண்டன் முழங்கினவால் கோபம் பரந்தனவா—லென்செய்

---

* 'நம்மை' என்பதும் பாடம்,

கோயான்" என்னும் வெளிவிருத்தத்துள் "என்செய்கோயான்" என்னுந் தனிச்சொல்லை வகையுளிசேர்த்தவும் ஆகாதாய் நாலசைச் சீர்வந்ததுபிற வெனின், அதனைக் குறளடியால் வந்த தனிச்சொல் எனக்கொள்க. கலியுள் "*சிறுகுடி யீரே சிறுகுடி யீரே" என அளவடியால் தனிச்சொல் வந்தது. அதற் கிலக்கணம்,

"வெண்சீர் வரைவின்றிச் சென்று விரவினும்
தன்பான் மிகுதி யினமெல்லாம்—வஞ்சி
யுரிச்சீர் விரவுதல் வெண்பாவிற் கில்லை
தனிச்சொ லசைச்சீ ரடி."

என்பதனை விரித்துரைத்துக்கொள்க.

இவ்வகையே நாலசைச்சீர் வேண்டாமே நடாத்து முபாயங்கள் கண்டாராயினும், இவ்வாறுரைப்பின் உணர்விஞர்க் கன்றி யறிய வொண்ணுதாதலானும், பழையநூல்வழி யில்லாது தமது மதம்படுத்துச்சொன்ஞர் என்னும் பாதுகாவலானும்,

"உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு." (குறள்-அறிவு-5.)

என்பவாகலானும், காக்கைபாடினியார் முதலாகிய வொருசாராசிரியர் மாப்பெரும்புலவர்தம் மதம்பற்றி நாலசைச்சீர் விரித்தோதிஞர் இந்நூலுடையார் எனக்கொள்க.

"நேர்பு நிரைபசையு நேராதே நாலசைச்சீர்
சேருஞ் சிறிதென்று செப்பாதே—பாரின்மேற்
றென்றமிழ்நூல் யாப்புரைத்தான் சிந்தைபோ னுண்ணிதே
யின்றமிழ்ப்போ னல்லா ளிடை."

இனி நாலசையும், பத்து இயற்சீரும், எட்டாசிரிய வுரிச்சீரும், நான்கு வெண்பாவுரிச்சீரும், அறுபது வஞ்சியுரிச்சீருமாமாறு சொல்லுதும். எழுத்திஞல் ஆக்கப்படும் அசை நான்கு வகைப்படும். நேரசையும், நிரையசையும், நேர்பசையும், நிரைபசையும் என. என்னை?

* இவ்வடிவந்த செய்யுளை 320-ஆம் பக்கத்திற் காண்க.

" நேரே நிரையே நேர்பே நிரைபென
யீரிரண் டென்ப வசையின் பேரே."

என்றாராகலின்.

அவற்றுள் நேரசை நான்கு வகைப்படும். தனிநெடிலும், தனிக்குறிலும், நெட்டொற்றும், குற்றொற்றும் என. என்னை?

" தனிநெடி றனிக்குறி லொற்றொடு வருதல்
எனநால் வகைத்தே நேரசை யென்ப"

என்பவாகலின். அதற்குதாரணம் 'கா ரி' 'சேந் தன்' எனவரும்.

நிரையசை நான்கு வகைப்படும், குறிலிணையும், குறினெடிலும், குறிலிணையொற்றும், குறினெடிலொற்றும் என. என்னை ?

" குறிலிணை குறினெடி லொற்றொடு வருதலென்
றனைய நால்வகைத்தே நிரையசை யென்ப."

என்பவாகலின். அதற்குதாரணம். 'பல' 'பலா' 'பலம்' 'கிழான்' என வரும்.

நேர்பசை நிரைபசை யாமாறு சொல்லுதும். நேர்முதலாகிய குற்றியலுகரம் நேர்பசையாம்; நிரைமுதலாகிய குற்றியலுகரம் நிரைபசையாம். என்னை ?

" நேர்முத லாகிய குற்றிய லுகர
நேர்பென மொழிப நிரைமுத னிரைபே"

என்பவாகலின். நேர்பசைக்கு உதாரணம் 'கோடு' 'தோன்று' 'குன்று' எனவரும். நிரைபசைக்கு உதாரணம், 'மரபு' 'மயங்கு' 'மலாடு' 'மலாட்டு' எனவரும். நேர்முதலாகிய முற்றியலுகரமும், நிரைமுதலாகிய முற்றியலுகரமும் நேர்பசையு நிரைபசையுமாம். என்னை ?

" முற்றிய லுகரம் வரினு மவைபெயரே"

என்பவாகலின். முற்றியலுகரமாவது, மெல்லெழுத்தும் இடையெழுத்துஞ் சார்ந்து வருமுகரம். முற்றியலுகர நேர் பசைக்கு உதாரணம் 'காணு' 'வேணு' 'மின்னு' 'மண்ணு' எனவரும். முற்றியலுகர நிரைபசைக்கு உதாரணம் 'உருமு' 'அரவு' 'விரவு'

'செலவு' என வரும். நேர்முதலாகிய இருவகையுகரமும் ஒற்றடுப்பினும் நேர்பசையாகும். நிரை முதலாகிய இருவகை யுகரமு மொற்றடுப்பினு நிரைபசையாகும். என்னை?

"குற்றிய லுகர முற்றிய லுகரம்
ஒற்றொடு தோன்றற் குரிய வாகும்"

என்பவாகலின். அவற்றிற்கு உதாரணம், 'சேற்றுக்கால்' 'ஆட்டுக்கால்' எனவும, 'களிற்றுத்தாள்' 'வெளிற்றுப்பனை' எனவும் வருமீ. இவை குற்றியலுகர மொற்றொடுவநத நோபசை நிரைபசைகள்.

'மின்னுப்பூண்' 'மண்ணுச்சாந்து' எனவும் 'உருமுத்தீ' 'வெருவுப்பாம்பு' 'விரவுப்பூண்' 'விழவுக்களம்' எனவும் வரும். இவை முற்றியலுகர மொற்றொடுவந்த நேர்பசை நிரைபசைகள்.

"குறிலு நெடிலுங் குறிலிணை நானுங் குறிநெடிலு
நெறியின் றுயிரப்பினு நோங்தொற றடுப்பினு நேர்நிரையென்
றறிமுந்தை நோநிரை யைநதீ ருகர மடுத்துவந்தால்
நெறிநுண் கருங்குழ னேர்பு நிரைபுமொற றொடுமற்றே"

இதனை விரித்துரைத்துக்கொள்க.

"நேரோ ரலகு நிரையிரண் டலகு
நேர்புமூன் றலகு நிரைபுநான் கலகென
வோதினர் புலவ ருணரு மாறே"

நேரசையு நிரையசையுமியலசை யெனப்படும். நேர்பசையும், நிரைபசையு முரியசை எனப்படும். என்னை?

"முதலிரண் டியலசை யேனைய வுரியசை"

என்பவாகலின், அவ்வசை யிரண்டு கூடியுஞ் சீராம்; மூன்றுகூடியுஞ் சீராம். என்னை?

"ஈரசை கொண்டது சீரெனப் படுமே
மூவசை யிறத்த லில்லென மொழிப"

என்பவாகலின். ஆகச்சீர் இரண்டு வகைப்படும்; இயற்சீரு முரிச்சீரும் என. அவற்றுள் இயறசீர் பத்துவகைப்படும். நேரசையும் நிரையசையு மயங்கின நான்குசீரும, நேர்பு நிரைபு முதலாகிய நேரசை இறுதியாகிய விரண்டுசீரும், நேரசைப்பின்னும், நிரை

யசைப்பின்று நேர்பசையு நிரைபசையும் வந்தாகிய நான்குசீரும் என; என்னை ?

“ இயலசை மயக்க மியற்சீ ராகும்
உரியசைப் பின்னர் நேரியல் காலேயும்
இயற்சீர்ப் பால வியலசை யிறுதி
வரூஉ முரியசை,
யியற்சீர்ப் பால வாகு மென்ப”

என்றாராகலின். அவற்றிற் குதாரணம், தேமா, புளிமா, பாதிரி, கணவிரி எனவும், போதுபூ, விறகுதீ எனவும், போரேறு, பூமருது, கடியாறு, மழகளிறு எனவுங் கொள்க.

“ நேரு நிரையு மயங்கிய நான்கென்ப நேரிறுவாய்
நேர்பு நிரைபு முதலியற் சீர்களு நேர்நிரைப்பி
னேர்பு நிரைபு நிலவிய நான்கு நிரைவளைத்தோள்
நேர்நுண் குழன்மட வாயியற் சீரென்று நேர்ந்தனரே”

இதனை விரித்துரைத்துக்கொள்க.

இனி யுரிச்சீர் மூன்றுவகைப்படும், ஆசிரியவுரிச்சீரும், வெண் பாவுரிச்சீரும், வஞ்சியுரிச்சீருமென. என்னை ?

“ ஆசிரிய வுரிச்சீர் வெண்பா வுரிச்சீர்
வஞ்சியொடு மூன்றே யுரிச்சீர்த் தோற்றம்”

என்பவாகலின். அவற்றுள் ஆசிரியவுரிச்சீர் எட்டு வகைப்படும். நேர்புநிரைபு மயங்கியநான்கும், நேர்பும்நிரைபும் நிரையிறுதியாகிய விரண்டும், தனிநிலையளபெடைப்பின் நிரைவந்ததும், இறுதிநிலை யளபெடைப்பின் நிரைவந்தது மென;

“ உரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்
நிரையிறு காலேயு மதனோ ரற்றே”

எனச் சொன்னாராகலின். அவற்றிற் குதாரணம் வீடுபேறு, மா றுகுருகு, வரகுசோறு, முருட்டுமருந்து எனவும், நீடுகொடி, குழ றுபுலி எனவும், தூஉமணி, கெழூஉமணி எனவுங்கொள்க.

“ நேர்பு நிரைபு மயங்கிய நான்கு நிரையிறுவாய்
நேர்பு நிரைபு முதலிய சீர்களு நேர்நிரையாய்ச்

சேரு மளபெடைப் பின்னிரை சேரிரு சீரொடெட்டும்
ஆரு மறிவுற வோதின ராசிரி யக்கவையே"

என விதனை விரித்துரைத்துக்கொள்க.

இனி, வெண்பாவுரிச்சீர் நான்கு வகைப்படும். நேர்நேரும் நிரைநேரும் ஆகிய இரண்டுசீர் முதற்கண்ணும், முறையானே நேரும், நிரையும் புணர்ப்ப வவைதோன்றும். என்னை ?

" நோநேர் நிரைநே ராயிரு சீரு
நேர்முத லாகவு நிரைமுத லாகவும்
நான்கென மொழிப வெண்பா வுரிச்சீர்"

என்பவாகலின். வரலாறு:

பூவாமா, பூவிரிமா, விரிபூமா, நறுவடிமா.

எனக் கொளக.

மாசெல்வாய், மாபடுவாய், புலிசெல்வாய், புலிபடுவாய்.

எனினு மொக்கும்.

இனி, வஞ்சியுரிச்சீராவன, வெண்பாவுரிச்சீரல்லாத மூவசைச் சீர் அறுபது மெனக்கொள்க. என்னை ?

" வெண்பா வுரிச்சீ ரல்லா மூவசை
யெல்லாம் வஞ்சி யுரிச்சீ ராகும்"

என்பவாகலின். அவற்றிற்குதாரணம்:

" மாபுலி பாம்பு களிறென் றிவைமுதலாச்
செல்படு போகு வழங்கென் றிவைநடுவா
வாய்சுரங் காடு கடறீருய் வைத்தாரே
பாசுரம் வஞ்சிக் குரிசசீர்."

இதன்வழியே யுறழ்ந்தால் அறுபத்துநான்கு மூவசைச்சீராம். செல் என்பதுமுதல் நீண்டது. அவற்றுள் நான்கு வெண்பாவுரிச் சீரும் ஒழித்து, அல்லாத வறுபதும் வஞ்சியுரிச்சீர்க் குதாரணமாம் எனக்கொள்க. அவை சொல்லுமாறு:

மாசெல்வாய், மாபடுவாய், மாபோகுவாய், மாவழங்குவாய்;
புலிசெல்வாய், புலிபடுவாய், புலிபோகுவாய், புலிவழங்குவாய்;

பாம்புசெல்வாய், பாம்புபடுவாய், பாம்புபோகுவாய், பாம்புவழங்குவாய்;
களிறுசெல்வாய், களிறுபடுவாய், களிறுபோகுவாய், களிறுவழங்குவாய்

எனவிவை நேரீறாக வந்த பதினாறும்,

மாசெல்சுரம், மாபடுசுரம், மாபோகுசுரம், மாவழங்குசுரம்;
புலிசெல்சுரம், புலிபடுசுரம், புலிபோகுசுரம், புலிவழங்குசுரம்;
பாம்புசெல்சுரம், பாம்புபடுசுரம், பாம்புபோகுசுரம், பாம்புவழங்குசுரம்;
களிறுசெல்சுரம், களிறுபடுசுரம், களிறுபோகுசுரம், களிறுவழங்குசுரம்

எனவிவை நிரையீறாகிய பதினாறும்,

மாசெல்காடு, மாபடுகாடு, மாபோகுகாடு, மாவழங்குகாடு;
புலிசெல்காடு, புலிபடுகாடு, புலிபோகுகாடு, புலிவழங்குகாடு;
பாம்புசெல்காடு, பாம்புபடுகாடு, பாம்புபோகுகாடு, பாம்புவழங்குகாடு;
களிறுசெல்காடு, களிறுபடுகாடு, களிறுபோகுகாடு, களிறுவழங்குகாடு

என இவை நேர்பீறாகிய பதினாறும்,

மாசெல்கடறு, மாபடுகடறு, மாபோகுகடறு, மாவழங்குகடறு;
புலிசெல்கடறு, புலிபடுகடறு, புலிபோகுகடறு, புலிவழங்குகடறு;
பாம்புசெல்கடறு, பாம்புபடுகடறு, பாம்புபோகுகடறு, பாம்புவழங்குகடறு;
களிறுசெல்கடறு, களிறுபடுகடறு, களிறுபோகுகடறு, களிறுவழங்குகடறு

எனவிவை நிரைபீறாகிய பதினாறு மெனக்கொள்க. இவற்றுள்,

மாசெல்வாய், மாபடுவாய், புலிசெல்வாய், புலிபடுவாய்

எனநான்கும் வெண்பா வுரிச்சீர்; ஒழிந்த அறுபதும் வஞ்சியுரிச்சீர்.

"நேர்நிரை நேர்பு நிரைபுமுப் பாலு நிரைத்துறழ்ந்தாற்
சீர்நிலை முப்பத் திரண்டி னிரட்டியச் சீரினுள்ளா
நேர்நிரை யாதி யிடைசடை நேர்வந்த நான்கும்வெள்ளைக்
காரிய ரோதின ரல்லன வஞ்சிக் கறுபதுமே"

இதனை விரித்துரைத்துக்கொள்க.

இயற்சீர் முதலாகியவற்றிற் கிலக்கியம் வருமாறு:

"குருகுவேண் டாளி கோடுபுய்த் துண்டென
மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
மருள்பிடி திரிதருஞ் சோலை
அருளா னாகுத லாயிழை கொடிதே"

இது பத்தியற்சீரும் வந்த பாட்டு,

"வீங்குமணி விசித்த விளங்குபுனை நெடுந்தேர்
காம்புநீடு மயங்குகாட்டுப்
பாம்புபெரி நு வழங்குதொடுரங்கு
வயங்கு கலிமா விரைபுவிரைபு
வலவன் வாம்பரி கடவி வந்தோன்
கெழூஉமணி யகலந் தழூஉமதி விரைந்தே"

இஃதெட்டாசிரிய வுரிச்சீரும் வந்த பாட்டு.

"நன்மாறு வருவாயோ நறுவடிமா பூவுதிர"

இது நான்கு வெண்பா வுரிச்சீரும் வந்தபாட்டு.

"நலஞ்செலத் தொலைந்த புலம்பொடு பழகி
யின்று வாயின வன்றே தோழி
பார்தோயப் பரந்துழுழ்கி
நீர்சுமந்த விரைசெலவினர்
இடித்தோவா தடுத்துரறிக்
கடுஞ்சினத்த களிறுபோல
வீண்டுநொண்மூ வியந்தேறி
யிலங்குபுநீர் பொழிதலின்
மாண்டுசொரியுந் திரளருவி
வரன்றுமணிநீள் வரைத் ததும்பவும்
தேனுறுபூந் தெரிகுவளைமிசைத்
திசைபோகுகா லுளர்ந்துயிர்த்தலிற்
குண்டுநீடுநீர்க் குவளைத்தண்சுனை
குறித்துக்கூடுவோர் நெறிமயங்கவும்
வான்வழங்குவாள் வளரிளம்பிறை
வரைத்தயங்குநீர் கரைவிலங்கலின்
விண்றுதயங்குநீ ணிலவுதலின்
நெடிதுநெடிதுசென் றிராப்பெருகவும்
தேமாவின் பழஞ்சிந்தியுந்
திரளாசினிக் கனிமாந்தியும்
சூழ்மயிர்க்கா டுகஞ்சுழன்றுபாய்வண
விளையாடவு நீள்கருமுக்கி
விரைமுசுக்கலை விரைச்சுளைப்பழப்
பலவேறிக் கோடுகுலைப்பனவுகந்து
கனிக்குடைந்துமுழங் குவகுரல்பயிற்றவும்
தாழ்கூடுசினைத் தண்சண்பகம்

தகைகூடுசிறப் போதவிழ்தலின்
வண்டுகூடுவன வரித்தும்பி
மணந்துசென்றுபல் குரன்மிழற்றவும்
போர்தயங்குபன் மதவேழம்
பொலிந்திற்றுவன மத்தஞ்சொரியவும்
கோடுதயங்குவன குடர்மூழ்கிக்
குழைந்துநீல நனிபரப்பவும்
கோடனீடு கொடுமுகையோடு
குடசஞ்சூடுங் குறுங்குறவர்
சோறுபேணாது பிழிமகிழ்ந்து
சுழல்புதாங்காது பிணைந்தாடவும்
கல்பொருயாறு கடிதெழுதலிற்
கலைதுணைநீடு விடரகன்றுறைக
வென்றுவிலையாது கரைபோகிக்
கரைந்துதவிராது பிடியலறவும்
மாலிகுபோது மகிழ்சிலம்பின்
மகிழ்ந்தாடுமயி றளர்தலிற்
போதுசேர்ந்துகூடு பொறிவண்டினம்
புரிந்துவாங்குவீங்கு நரம்பிவர்தலி
னீர்குடைந்துபாடு மடமங்கையர்
சிரையொருங்குசின்று கதுப்புளரித்
தூசுகளைந்துவேறு துகிறிருத்தித்
துளங்குதோன்றுகல னணியவும்
வேய்கண்ணுடைந்து முத்துதிரவும்
வெதிர்கண்ணுடைந்து நெல்லுதிரவும்
காடுதீமணந்து பொன்னிமைப்பவும்
கலந்துதேன்பிளந்து நெய்யொழுகவும்
சூழ்கொடிபிணங்கு சுடர்வேங்கைமிசைத
துணர்க்கறிமிளகு பழமுக்கிச்சென்று
சுவையுணர்ந்துசிறு கடுவன்சிரித்து
முகஞ்சிவந்துமெய் மறப்பவும்
விண்டொடுவிளங்கு வெண்மணல்விராய்
நீண்டுமயங்குசெங் காந்தளொடு
மாறுமாறுதொடர்ந்து மலைக்கொடிச்சியர்
மலிவுதோறுமகிழ்ந்து தழைபுனையவும்
தேன்வழங்குமுழங்கு திகழ்நாற்றிசை
மருண்டுவெருண்டுசில மாந்தர்
நீடுசுழன்றுமுழன்று நெறியுணரா

விளைபுவிளைபுபரி புலரவுங்கூடவுஞ்
சூருடையன பல்சுனைமலர்ந்து
சுழல்வணங்குவன சுடர்க்குவளை
கண்டோர்கண்டோர் மகிழ்ந்துமாறவும்
களித்துக்களியோ டுவந்துபிளிற்றவும்
இன்னன பிறவு மின்னுயிர் மருள
வுருவினுந் தொழிலினும் வெருவரத் தோன்றி
யரும்புபல கவினிய மணிமலை
கருங்க ணுடனுடு கலவா வூங்கே"

இவ்வந்து அறுபது வஞ்சியுரிச்சீரும் வந்தபாட்டு. இப்பாட்டினுள் முதலடியிரண்டு மாசிரியவடி அல்லனவற்றை யிருசீரடியாக வலகிட்டு, அடிதோறு முதற்கண்ணே மூவசைச்சீர் அறுபத்து நான்கும் வந்தவாறு கண்டுகொள்க.

வஞ்சியுரிச்சீர் அறுபதும் வெண்பாவிற் புகப்பெறு; ஆசிரியத் துள்ளுங், கலியுள்ளும் மாசெல்சுரம், புலிசெல்சுரம், மாசெல்காடு, புலிசெல்காடு, மாசெல்கடறு, புலிசெல்கடறு பாம்புசெல்வாய், பாம்புபடுவாய், களிறுசெல்வாய், களிறுபடுவாய் என்னும் பத்து வஞ்சியுரிச்சீரும் புகப்பெறும் எனக் கொள்க. என்னை?

"இருநான் கசவற்சீ ரீரைந் தியற்சீர்
ஒருநான்கு!வெள்ளைக் குரிச்சீ—ரொருவாத
மூவிருபான் வஞ்சிக் கவற்றுட் கலியகவற்
பாவிரவற் பாலனவும் பத்து"

"மாசெல் புலிசெல் சுரங்காடு வான்கடறு
பாசிழையாய் பாம்பு களிற்றின்பின்—பேசிய
செல்வாய் படுவாய் சிவணிய சீரிவையே
பல்லோர் பயின்றுரைக்கும் பத்து"

"நேர்நேர் நிரைநேர்ப்பின் னேரொழித்த வீரசையுஞ்
சீரேற் றவற்றூதி நேர்பு நிரைபசையு
மீரொன்றிற் சீரொன்று யின்சீராம் வஞ்சிச்சீர்
ஆசிரியத் துட்புகும் பத்து"

"நிரைபாதி நேர்பாதி யந்தாதி நேர்நேர்
நிரைநேரிற் சேர்ந்தவும் பத்து"

என வரும் இவற்றை விரித்துரைத்துக் கொள்க,

ஒழிந்த ஐம்பது வஞ்சியுரிச்சீரும் அகவலுட் புகப்பெறா வெனக் கொள்க. கலியுள்ளும் அவ்வாறே எனக்கொள்க. வஞ்சியிறுதியுள்ளும், ஒத்தாழிசைக்கலியுள்ளுந் தேமா, புளிமா என்னுமிரண்டு இயற்சீரும் புகப்பெறா. ஒழிந்தசீர் எல்லாச் செய்யுளுள்ளும் புகப்பெறும்.

இனி, அசைச்சீராய் நின்றவிடத்துத் தளை வழங்கும் பொழுது நேரசைச்சீருக்கு மற்று மோரலகு கொடுத்து நேர்நேராகவும், நிரையசைச் சீருக்கு மற்று மோரலகு கொடுத்து நிரைநேராகவும், நேர்பசைக் கோரலகு களைந்து தேமாவாகவும், நிரைபசைக் கோரலகு களைந்து புளிமாவாகவும் வைப்பர் எனக்கொள்க. என்னை ?

"உரியசைச் சீர்ப்பி னுகர நேராய்த்
திரியுந் தளைவகை சேர்த லானே"

என்றார் நல்லாறனார்.

"சீரா கிடனு முரியசை யுடைய
நேரீற் றியற்சீ ரவ்வயி னான"

என்றார் நத்தத்தனார்.

"இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான" (தொல்-பொ-செய்-28.)

என்றார் தொல்காப்பியனார்.

"நேர்நேரா நேரசையு நேர்பு நிரைநேரா
மேனை யிரண்டு மெனல்"

இவற்றை விரித்துரைத்துக் கொள்க.

"தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா." (தொல்-பொ-செய்-55.)

என்றும், போதுபூ, போரேறு, பூமருது, இவைகளைப் பாதிரியாகவும்; விறகுதீ, கடியாறு, மழகளிறு இவைகளைக் கணவிரி யாகவும்; வெண்சீரின் ஈற்றசை நிரைபசையாகவும் இயற்றித் தொல்காப்பியனாரும் நத்தத்தனாரு முதலாகிய வாசிரியர் சொன்ன மதமெல்லாம் வல்லார்வாய்க் கேட்டுக் கொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும். ஒழிந்தனவெல்லாம் இந்நூலோ டொக்கும்.

"போதுபூ போரேறு பூமருதென் றிம்மூன்று
பாதிரியா வைக்கப் படும்"

எனவும்,

"ஏனைய மூன்றுங் கணவிரியாம் வெண்சீரின்
ஈறு விரையா மெனல்"

எனவும் இவற்றைப் பதநெகிழ்த் துரைத்துக்கொள்க.

இனி யொருசாரார் சொல்லும் கடாவும் விடையும்:

"குற்றுகர மொற்றாகக் கொள்ளாதே வெள்ளையின்
மற்றுந் தளைவிரவு மற்றதனாற்-குற்றுகரம்
ஐந்தா றசைச்சீ ரருகிவரும் வஞ்சிக்கண்
ணென்றாற்றா னென்னோ மிழுக்கு"

இது கடா.

"அறுத்திசைக்குஞ் செய்யுட்பா லன்றுள்ளான் றன்பேர்
செறிப்பிற் செயிர்வாக்கா மென்னுங்—குறிப்பினாற்
கேடுரைத்தார் கெட்டவரோ பற்றார்க்குங் கேடல்லர்
நாடறியு மென்பதனா னன்கு"

இது விடை.

இனி ஐந்துவகைப்பட்ட பதினேழ் நிலத்தவாய வெழுபதுதளை யிற் றீர்ந்த சிறப்புடை நாற்சீரடி அறுநூற்றிருபத்தைந்துமாவன சொல்லப்படும்.

"ஐவகை யடியும் விரிக்குங் காலை
மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்த
வெழுபது வகைமையின் வழுவில வாகி
வறுநூற் றிருபத் தைந்தா கும்மே." (தொல்-பொ-செய்-50.)

என்றாராகலின்.

ஐவகையடியும் பதினேழ் நிலமும் மேற் சொல்லப்பட்டன.

எழுபது தளைவழுவாவன:

ஆசிரியநிலம் பதினேழுள்ளும் வெண்டளைதட்டப் பதினேழும், கலித்தளைதட்டப் பதினேழுமாய், ஆசிரியப்பாவிற்கு முப்பத்து நான்கு தளைவழுவாம், என்னை?

"ஐவகை யடியு மறிவுறத் தெரியின்
மெய்வகை யமைந்த பதினேழ் நிலமே"

"ஆசிரிய மருங்கி னோர்ந்து முரிமையிற்
சீரிய வெள்ளைக் கலித்தளை வரினே
நாலெண் வழுவோ டிரண்டென மொழிப."

என்றாராகலின்.

வெள்ளை நிலம் பத்தினுள்ளும் ஆசிரியத்தளைதட்பப் பத்தும், கலித்தளை தட்பப் பத்துமாய் வெண்பாவிற்கு இருபது தளை வழுவாம். என்னை ?




"சிந்தோ டளவு நெடிலொ டொழிய
வந்த வுரிமை யீரைந்து நிலத்து
மென்றளை கலியொடு தட்டன வெள்ளைக்
கொன்றிய தளைவழு விருப தென்ப"

என்றாராகலின். மென்றளை யென்பது ஆசிரியத்தளை.

கலிநில மெட்டினுள்ளும் வெண்டளைதட்பவெட்டும், ஆசிரியத் தளைதட்ப வெட்டுமாய்க் கலிப்பாவிற்குப் பதினாறு தளைவழுவாம். என்னை ?

"அளவிரு நிலத்தொடு நெடில்கழி நெடிலென
விரவு மிருநான் கெய்திய கலியினுண்
மரபே வெள்ளை யாசிரி யத்தளை
வரினும் வழுவகை யீரெட் டாகும்"

என்றாராகலின்.

"மூன்றிற்குஞ் சொன்ன முறையாற் றொகுத்துணரத்
தோன்றும் வழுவெழுப தாம்"

இனி, அறுநூற்றிருபத் தைந்தடியுங் காட்டுமிடத்துச் சீர் வரையறுக்கின்றுழிக் குற்றுகர குற்றிகரங்களை யொற்றாகக்கொண்டு, முற்றுகர முற்றிகரங்களை யெழுத்தாகக்கொண்டு வழங்கப்படும்.

"குற்றுகரத் தோடு வருஞ்சீ ரெழுத்தைந்து
முற்றுகர முற்றசீ ராமென்ப—தெற்றெனக்

குற்றிகரத் தோடு வருஞ்சீ ரெழுத்தைந்து
முற்றிகர முற்றசீ ராம்"

என்றாராகலின்.

ஆசிரியப்பாவிற் குரிய விருநூற் றறுபத்தோ ரடியுமாமாறு சொல்லுமிடத்து, ஆசிரியப்பாவிற் குரிய சீர் பதினாறும்; இயற்சீர் பத்தும், தன்சீ ராறும் என. அவற்றுள் தன்சீராறுந் தளை வகுக் கப்படாமையினின்றுங் கொள்ளப்படா. என்னை?

"தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா"

என்றாராகலின். ஒழிந்த இயற்சீர் பத்துங்கொண்டு தளை வழங் கப்படும். என்னை?

"இயற்சீ ரொருபதுந் தன்சீரோ ராறு
மியற்றுப வாசிரி யத்தென்—றியற்றுங்காற்
றன்சீர் வருமேற் றளைநோக்கார் மற்றொழிந்த
வின்சீராற் கொள்வர் தளை"

என்பவாகலின்.

இயற்சீர் பத்துமேகொண்டு அடிவகுக்கு மிடத்து நான்கு நிலை மையவாம். இரண்டெழுத்துச் சீரும், மூன்றெழுத்துச்சீரும், நான் கெழுத்துச்சீரும், ஐந்தெழுத்துச்சீருமென. என்னை?

"திரண்டியற்சீர் பத்திற்கு நான்கா நிலைமை
யிரண்டாதி யைந்தீ றெழுத்து."

என்பவாகலின்.

அவற்றுள் ஈரெழுத்துச் சீராவன நான்காம். அவையாவன போதுபூ, போரேறு, பாதிரி, தேமா என இவை. என்னை?

"ஈரெழுத்துச் சீராவ போதுபூ போரேறு
பாதிரி தேமா விவை."

என்பவாகலின்.

ஐந்தெழுத் தடியினின்றும் பெருமை பதினேழெழுத்தடிகாறு முரிமையாய்ப் பதின்மூன்றடியு மொரோவொருசீர்பெற விரண்டுமா யிருபத்தாறும். என்னை?

"தேமாவும் பாதிரியுஞ் *சிறெல்லை யைந்தெழுத்தா
வேறும் பதினே ழெழுத்து"

எனவும்,

"ஒருசீர் பதின்மூன் றடிக்குரித் தாக
விருசீரு மாயிருபத் தாறு"

எனவுஞ் சொன்னாராகலின்.

இனிப் போதுபூ, போரேறு என்னும் இரண்டு ஈரெழுத்துச் சீரும் ஆறெழுத்து முதலாகப் பதினே ழெழுத்தின்காறுமுயர்பு, ஒரோவொன்று பன்னிரண்டிற்கும் உரியவாக இரண்டுமாக இருபத்து நான் கடியாம். என்னை?

"ஆறெழுத் தாதி பதினேழு காறயரும்
போதுபூ போரே றிவை."

"ஒன்றிற்குப் பன்னிரண் டாக விருசீர்க்கும்
வந்த விருபத்து நான்கு"

என்றாராகலின்.

இவ்விருபத்துநான்கும் முன்சொன்ன இருபத்தாறுமாய் ஈரெழுத்துச் சீராம்வழி ஆசிரிய அடித்தொகை யைம்பது. என்னை?

"எடுத்துரைத்த வீரெழுத்துச் சீரினா லாய
வடித்தொகை யைம்ப தெனல்"

இனி, மூவெழுத்துச்சீராவன ஏழு. அவையாவன, பாதிரி, புளிமா, விறகுதீ, போதுபூ, போரேறு, பூமருது, 'கடியாறும் எனவிவை. என்னை?

"பாதிரி யின்புளி மாபாய் விறகுதீ
போதுபூ போரேறு பூமருது—கோதில்
கடியா றெனவேழு மூவெழுத்துச் சீராய்
அடியாகு மென்றுரைத்தா ராய்ந்து"

என்பவாகலின்.

---

* 'சிற்றெல்லை' என்பதும் பாடம்,

அவற்றுள், போதுபூ, விறகுதீ, கடியாறு என்னும் இம்மூன்றும் எழெழுத்தடி முதலாகப் பதினெட்டெழுத்தடிகாறும் உயர்ந்த பன்னிரண்டடியும் பெற மூன்றுமாய் முப்பத்தாறும். என்னை ?

"போதுபூக் கோதில் விறகுதீப் பூங்கடியா
றேழாதி யீரொன்பா னேற வொரோவொன்றிற்
காகுமுப் பன்னீ ரடி"

என்பவாகலின்.

இனிப், பாதிரி, புளிமா, போரேறு, பூமருது என்னும் நான்கு சீரும் ஆறெழுத்தடி முதலாகப் பதினெட்டெழுத்தடிகாறும் உயர்ந்த பதின்மூன்றடியும் பெற நான்குமாய் ஐம்பத்திரண்டடியாம். என்னை ?

"ஏனையொரு நான்கு மாறுதி யீரொன்பா
னேறுதலா லைம்பத் திரண்டு"

என்பதாகலின்.

மேற்சொன்ன முப்பத்தாறும் இவை ஐம்பத்திரண்டுந் தலைப் பெய்ய மூவெழுத்துச் சீராயவழி ஆசிரிய வடித்தொகை யெண்பத் தெட்டு. என்னை ?

"எடுத்துரைத்த மூவெழுத்துச் சீரினா னாய
வடித்தொகை யெண்பத்தெட் டாம்"

என்பவாகலின்.

இனி, நாலெழுத்துச் சீராவன ஐந்துவகைப்படும். அவையா வையோ வெனிற், கணவிரி, பூமருது, கடியாறு, விறகுதீ, மழகளிறு என விவை. என்னை ?

"கணவிரி பூமருது கார்க்கடி யாறு
விறகுதீ நான்கெழுத்து மாகும்—குறைவின்
மழகளிறு மன்ன தகைத்து"

என்பவாகலின். அவற்றுள் பூமருது எழெழுத்தடி முதலாகப் பத் தொன்பதெழுத்தடிகாறு முயர்ந்த பதின்மூன்றடியும் பெறப் பதின் மூன்றேயாம், என்னை ?

"பூமரு தேழாதி பத்தொன்பான் காறுயர
வாகு மடிபதின்மூன் றும்"

என்பவாகலின். ஒழிந்த கணவிரி, கடியாறு, மழகளிறு, விறகுதீ என்று நான்கு சீரும் எட்டெழுத்தடி முதலாகப் பத்தொன்ப தெழுத்தடிகாறு முயர்ந்த பன்னிரண்டடியும் பெற நான்குமாய் நாற்பத்தெட்டடியாம். என்னை?

"ஒழிந்தநான் கெட்டாதி பத்தொன்பான் காறு
மொழிந்த வடிநாற்பத் தெட்டு"

என்பவாகலின்.

முன்சொன்ன பூமருது பெற்ற பதின்மூன்றும் இவை நாற்பத் தெட்டுங்கூடி நான்கெழுத்துச் சீராயவழி ஆசிரிய அடித்தொகை அறுபத்தொன்று. என்னை?

"நாட்டிய நாலெழுத்துச் சீரா லடித்தொகை
கூட்டி யறுபதின்மே லொன்று"

என்பவாகலின்.

இனி, ஐந்தெழுத்துச் சீராவது மழகளிறு என்பது. அது தான் ஒன்பது எழுத்து முதலாக இருபதெழுத்தின்காறு முயர்ந்த பன்னிரண்டடியும் பெறுவது பன்னிரண்டடியேயாம். என்னை?

"ஐந்தெழுத் தாகு மழகளி றச்சீரால்
ஒன்பான் முதலா விருப துயர்த்தெண்ண
வந்த வடிபன் னிரண்டு"

என்பவாகலின்.

இவை பத்தியற்சீருள்ளும் ஈரெழுத்துச் சீரால் ஐம்பதும், மூவெழுத்துச் சீரால் எண்பத்தெட்டும், நாலெழுத்துச் சீரால் அறு பத்தொன்றும், ஐந்தெழுத்துச் சீராற் பன்னிரண்டுந் தலைப்பெய்ய, நான்கு நிலைமையானும் ஆயின ஆசிரியவடித்தொகை இருநூற்றிரு பத்தொன்று. என்னை?

"நான்கு நிலைமைக்கும் வந்த வடித்தொகை
நான்கைம்பான் மேலொருபத் தொன்று"

என்பவாகலின்.

இனி, ஆசிரியத்துள் அசைச்சீராயினவற்றால் அடியாமாறு: ஓரெழுத்துச்சீரும், இரண்டெழுத்துச்சீரும், மூன்றெழுத்துச்சீரு மாய் வழங்கா எனக் கொள்க. என்னை?

"ஓரெழுத்து மீரெழுத்து மூவெழுத்து மாய்வழங்கா
ஆசிரியத் துள்ளசைச்சீ ராம்"

என்பவாகலின். அவற்றுள், நேரசை நேர்பசையும் ஓரெழுத் தாய வழி நான் கெழுத்தடி முதலாகப் பதினைந்தெழுத்தடிகாறு முயர்ந்த வொரோவொன்றிற்குப் பன்னிரண்டடியாக இரண்டிற்கு மாய் இருபத்துநான்காம். என்னை?

"நேரசையு நேர்பசையு மோரெழுத் தாயவழி
நான்கெழுத் தாதிப் பதினைந்து காறுயரத்
தோன்றுமா றுலா றடி"

என்பவாகலின். அவ்விரண்டசையும், 'தேமா' என்னுஞ் சீரே யாகுதலால் இரண்டுமாய் அலகுநிலையாற் பன்னிரண்டேயாகக் கொள் ளப்படும். என்னை?

"இருபன் னிரண்டென்ப ரேனையா ரீண்டை
யொருபன் னிரண்டே துணிவு"

என்பவாகலின். இனி நேர்பசை யிரண்டெழுத்தாகக் கொள்ளு மிடத்து ஐந்தெழுத்தடி முதலாகப் பதினாறெழுத்தடிகாறு முயரப் பன்னிரண்டடியாம். என்னை?

"நேர்பீ ரெழுத்தாங்கா லைந்தாதி யீரெட்டுச்
சேர வடிபன் னிரண்டு"

என்பவாகலின். நிரையசையும், நிரைபசையும் இரண்டெழுத் தாயவழி யைந்தெழுத்தடி முதலாகப் பதினேழெழுத்தடிகாறு முயர்ந்து ஒரோவொன்று பதின்மூன்றாக விரண்டுமாக விருபத்தா றாம். என்னை?

"நிரையு நிரைபு மிரண்டெழுத் தாங்காற்
புரைதீரைந் தாதி பதினே ழுயர்வாய்
இயையு மிருபதின்மே லாறு"

என்பவாகலின். நிரையசையும், நிரைபசையும் புளிமா என்னுஞ் சீரே யாகுதலால் அவ்விருக்கையாற் பதின்மூன்றேயாகக் கொள்வர். என்னை ?

"இருபதின்மே லாறென்ப ரேனையா ரீண்டை
யொருபதின்மேல் மூன்றே துணிவு"

என்பவாகலின். இனி நிரையசை மூன்றெழுத் தாயவழி ஆறெழுத் தடிமுதலாகப் பதினெட்டெழுத்தடிகாறு முயர்ந்த பதின்மூன்றடி யாம். என்னை ?

"புரைதீ ருறுதி பதினெட் டுயர
நிரைபு பதின்மூன்று நேரப்—புரைதீர்ந்த
மூவெழுத்தாங் காலே முடிவு"

என்பவாகலின். நேரசையும், நேர்பசையும் ஒரெழுத்தும் ஈரெழுத் துமா ஆங்கால், இருபத்து நான்கடி யாக்கின; நிரையசையும், நிரை பசையும் ஈரெழுத்தும், மூவெழுத்துமா ஆங்கால், இருபத்தாறடி யாக்கின. இவையெல்லாந் தலைப்பெய்ய வாசிரியத்துள் ஐம்பதடி யசைச்சீராயின. என்னை ?

"ஆசிரி யத்து ளசைச்சீ ரடித்தொகை
*நாடின ரைம்பது நன்கு"

என்பவாகலின். இவை யைம்பதும் மேற்சொன்ன விருநூற்றொரு பத்தோரடியுந் தலைப்பெய்தெண்ண வாசிரிய வடித்தொகை யிரு நூற்றறுபத்தொன்றாம். என்னை ?

"அரிதீ ரகவற் கடித்தொகை யாய்ந்த
விருநூற் றறுபத்தொன் றென்று"

என்பவாகலின்.

இனி வஞ்சிப்பாக் குறளடி மூன்றும், சிந்தடி மூன்றும், அள வடியுண் முதன்மூன்றும் பெற்ற வொன்பதுநிலமும், முச்சீர்க்கண் தளையாற்பெற்ற மூச்சீரடியுமாய் வஞ்சி பத்து நிலமும் பெற அவையு மாசிரியவடியுள்ளே யடங்குமெண்பது ; என்னை ?

---

* 'நாட்டினர்' என்பதும் பாடம்.

" ஆசிரியம் பெற்ற வடிவிலமே வஞ்சிக்கு
மாகுமாஞ் சீராற் குறைத்து "

என்பவாகலின்.

வெண்பாவிற்குரிய இருநூற்று முப்பத்திரண்டடியு மாமாறு சொல்லுமிடத்து, இயற்சீர்பத்தும், தன்சீர் நான்குமாய் வெண்பா விற்குப் பதினான்கு சீருமாம். என்னை ?

" வெள்ளைக் கியற்சீர் பெற்றன சீரொரு
நான்குங் கொள்வர் குறித்து "

என்பவாகலின்.

அவை நான்கு நிலைமையவாம். இரண்டெழுத்துச்சீரும், மூன் றெழுத்துச்சீரும், நான்கெழுத்துச்சீரும், ஐந்தெழுத்துச்சீரும் என. என்னை ?

" இரண்டெழுத்து மூன்றெழுத்து நான்கெழுத்து மைந்தும்
திரண்டே யெழுத்துச்சீ ராம் "

என்பவாகலின்.

வெண்பாவிற்குச் சொல்லப்பட்ட பதினான்கு சீருள்ளும் தேமா வும், பாதிரியும், போதுபூவும், போரேறும் என்னும் நான்குசீரும் ஈரெழுத்துச் சீராம். என்னை ?

" தேமாவே பாதிரி போதுபூப் போரேறென்
றாகுமா மீரெழுத்துச் சீர் "

என்பவாகலின். 'அவற்றுள் தேமா எட்டெழுத்து முதலாகப் பதி னாறெழுத்தடிகாறும் உயர்ந்த ஒன்பதடியும்பெற்ற வொன்பதேயாம். என்னை ?

" தேமாவெட் டாதி பதினா றுயர்த்தெண்ண
வாமாகு மொன்ப தடி "

என்பவாகலின். ஒழிந்த பாதிரியும், போதுபூவும், போரேறும் என் றிவை மூன்றும் ஏழெழுத்தடி முதலாகப் பதினேழெழுத்தடிகாறும் உயர்ந்த வொரோ வொன்று ஒன்பதாக இருபத்தேழடியாம். என்னை?

"கழிந்தமூன் றேழாதி மூவைந் துயர
மொழிந்தனர் மூவொன்ப தென்று"

என்பவாகலின். ஈரெழுத்தாயவழி நான்குசீரானும் ஆக்கப்பட்ட வெண்பாவிற்கு அடித்தொகை முப்பத்தாறு. என்னை?

"ஈரெழுத்து நாற்சீரா வெள்ளைக் கடித்தொகை
கூறுவர் முப்பத்தாறென்று"

என்பவாகலின். வெள்ளைக்கு மூவெழுத்துச் சீராவன பாதிரியும், மாசெல்வாயும், மாபடுவாயும், புளிமாவும், போதுபூவும், போரேறும், பூமருதும், விறகுதீயும், கடியாறும் என ஒன்பது சீரும் எனக் கொள்க. என்னை?

"பாதிரியு மாசெல்வாய் மாபடுவா யின்புளிமா
போதுபூப் போரேறு பூமருது—தீதில்
விறகுதீ வீழ்கடியா றென்பதா மென்றுங்
கறைகுவர் மூவெழுத்துச் சீர்"

என்பவாகலின். அவற்றுள் விறகுதீயும், கடியாறும் என்றிரண்டு சீரும் ஏழெழுத்தடி முதலாகப் பதினாறெழுத்தடிகாறும் உயர்ந்த பத்தடியும் ஒரோவொன்றற்குப் பத்துப் பத்தாக இரண்டிற்குமாக விருபதடியாம். என்னை?

"தாவில் விறகுதீத் தண்கடியா றென்றிரண்டு
மேழுமுத லாகப் பதினா றுயர்த்தெண்ண
வாகு மடியிருப தாம்"

என்பவாகலின். ஒழிந்த பாதிரியும், மாசெல்வாயும், மாபடுவாயும், புளிமாவும், போதுபூவும், பூமருதும், போரேறும் என ஏழுசீரும் எட்டெழுத்தடி முதலாகப் பதினாறெழுத்தடிகாறு முயர்ந்த வொன்ப தடியின்மே லொரோவொன்றுக் கொன்பதடியாக வறுபத்துமூன் றடியாம். என்னை?

"ஏனை யெழுசீரு மெட்டாதி யீரெட்டா
யேறத்தா மேழொன்ப தாம்"

என்பவாகலின். மூவெழுத்துச் சீராயவழி வெள்ளைக் கடித்தொகை யெண்பத்துமூன்று. என்னை?

" மூவெழுத் தாம்வழி வெள்ளைக் கடித்தொகை
யெண்ணுங்கா லெண்பத்து மூன்று "

என்பவாகலின். வெள்ளைக்கு நான்கெழுத்துச் சீராவன கணவிரி யும், பூமருதும், கடியாறும், மழகளிறும், மாபடுவாயும், விறகுதீயும், புலிசெல்வாயு மெனவிவ் வேழுசீரும். என்னை ?

" கணவிரி பூமருது கார்க்கடி யாறு
மழகளிறு மாபடுவாய் வாய்ந்த—விறகுதீ
கொள்ளப் புலிசெல்வா யோடு குறித்தேழு
வெள்ளைக்கு நான்கெழுத்துச் சீர் "

என்பவாகலின். அவற்றுள் பூமருதும், மாபடுவாயும் என இரண்டு சீரு மொன்பதெழுத்தடி முதலாகப் பதினெழுத்தடிகாறு முயர்ந்த வொரோவொன்றிற் கெட்டாக விரண்டுமொய்ப் பதினாறடியாம் ; என்னை ?

" நன்பால பூமருது மாபடுவா யென்றிரண்டு
மொன்பான் முதலாய்ப் பதின் றெழுத்தேற
வந்த வடிபதினா றும் "

என்பவாகலின். ஒழிந்த கணவிரியும், கடியாறும், மழகளிறும், விறகுதீயும், புலிசெல்வாயும் என விவ்வைந்தும் எட்டெழுத்தடி முத லாகப் பதினெழுத்தடிகாறு முயர்ந்த வொன்பதடியு மொரோ வொன்றிற் கொன்பதாக வைந்திற்குமாய் நாற்பத்தைந்தடியாம். என்னை ?

" ஏனையைந் தெட்டு முதற்பதி னுறுயர
வான வடிநாற்பத் தைந்து "

என்பவாகலின். நாலெழுத்தாயவழி வெள்ளைக் கடித்தொகை யறு பத்தொன்று. என்னை ?

" நாலெழுத் தாம்வழி வெள்ளைக் கடித்தொகை
யாறு மறுபதின்மே லொன்று "

என்பவாகலின், வெண்பாவிற் கைந்தெழுத்துச் சீராவன, மழகளி றும், புலிபடுவாயும் என விவை. என்னை?

" மழகளிறு வாய்ந்த புலிபடுவா யென்ப
வளவியன்ற வைந்தெழுத்தாஞ் சீர் "

என்பவாகலின். இவையிரண்டு மொன்பதெழுத்தடிமுதலாகப் பதி னோரெழுத்தடிகாறு முயர ஒரோவொன்றிற்கு எட்டாகப் பதினா றடியாம். என்னை?

"எட்டாதி மூவைந் தெழுத்துயர வச்சீராற்
பட்ட வடிபதி னாறு"

"ஒன்பான் முதலாக வைந்தெழுத்துச் சீரிரண்
டாய வடிபதி னாறு"

என்பவாகலின். வெண்பாவிற்குச் சீராலாமடித்தொகை நூற்றுத் தொண்ணூற் றாறு. என்னை?

"தோற்றுங்காற் சீராலாம் வெள்ளைக் கடித்தொகை
நூற்றுத்தொண் ணூற்றின்மே லாறு"

என்பவாகலின்.

இனி, வெண்பாவினுள் அசை சீராய்நடக்குமாறு: வெண்பா வினுள் நாலசையுஞ் சீராமிடத்து மூன்று நிலைமையவாம், ஓரெழுத் தினாற் சீராகலும், இரண்டெழுத்தினாற் சீராகலும், மூன்றெழுத்தி னாற் சீராகலும் என. என்னை?

"வெள்ளையு ளாலசையுஞ் சீராங்கால் முந்நிலைமை
கொள்ளுமா மொன்றாதி மூன்று"

எனவும்,

"ஓரெழுத் தாதியா மூன்றெழுத் தீறாக
மூன்று நிலைமைப் படும்"

எனவுஞ் சொன்னா ராகலின்.

அவை வருமாறு: நேரசையு நேர்பசையு மோரெழுத்தினாற் சீராகுமிடத்து எழெழுத்தடி முதலாகப் பதினேழெழுத்தடிகாறு முயர ஒரோவொன்றிற் கொன்பதாக விரண்டிற்குமாய்ப் பதினெட் டாம். என்னை?

"நேர்நேர் பசையிரண்டு மோரெழுத்துச் சீராங்கால்
ஏழு முதலாப் பதினேழ் துயர்த்தெண்ண
வாகுமீ ரொன்ப தடி."

என்பவாகலின். அவையிரண்டினையுந் தேமாவென்னுஞ் சீராகக் கொள்ள வலகுறிலையா லொன்பதாம். என்னை ?

" இரண்டொன்ப தாயினு மிவ்விரண்டுங் கூட்டித்
திரண்டொன்ப தாகச் செயல்"

என்பவாகலின்.

நேர்பசை யீரெழுத்துச் சீராயவழி யெட்டெழுத்தடி முதலாகப் பதினேழெழுத்தடிகாறு முயர்த்தெண்ண வொன்பதடியாம். என்னை ?

" நேர்பசை யீரெழுத் தாம்வழிச் சீரிதி
னெட்டாதி யீரெட் டுயர்த்தெண்ண வாமென்றங்
கொட்டினு ரொன்ப தடி"

என்பவாகலின்.

இனி, நிரையசையு நிரைபசையு மீரெழுத்தாயவழி ஏழெழுத்தடி முதலாகப் பதினைந்தெழுத்தடிகாறு முயர்த்தெண்ண வொரோ வொன்று ஒன்பதாக விரண்டுமாய்ப் பதினெட்டடியாம். என்னை ?

" நிரையு நிரைபு மிரண்டெழுத்தாங் காலைப்
புரைதீரே ழாதி பதினைந் துயர
வுரைசாலீ ரொன்ப தடி"

என்பவாகலின். இரண்டும் புளிமாவென்னுஞ் சீரே யாகுதலால் இரண்டினையு மொன்பதாகக் கொள்க.

" இரண்டு புளிமா வெண்ணினு ராய்ந்து
திரண்டொன்ப தாகச் செயல்"

இனி, நிரைபசை மூவெழுத்துச் சீராமிடத்து எட்டெழுத்தடி முதலாகப் பதினேழெழுத்தடிகாறு முயர வொன்பதடியாம். என்னை ?

"வைத்த நிரைபசை மூவெழுத்துச் சீராங்கால்
எட்டு முதலாப் பதினே ழுயர்த்தெண்ண
வொட்டினு ரொன்ப தடி"

என்பவாகலின். வெண்பாவினுள் நாலசையு மசைச்சீராய் நின்றுக் கினவடித்தொகை முப்பத்தாறும். என்னை ?

" வெள்ளைக் கசைச்சீரா லாகு மடித்தொகை
கொள்ளுங்கான் மூப்பதின்மே லாறு"

என்பவாகலின். இவையெல்லாந் தலைப்பெய்தெண்ண வெண்பா அடித்தொகை இருநூற்று முப்பத்திரண்டு. என்னை?

" தெரியுங்கால் வெள்ளைக் கடித்தொகை செப்பி
லிருநூற்று முப்பத் திரண்டு"

என்பவாகலின்.

இனிக், கலிக்குரிய சீரால் அடியாமாறு: வெண்பா வுரிச்சீர் நான்கும், நீடுகொடி குழறுபுலி என்னும் இரண்டாசிரிய வுரிச்சீரும், இயற்சீர்பத்தினுள்ளும் தேமா புளிமா என்னு மிரண்டு நேரீற்றியற்சீரு மொழித்து ஒழிந்த எட்டியற்சீருமாய்ப் பதினான்குசீரும் கலிக்குரியவாகும். என்னை?

" திரியேறு பூமாசேர் வாயாத் திரிந்து
மருதுகொடி மாவருவா யாறு—விரிதீப்
புலிசேர வாகும் புலிகளிறு வந்து
புலிவருவா யாங்கலியுட் புக்கு"

என்பதனை விரித்துரைத்துக் கொள்க.




" வெண்பா வுரிச்சீ ரொருநான்கு மாசிரியத்
தின்பா வுரிச்சீரு ளோரிரண்டுந்—திண்பா
வியற்சீரி னெட்டினோ டீரேழு சீரு
முரைப்பர் கலிக்குரிமை யுய்த்து"

என்பவாகலின். அவை நான்குநிலைமையவாம். என்னை?

" உய்த்துரைத்த வீரேழு நான்கு நிலைமையால்
வைத்துரைப்பர் நன்குணர்ந் தோர்"

என்பவாகலின். நான்கு நிலைமையாவன: இரண்டெழுத்துச் சீராகலும், மூன்றெழுத்துச் சீராகலும், நான்கெழுத்துச் சீராகலும், ஐந்தெழுத்துச் சீராகலும் என விவை. என்னை?

" திரண்டவை நானிலைமை செப்பி லெழுத்தோ
ரிரண்டொடு மூன்றுநான் கைந்து"

என்பவாகலின். அவற்றுள் பாதிரி, போதுபூ, போரேறு என்னும் இம்மூன்றும் ஈரெழுத்தாம்வழிப் பதின்மூன்றெழுத்தடி முதலாகப் பதினே ழெழுத்தடிகாறு முயர்ந்த ஐந்தடியும் ஒரோ வொன்றிற்கு ஐந்தாக மூன்றுமாய்ப் பதினைந்தடியாம். என்னை ?

" பாதிரி போதுபூப் போரேறென் றிம்மூன்று
மாதி பதின்மூன்றாய்ப் பத்தின்மே லேழுயர்
வாகும் பதினைந் தடி"

என்பவாகலின்.

இனி, மூவெழுத்துச் சீராய்க் கலியுள் நடப்பன பாதிரி, போதுபூ, விறகுதீ, போரேறு, பூமருது, கடியாறு, நீடுகொடி, மாசெல்வாய் மாபடுவாய் என்னும் இவ்வொன்பது சீரும் எனக் கொள்க. என்னை ?

" பாதிரி போதுபூப் பாய விறகுதீப்
போரேறு பூமருது பூங்கடியா றேறிய
நீடு கொடியோடு மாசெல்வாய் மாபடுவாய்
மூதறிவார் மூவோ ரெழுத்தின் முடிந்தனவென்
றோதினு ரொன்பது சீர்"

என்பவாகலின். அவற்றுள் கடியாறு, மாசெல்வாய், மாபடுவாய் என்னும் இம்மூன்றும் பதின்மூன்றெழுத்தடி முதலாகப் பதினெட் டெழுத்தடிகாறும் உயர்ந்த ஆறடியும் பெற மூன்றுமாய்ப் பதினெட் டடியாம். என்னை ?

" ஒத்த கடியாறு மாசெல்வாய் மாபடுவாய்
பத்தின்மேன் மூன்றாதி பத்தின்மே லெட்டுயர
வொத்த வடிபதி னெட்டு"

என்பவாகலின்.

இனி ஒழிந்த ஆறுமாவன: பாதிரி, போதுபூ, விறகுதீ, போரேறு, பூமருது, நீடுகொடி என்னும் இவ்வாறும் பதினன் கெழுத்தடி முதலாகப் பதினெட்டெழுத்தடிகாறும் உயர்ந்த ஐந்தடி யும் பெற்று ஒரோவொன்றைந்தடியாக ஆறுமாய் முப்பதடியாம். என்னை?

" ஏனை யறுசீரு மீரேழ் முதலாக
நான்கின் மேலிரண் டோங்கி வொரோவொன்றற்
கைந்தா வடிமுப்ப தாம்"

என்பவாகலின், இவை முப்பதும் மேற்கூறிய பதினெட்டுமாய் மூவெழுத்தாய வழிக் கலியடித்தொகை நாற்பத்தெட்டு. என்னை?

" மூவெழுத் தாங்கான் முரற்கைக் கடித்தொகைமே
லேவினுர் நாற்பதின்மே லெட்டு"

என்பவாகலின். நாலெழுத்துச் சீராய்க் கலியுணடப்பன கணவிரி, கடியாறு, விறகுதீ, பூமருது, நீடுகொடி, புலிசெல்வாய், மாபடுவாய், மழகளிறு, குழறுபுலி என்னும் ஒன்பது சீரும் எனக்கொள்க. என்னை?

" நலமிகு நாலெழுத் தாயவழி நல்லாய்
கணவிரி கார்க்கடி யாறு விறகுதீப்
பூமருது நீடு கொடியே புலிசெல்வாய்
மாபடு வாயே மழகளிறு தாவில்
குழறுபுலி யென்றூர் குறித்து"

என்பவாகலின். அவற்றுள் கணவிரி, கடியாறு, மழகளிறு என்னும் மூன்றும் பதினுன்கெழுத்தடி முதலாகப் பத்தொன்ப தெழுத் தடிகாறும் உயர்ந்த ஆறடியும் பெற ஒரோ வொன்று ஆருக மூன்று மாய்ப் பதினெட்டடியாம். என்னை?

" கணவிரியுங் கண்ணுர் கடியாறு மேனை
மழகளிறு நாலெழுத்துக் கொள்ளு மியல்வகையா
ஈரேழ் முதலாக வீரொன்பான் மேலொன்று
சேர வடிபதி னெட்டு"

என்பவாகலின். மாபடுவாய் பதினுன்கெழுத்தடி முதலாகப் பத் தொன்ப தெழுத்தடிகாறும் உயர ஆறடியாம். என்னை?

" மாபடுவாய் பத்தின்மே ஞன்காதி பத்தொன்ப
தேற வடியிருமூன் றும்"

என்பவாகலின். புலிசெல்வாய் பதின்மூன்றெழுத்தடி முதலாகப் பத்தொன்ப தெழுத்தடிகாறும் உயர ஏழடியாம். என்னை?

" பத்தின்மேன் மூன்று முதலாப் புலிசெல்வாய்ப்
பத்தொன்ப தேறவே ழாம்"

என்பவாகலின். விறகுதீ, பூமருது, நீடுகொடி, குழறுபுலி என்னும் நான்கும் பதினைந்தெழுத்தடி முதலாகப் பத்தொன்ப தெழுத்தடி காறும் உயர்ந்த ஐந்தடியும்பெற நான்குமாய் இருபதாம். என்னை?

"ஏனைநான் கைம்மூ வெழுத்தாதி பத்தொன்ப
தேற வடியிருப தாம்"

என்பவாகலின். நான் கெழுத்தாம்வழி கலியடித்தொகை ஐம்பத்தொன்று. என்னை?

"நாலெழுத் தாங்காற் கலியி னடித்தொகை
யாயுங்கா லைம்பதின்மே லொன்று"

என்பவாகலின்.

இனிக் கலிக்குரிய ஐந்தெழுத்துச் சீராவன மழகளிறு, புலிபடு வாய், குழறுபுலி என்னும் இவை. என்னை?

"மழகளிறு வாய்த்த புலிபடு வாயே
குழறுபுலி யைந்தெழுத்துச் சீர்"

என்பவாகலின். அவற்றுள், குழறுபுலி பதினேழெழுத்தடி முதலாக இருபதெழுத்தடிகாறும் உயர்த்தெண்ண ஐந்தடியாம். என்னை?

"கோதில் சிறப்பிற் குழறு புலியென்ப
தீரெட்டி னாதி யிருப துயர்த்தெண்ண
வாகு மடித்தொகை யைந்து"

என்பவாகலின். மழகளிறு பதினைந்தெழுத்தடி முதலாக இருபதெழுத்தடிகாறும் உயர்த்தெண்ண ஆறடியாம். என்னை?

"மாசில் சிறப்பின் மழகளி றென்னுஞ்சீர்
மூவைந்தா தாதி யிருப துயர்த்தெண்ண
வாயின வாறடி யாய்ந்து"

என்பவாகலின். புலிபடுவாய் பதினான்கெழுத்தடி முதலாக இருபதெழுத்தடிகாறும் உயர்த்தெண்ண ஏழடியாம். என்னை?

"பொற்பமைந்தார் சொன்ன புலிபடுவா யென்னுஞ்சீர்
பத்தின்மே னான்கு முதலிருப தீறாக
ஒத்தமைந்த வேழே ழடி"

என்பவாகலின். ஐந்தெழுத்தாம் வழிக் கலியின் அடித்தொகை பதினெட்டு. என்னை?

"ஐயெழுத் தாயவழி யான்ற கலியடி
யெய்துங்கா லீரொன்ப தாம்"

என்பவாகலின். இனிக் கலியடி யெல்லாங் கூட்டியெண்ண நூற்று முப்பத்திரண்டடியாம். என்னை ?

"கருதுங்கா லாய்ந்த கலியடி யெல்லா
மொருநூற்று முப்பத் திரண்டு"

என்பவாகலின். கலியடியுள் அசைச்சீராயினவை யில்லையென்று உணர்க.

ஆசிரியவடி இருநூற்று அறுபத்தொன்று; வெண்பாவடி இருநூற்று முப்பத்திரண்டு; கலியடி நூற்றுமுப்பத்திரண்டு; ஆக அறுநூற்றிருபத் தைந்து அடியாம். என்னை ?

"இருநூற் றிருமுப்பத் தொன்றகவற் கேனை
யிருநூற்றே டெண்ணைகு வெள்ளைக்—கொருநூற்று
முப்பத் திரண்டா முரற்கைக் கிவையறுநூற்
றற்றமி லையைந் தடி"

என்பவாகலின்.

இனிச் சந்தமுந் தாண்டகமும் ஆமாறு: நாலெழுத்து முதலாக இருபத்தா றெழுத்தின்காறு முயர்ந்த இருபத்து மூன்றடியானும் வந்து தம்முளொத்தும், குருவும் லகுவும் ஒத்தும் வந்தன அளவியற் சந்தம். எழுத்தொவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வருவன அளவழிச்சந்தம்.

இருபத்தேழ் எழுத்து முதலாக உயர்ந்த எழுத்தடியினவாய் எழுத்துங் குருலகுவும் ஒத்து வருவன அளவியற்றாண்டகம். எழுத்தொவ்வாதும், எழுத்தலகு ஒவ்வாதும் வருவன அளவழித் தாண்டகம். என்னை ?

"ஈரிரண் டாதி யிருபத்தா றந்தமாச்
சாரு மெழுத்தின்கட் சந்தமாஞ்—சீரொத்த
மூவொன்ப தாதியா முற்றின தாண்டகமென்
றோதினர் தொல்லோ ரெடுத்து"

"சந்தமுந் தாண்டகமுந் தம்முள வொத்தலகு
வந்த முறைமை வழுவாவேன்—முந்தை
யளவியலா மென்றுரைப்ப ரவ்வாறன் றாகி
லளவழியா மென்ப ரவர்"

இவற்றை விரித்துரைத்துக் கொள்க.

குருலகுவாவன: குற்றெழுத்து ஒற்றடாது வந்தது லகு; அது ரகரவடிவிற்று. இனிக் குற்றெழுத்து ஒற்றடுத்தும் நெட்டெழுத்து ஒற்றடுத்தும், நெட்டெழுத்துத் தனித்தும் வந்தது குருவாம்; அது டகர வடிவிற்று. அடியிறுதிக்கண் வந்த குற்றெழுத்து ஒருகாற் கூறுமாற்றாற் குருவாகவும் இடப்படும். லகுவிற்கு ஓரலகாகவும் குருவிற்கு ஈரலகாகவும் இடினும் இழுக்கா.

"ரகரவடி வாமீ துலகு குருவே
விகரில் டகாரமென நேர்"

என்றாராகலின்.

"குற்றெழுத்துச் செவ்வி லகுவாகு நெட்டெழுத்துங்
குற்றொற்று நெட்டொற்றங் கோணமாய்த்—தெற்றக்
குருவென்ப தாகுங் குறிலுங் குருவா
மொருகா லடியிறுதி யுற்று"

எனவும்,

"குருலகு வாகுங் குருவா நெடிலு
நெடிலொற்றுங் குற்றொற்று நின்று"

எனவுஞ் சொன்னாராகலான். அவற்றிற்குச் செய்யுள்:

"ஆதி நாதர்—பாத மூலம்
நீதி யாய்நின்—றோது நெஞ்சே"

இது நாலெழுத்தடி யளவியற் சந்தம்.

"பந்த நீக்குறி—லந்த மில்குணத்
தெந்தை பாதமே—சிந்தி நெஞ்சமே"

இஃது ஐந்தெழுத்தடி யளவியற்சந்தம்.

"திரித்துவெங்கய—முரித்து நல்லறம்
விரித்த வேதியர்க்—குரித்தெ னுள்ளமே"

இஃது ஆறெழுத்தடி யளவியற் சந்தம்.

"பாடுவண்டு பாண்செயும்
நீடுபிண்டி நீழலான்

வீடுவேண்டு வார்க்கெலா
மூடுபோக்கு முத்தமன்"

இஃது ஏழெழுத்தடி யளவியற் சந்தம்.

"முரன்று சென்று வட்டின
விரந்த பிண்டி நீழலுள்
பரந்த சோதி நாதனெம்
மரந்தை நீக்கு மண்ணலே"

இஃது எட்டெழுத்தடி யளவியற் சந்தம்.

"வினையைத் தான்மிடைந் தோட்டிநீர்
அனைத்துத் தானருள் காண்குறிற்
கனகத் தாமரைப் பூமிசைச்
சினனைச் சிந்திமின் செவ்வனே"

இஃது ஒன்பதெழுத்தடி யளவியற் சந்தம்.

"ஆதி யானற வாழியி னலர்ச்
சோதி யான்சொரி பூமழை யான்வினைக்
காதி வென்றபி ரானவன் பாதமே
நீதி யானினை வாழிய நெஞ்சமே"

இது பதின்ரெழுத்தடி யளவியற் சந்தம்.

"குரவு தான்விரி கொங்கொடு கூடின
மரவ மாமல ரூதிய வண்டுகாள்
இரவி போலெழு வார்க்கெம ராகிநீர்
கரவ னூர்திரை யின்கடி தாகவே"

இது பன்னீரெழுத்தடி யளவியற்சந்தம்.

"கலையெலா முதற்கணே கண்டு கொண்டுபெண்
கொலையினுங் கொடுந்தொழில் பூண்டு கோலவெஞ்
சிலையினுன் செழுஞ்சரஞ் சேர்த்த செவ்வனே
மலையமா ருதத்தொடு வந்து தோன்றுமே"

எனவும்,

"கோடற் கொல்லைக் கோல வரம்பிற் குவவுத்தேன்
பாடக் கொன்றைப் பைம்பொழி னீழற் பருவஞ்சேர்
வாடைப் பாங்காய் மத்தம யூரக் கிழவோன்வந்
தாடிக் கொண்மூ வார்த்தன வம்பொற் கொடியன்னாய்"

எனவும் இவை பதின்மூன் றெழுத்தடி யளவியற் சந்தம்.

" குரவக் கோலக் கோங்கணி சோலைக் குயிலாலப்
பரவைத் தேன்காள் பாடுமி னீரும் பகைவெல்வான்
புரவித் தேர்மேற் போனவ ராறு தினிவந்தால்
விரவிக் கோவின் வெங்கணை வேனிற் பொருவேளே"

இது பதினான் கெழுத்தடி யளவியற்சந்தம்.

" அதிகண மிருவினை மிறைவனொ டிமையோர்
துதிதிகழ் மொழியிசை துதைமதி லுடையே
மதிபதி யடியிணை யடைகுவ மெழுநா
மதிபுரை திருமுக மடநடை மயிலே"

இது பதினைந்தெழுத்தடி யளவியற்சந்தம்.

" மாவரு கானல் வரையதர்ப் பாங்கர் மலிகுரவின்
பூமலி சோலைத் திருவருங் காண்பர் புதுமதுநீர்த்
தாமரை வாவித் தடமலர் சாடிக் கயலுகளக்
காமரு நீலங் கனையிருள் காலுங் கழனிகளே"

இது பதினாறெழுத்தடி யளவியற் சந்தம்.

" கோலக் கொன்றைக் கொழுந னெழிலார் கொம்பவள் தோளை நாளுஞ்
சாலப் புல்லித் தளவ மடவா டானகத் தோகை யெல்லா
மாலக் கொண்மூ வதிரு மிதுகா ணும்மலர்க் கோதை நல்லாய்
காலச் செவ்வேற் கனகக் கடகக் காதலர் சொன்ன வாறே"

எனவும்,

" செருவினை வைவேற் றிகழொளி வேந்தர் திருமுடிமே
லுருவினை யொண்போ துறுவின பாதங் குறைவறியாக்
கருவினை யாட்டுங் கவினுடை வாட்கட் கனிபுரைவாய்த்
திருவினை யாடுங் கனவரை யாகச் சினவரனே"

எனவும் இவை பதினே ழெழுத்தடி யளவியற்சந்தம்.

" பிணியார் பிறவிக் கடலுட் பிறவா வகைநா மறியப்
பணியாய் மணியா ரணைமேற் பணியா வொருமூ வுலகுங்
கணியா தணருங் கவினுர் கலைமா மடவாள் கணவா
வணியார் கமலத் தலரா சனனே யறவா ழியனே"

இது பதினெட்டெழுத்தடி யளவியற் சந்தம்.

"அன்னங்கண்ட ரவிந்த வாவி யதுகண் டம்பூம் பொழிற்புன்னையின்
றின்னுங் கண்ட ஞாழலி னீழலிதுகண் டிங்கே நில்யான் சென்றுகோன்
மன்னுங் காவி விரிந்த வாச மலரா லனைகே தகைப்போது
பொன்னம் போது கவிரந் தாது துயலத் தண்டா துதந்தீவனே"

இது பத்தொன்பதெழுத்தடி யளவியற்சந்தம்.

அருவிப் பலவரை காள்சொக்கத் தருவே யம்மாத விப்பந் தர்காண்
மருவிப் போதினி கோது சூத வனமே வடாதன்ன லீர்களாற்
செருவிற் கேயுரு வன்னசெம்ம லிக்குன் றத்திடை யின்வந் தாலவர்க்
கிருவிப் பைம்புன நோக்கி யேயினை யாரினைந் தெய்தினு ரென்மினே.

இஃது இருபதெழுத்தடி யளவியற்சந்தம்.

"பின்றாழும் பீலி கோலிப் பெருமுகி லதிரப் பிண்டமாய் வண்டு பாட
பொன்றாழுங் கொன்றை நீழற் புனமயி லினமாய்ப் பூமிசைப் போந்து தேதே
யென்றாடக் கோட லிளகின விதுக்கா ரென்ப தியங்கி நின்று நாளைச்
சென்றார்தேர் வந்து தோன்றுஞ் செறிவளை மடநல்லாய் செல்க நின்செல் [லாான்"

எனவும்,

"வண்பாராண் மன்னர்பொன் மகுடங் கிரிகாள மாலை கொய்யாத போதினிற்
பெண்பாலோர் கேளவன் ஞானப் பெருங்கட லைவர்ப் பேரிளம் பெண்டி [ராதி
பண்பாரென் பாடு பாதம் பரம நிருப மாலைக் குணக்கீர்த்தி யென்பர்
நண்பாரின் கமலமாண் புடையவ ரடைவர் நற்குணச் சித்தி தானே"

எனவும் இவை யிருபத்தோரெழுத்தடி யளவியற்சந்தம்.

"அருமாலைத் தாதலர நின்றமர் குழுவினே
டாயிரச் செங்க ணனுந்
திருநாமஞ் செப்பநேற் றன்றிக ழொளிவளையத்
தேசுறூ தூர வீரக்
கருமாலைக் காதிவென்றான் கமல சரணமுங்
கண்டுகை கூப்ப மாட்டார்
பெருமான்மற் போற்றியானின் பெருமை யருகனும்
வல்லமோ பேசு மாறே"

இஃது இருபத்திரண்டெழுத்தடி யளவியற் சந்தம்.

"சோதி மண்டலந் தோன்றுவ துளதேற்
சொரியு மாமலர்த் தூமழை யுளதேற்
காதி வென்றதோர் காட்சியு முளதேற்
கவரி மாருதங் கால்வன வுளவேற்
பாத பங்கயஞ் சேர்நரு முளரேற்
பரம கீதமும் பாடுந ருளரேல்
ஆதி மாதவர் தாமரு குளரேல்
அவரை யேதெளிந் தாட்படு மனனே"

இஃது இருபத்து மூன்றெழுத்தடி யளவியற் சந்தம்.

"விலங்கு நீண்முடி யிலங்க மீமிசை
விரிந்த மாதவி புரிந்த நீள்கொடி
யுலங்கொ டோள்கொடு சலந்து சூழ்தர
வுறைந்த புள்ளின நிறைந்த வார்சடை
யலங்க ரூழ்தர மலர்ந்த தோள்வலி
யசைந்த வாடவ ரிசைந்த சேவடி
வலங்கொ ளுவல ரலர்ந்த வானிடை
வரம்பி லின்பமு மொருங்கு சேர்வரே"

இஃது இருபத்துநான்கெழுத்தடி யளவியற் சந்தம்.

"திருகிய புரிகுழ லரிவைய ரவரொடு
திகழொளி யிமையவரும்
பெருகிய கரிகுல மருவிய படையொடு
பிரிதலி லரசவையு
முருகுடை மலரொடு வழிபட முனிகளை
களியக லாவருகன்
திருவடி முறைமுறை யடைபவ ரடைகுவ
ரமரொளி யமருலகே"

எனவும்,

"பொங்கழ லுகம் புற்றக நீங்கிப்
புரிமிக முறுகிய கயிறெனை யிளிரத்
தங்கிய வெண்டேர் வெஞ்சுர நீந்தித்
தனதட மிடைசெறி மடமயி லியலாய்

செங்கய லுண்கட் டேமொழி யாரும்
திறலொடு முடுகிய செறிகழ லவனும்
பங்கய வாவிப் பன்மணி மாடப்
பதிநனி குறுகுவர் பரிவொழி யினிநீ."

எனவும் இவை யிருபத்தைந்தெழுத்தடி யளவியற் சந்தம்.

"கரிமருவு கடிமதிலி னிடுகொடிக டிசைதடவு கடுமையினதாய்த்
திருமருவு பெருவிழவொ டமரர்குழு வொழுகுதொழு செழுமைவழுவாத்
திருமரபி னரபதிக ளணிகிளரு மணிமகுட முறமறுவிலாக்
குருமருவு விரிகமல சரணநனி பணிவர்மலி குருசினகரே"

இஃது இருபத்தாறெழுத்தடி யளவியற் சந்தம்.

இனி யளவழிச்சந்தத்திற்குச் சில வருமாறு:

"பொங்கு சாமரை தாம்வீசச்
சிங்க பீட மமர்ந்தவெந்
கொங்கு சேர்குளிர் பூம்பிண்டிச்
செங்க ணுனடி சேர்மினே"



எனவும்,

"போத லேபொரு ளாக்கொண்ட
காத லாற்கொரு காரியந்
தூது சென்றுரை யாய்தும்பி
நீதி யாநெறி போகியே"

எனவும்,

"அருண மாஞ்சினை கறித்துட னகன்பொழி லலவனைக் குயில்கூவத்
தருண வேனிலும் புகுந்தது தனுநெகத் தடமலர்ச் சார்புங்கங்
கருண மூலமோ டுறசிறைந் திறைஞ்சினன் கறைமிடற் றிறைநாட்டக்
கிரணந் தான்சுடக் கிரியிடைத் திருவுடம் பிழந்துழல் கிழவோனே"

எனவும் இவை நான்கடியும் எழுத்தொத்துக் குருவிலகு ஒவ்வாது வந்த வளவழிச் சந்தம். பிறவும் வந்த வழிக் கண்டுகொள்க.

அருங்கயம் விசும்பிற் பார்க்கு மணிச்சிறு சிரலையஞ்சி
யிருங்கயந் துறந்து திங்க ளிடங்கொண்டு கிடந்தநீல
நெருங்கிய மணிவிற் காப்ப நீண்டுலாய்ப் பிறழ்வச் செங்கேழ்க்
கருங்கய லல்ல கண்ணே யெனக்கரி போக்கினாரே."

—சீவகசிந்தாமணி-626.

இஃது எழுத்தும், குருவும், இலகுவும் ஒவ்வாதுவந்த அளவழிச் சந்தம். பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இனித் தாண்டகம் வருமாறு:

" வானிலவி முகிலார்ப்ப மருவி மாண்பான்
மயிலினமாய் வந்துலவச் சுரும்பு பாடத்
தேனுலவு நறுமுல்லை முறுவலிப்பத்
திசைதிசையிற் றேந்தளவஞ் சிறந்து பூப்பக்
கானிலவு மலிகொன்றை கனக ஞாலக்
கவினியவாய்ச் சார்ந்ததுகார் கலந்து கண்ணார்
மானிலவு மடநோக்கி னெடிய வாட்கண்
வனமுலையாய் மற்றுமனம் வருந்த னீயே "

இஃது இருபத்தே ழெழுத்தடியால் வந்த வளவியற்றாண்டகம்.

" கருனிறப் பொறிமுகக் கடதடத் தமிழ்செவிக் கறைமருப் புறுவலிக்
கவினுடைக் கரிகளைக் கனவரைக்கட்
சுருணிறத் தெரியுளைச் சரிமுகத் தொளியுகிர்ச் சுடரெயிற் றிடிகுரற்
றுறுமயிர்த் துணிசினத் தரிசுழற்று
மிருளுடைச் சிறுநெறிக் கவலையுட் டனிவரற் கினிவரத் தகுவதன்
றிரவினிற் பகலினிற் பெரிதுநன் றாற்
றிருனிறப் புரிவளைச் சிறுநுதற் பெரியகட் சிகழிகைப் புனைகுழற்
றுவரிதழ்த் திகழொளிக் கலையிவட்கே "

இது முப்பத்தேழெழுத்தடி யளவியற்றாண்டகம்.

" அனவரத மமர ரரிவையரொ டணுகி யகனமரு முவகை
யதுவிதியி னவர வணிதிகழ வருவ ரொருபாற்
கனவரையொ டிகலு மகலமொளி கலவு கரகமல நிலவு
கனகமுடி கவினு கழலரசர் துழனி யொருபால்
தனவரத நளின சரணநனி பரவு தகவுடைய முனிக
டரணிதொழ வழுவி றருமநெறி மொழிவ ரொருபாற்
சினவரன பெருமை தெரியினிவை யவன திருவிரவு கிளவி
தெனிருமொழி யளவு சிவபுரம தடைத றிடனே."

இது நாற்பத்து மூன்றெழுத்தடியால் வந்த வளவியற்றாண் டகம்.

“அல்லற் கோடைக் கொல்லைத் தேவா
யலைகடலி னமுத மளறுபட வணுகி
யணிபுணரி பருகி யரவலறி மறுக
வதிர்ந்தன கார்முகில்
மல்லற் செல்வக் கொல்லைப் பாங்கே
மலிபிடவ மலர வருதளவ மிளக
மயிலினமு மகவ மதுகரமு முரல
மகிழ்ந்தன மானினம்
தொல்லைக் கைம் மாச் செம்மற் றிண்டேர்
துரகமொடு வயவ ரரவமிகு பரவை
தொலையவர னழிய நிலைமைதுய ரடைய
விலங்கிய தோளினாய்
எல்லைக் காலஞ் சொல்லிற் றீதா
மெழுதுகொடி யனைய விடுகுமிடை யொடிய
வெழினிலவு கனக மினமணியொ டியைய
விணைந்தெழு கொங்கையாய்.”

இது நாற்பத்தேழெழுத்தடி யளவியற்றாண்டகம். இனி யொழிந்த வளவியற்றாண்டகம் வந்த வழிக் கண்டுகொள்க.

இனியளவழித் தாண்டகத்திற் சில வருமாறு:

“மூவடிவி னாலிரண்டு சூழ்சுடரு நாண
முழுதுலக மூடியெழின் முளைவயிர நாற்றித்
தூவடிவி னாலிலங்கு வெண்குடையி னீழற்
சுடரோயுன் னடிபோற்றிச் சொல்லுவதொன் றுண்டாற்
சேவடிக டாமரையின் சேயிதழ்க டண்டச்
சிவந்தனவோ சேவடியின் செங்கதிர்கள் பாயப்
பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து.
புலங்கொளாவா வாலெமக்கெம் புண்ணியர்தங் கோவே”
—சூளாமணி-துறவு-64.

இஃது எழுத்தும் லகுவும் ஒவ்வாது வந்த அளவழித் தாண்டகம். பிறவுமன்ன. சந்தவடியுந் தாண்டகவடியும் விரவி யோசை கொண்டுவந்தால், அவை சந்தத்தாண்டகம் என்றும், தாண்டகச் சந்தம் என்றும் வழங்கப்படும். என்னை ?

" சந்தச் சரணமும் தாண்டகத்தின் பாதமும்
வந்து மயங்கி வழுவிகந்த—செந்தமிழ்ந
ரீண்டு வடநூற் புலவ ரியற்சந்தத்
தாண்டகமென் றுரைப்ப தாம் "

என்பவாகலின். அவற்றுட் சில வருமாறு:

" அங்குலியி னவிரொளியா லருண மாகி
யணியாழி மரகதத்தாற் பசுமை கூர்ந்து
மங்கலஞ்சேர் நூபுரத்தா லரவஞ் செய்யு
மலரடியை மடவன்ன மழலை யோவாச்
செங்கமல வனமென்று திகைதத போழ்திற்
றேமொழியாற் றெருட்டுதியோ செலவி ஞலோ
கொங்கலர்பூங கருங்கூந்தற் சுடிகை நெற்றிச
சுந்தரிநிற் பணிவார்க்கென் றுணிவு தானே "

இதனுட் சந்தவடியுந் தாண்டகவடியும் வந்தவாறு கண்டு கொள்க. பிறவுமன்ன.

இனியொருசாரார் சந்தவடி பலவும் வருவனவற்றைச் சந்தத் தாண்டகமென்றுந், தாண்டக வடி பலவாய் வருவனவற்றைத் தாண்டகச் சந்தமென்றும், சந்தவடியுந் தாண்டகவடியும் ஒத்து வருவனவற்றைச் சமசந்தத்தாண்டகமென்றும் வழங்குவர். அவை வந்தவழிக் கண்டுகொள்க. நானகடியொத்து வருவனவும், நான் கடியுமொவ்வாது வருவனவும், இரண்டடியொத்து நான்கடியால் வருவனவும், பிறவாற்றால் வருவனவும், மாராசசையும், மாராச்சாக் கிருதியு முதலாகிய சாதியும், ஆரிடமும், பிரத்தார முதலாகிய ஆறு பிரத்தியமும், பிங்கலமும், மாபிங்கலமும், சயதேவமும், ஞானசாரியமும், சந்திரகோடியும், மயூரத்திரிசந்தமும், மேடகத்திரி சந்தமும் முதலாகிய சந்தோபிசிதிகளுள்ளும், பாட்டியன் மரபு, மாபுராண முதலாகிய தமிழ் நூலுள்ளும் புகுதியுடையார்வாய்க் கேட்டுக்கொள்க. அவை யீண்டுரைப்பிற் பெருகும். சந்தமும் தாண்டகமும் என்றிவற்றுக் கெழுத்து எண்ணுகின்றுழிக் குற்றுகர விகரங்களை யெழுத்தாகவே கொண்டெண்ணுக. இனிக் காக்கை பாடினியாரும், பாட்டியலுடையாரும், யாப்பியலுடையாரும், முதலாகிய வொருசாராசிரியர் இவற்றையும இனத்தின்பாற்படுத்தி வழங்குவர். தொல்காப்பியனுர் முதலாகிய வொருசாராசிரியர் இவற்றை

யும் மேற்கூறப்பட்ட பாவினங்களையும் கொச்சகக்கலிப்பாற்படுத்தி வழங்குவர் எனக்கொள்க. இனியொருசார் வடநூல்வழித் தமிழாசிரியர் ஒரு புடை யொப்புமை நோக்கி இனமெனப்படா; மூவகைப் பட்ட விருத்தங்களுள்ளுஞ் சந்தத்தாண்டகங்களுள்ளுமே பட்டடங்கும் என்பர். இந்நூலுடையார் காக்கைபாடினியார் முதலாகிய வொருசாராசிரியர் மதம்பற்றி யெடுத்தோதி இவையு முடன்பட்டா ரெனக் கொள்க. என்னை?

"ஒருபுடையா லொப்புரைப்பின் மற்றுமோர் பாவிற்
கொருபுடையா லொக்குமா றுண்டா—மிருபுடையு
மொப்பித்துக் கோடுமோ வொன்றிற்கே சார்த்துமோ
வெப்பெற்றிக் கோடு மினம்"?

இது கடா.

"குன்றி யேய்க்கு முடுக்கை யென்றூழ்க்கரி
தென்று மோசிவப் பென்றுமோ வவ்விரண்
டொன்றி னின்றவென் றோது மோவெனி
னின்ற தோர்வர லாற்றெடு கிற்குமே"

இது விடை.

"வெள்ளைக்குச் செப்ப லகவற் ககவலே
துள்ளலே தூங்கல் கலிவஞ்சிக்—குள்ளாகுந்
தொன்னூற் புலவர் துணிவெனிற் பாவினமுஞ்
சொன்னூற் புலவர் துணிபு"

இனிச் செய்யுட்கட்கு வருண முதலாயின சொல்லுமாறு:

"தெய்வந் துணையிராசிப் பக்கந் திணைபொழுது
பொய்யில் புகைவண்ணம் பூச்சாந்து—மையில்கோ
ளுற்கதி சாதி கிழமைநா ணன்கமையப்
பாற்படுக்க பானுன்கின் பால்"

"வெண்பா முதலாக வேதிய ராதியா
மண்பால் வகுத்த வருணமாம்—வெண்பா
வினங்கட்கு மவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூன்
மனந்தட்பக் கற்றோர் மகிழ்ந்து"

எனக்கொள்க.

" வெண்பா முதலா நால்வகைப் பாவு
மெஞ்சா நாற்பால் வருணர்க் குரிய
பாவினத் தியற்கையு மதனோ ரற்றே
சீரினுந் தளையினுஞ் சட்டக மாயினும்
பேரா மரபின் பாட்டெனப் படுமே"

" அவைதிரி பாகின் விசாதி யாகும்"

என்றார் யாப்பியனூலுடையார் எனக்கொள்க.

இவற்றுக்கு நிறமும், திணையும், பூவுஞ், சாந்தும், புகையும், பண்ணும், திறனும், இருதுவும், திங்களும், நாளும், பக்கமும், கிழமையும், பொழுதும், கோளும், இராசியும், தெய்வமும், திசையும், மந்திரமும், மண்டிலமும், பொறியும், எழுத்து முதலாகிய பண்பும் அறிந்து ஆராதிப்ப அவை யாவர்க்கும் கல்வியும், புலமையுமாக்கி நன்மைபயக்கும். இவையெல்லாந் திணை நூலுள்ளும் பிறவற்றுள்ளுங் கண்டுகொள்க. அவற்றுட் சிலவருமாறு:

" வெண்பா முதலாக வேதிய ராதியா
மண்பால் வகுத்த வருண மா—மொண்பா
வினங்கட்கு மிவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூல்
மனந்தட்பக் கற்றோர் *மகிழ்ந்து,"

" மீனுடு தண்டேறு வேதிய ராதியா
வானுத வைந்தொன்பா னயினவுந்—தேனார்
விரைக்கமல வாண்முகத்தாய் வெண்பா முதலா
வுரைத்தனவு மிவ்வாறே யொட்டு."

" ஆரன் மகமோ டனுட மவிட்டமென்
றீரிரண்டு மாதியா"வெண்ணியநாட் —சீரிய
வெண்பா வகவல் கலிவஞ்சி யென்றுரைத்தா
ரெண்பா வறிவோ ரெடுத்து."

" வேதியர்க்கு வெண்மை வியன்செம்மை வேந்தர்க்கு
நீதிசால் பீத நிதிக்கிழவோர்க்—கோதிய
நீலமா மேனி நிலைமையோ ரக்குலத்தின்
பாலவாம் பாவிற்கு மற்று"

---

* 'மதித்து' என்பதும் பாடம்.

"ஆரமரி சந்தனம் பழுப்போ டாங்கலவை
பாரியனாற் பானான்கின் பாற்படுத்தார்—சீரிய
வெண்போது செங்கழுநீர் வேரிசேர் சண்பகத்தின்
வண்போது நீல மலர்"

"மகயிர மாதியா வண்பூராங் காறும்
வகையின் மருட்பாவி னுளாம்—தகாதென்றெண்
டோராசாங் தேரிரு சந்தச்சென் றெண்போது
தேரிற் பவளஞ் சிவப்பு"

"வேதவாய் மேன்மகனும் வேந்தன் மடமகளு
நீதியாற் சேர்ந்து நிகழ்ந்த நெடுங்குலம்போல்
ஆதிசால் பாவு மரசர் வியன்பாவும்
ஓதிய வாறொன்றி மருட்பாவா யோங்கிற்றே"

"பானாளாற் பாவோரை தாமொப்பப் பண்புணர்ந்த
மாநா வலர்வகுத்த வாய்மையாற்—பானான்கின்
மூவிற் றினமு மொழிப்புத்தே ளுண்மகிழப்
பாவித்துப் பாடப் படும்"

"பண்பாய்ந்த வேழு பதினா றிழிபுயர்வா
வெண்பா வடிக்கெழுத்து வேண்டினார்—வெண்பாவி
னீற்றடிக் கைந்தாதி யீரைந் தெழுத்தளவும்
பாற்படுத்தார் தொல்லோர் பயின்று"

"முற்றுகரந் தானு முதற்பாவி னீற்றடிப்பி
னிற்றல் சிறுபான்மை நேர்ந்தமையான்—மற்ற
வடிமருங்கி னையிரண்டோ டோரெழுத்து மாத
றடிமருங்கின் மெல்லியலாய் சொல்லு".

இதனீற்றடி பதினோரெழுத்து.

"பாலன் றனதுருவா யேழுலகுண் டாலிலையின்
மேலன்று *நீகிடந்தாய் மெய்யென்ப—ராலன்று
வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு" (இயற்பா-முதற்றிருவந்தாதி-69.)

* 'நீ வளர்ந்த' என்பதும் பாடம்,

"* எளிதினிரண்டடியுங் காண்பதற்கெ னுள்ளம்
தெளியத் தெளிந்தொழியுஞ் செவ்வே—களியிற்
பொருந்தா தவனைப் பொரலுற் றரியா
யிருந்தான் றிருநாம மெண்ணு" (இயற்பா-முதற்றிருவந்தாதி-51.)

இப்பொய்கையார் வாக்கினுண் முற்றியலுகர மீறுய்வந்தன. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

"முல்லை குறிஞ்சி மருத முழுநெய்தல்
எல்லையில் பாக்கட் கியற்றிணையா—முல்லை
குறிஞ்சி யெனவிரண்டு குன்ற மருட்கென்
றறைந்தார் வியன்புலவோ ராய்ந்து"

"முல்லை யந்தணன் குறிஞ்சி யரசன்
மல்லன் மருதம் வாணிக னென்ப
நெய்தல் சூத்திர னினையுங் காலைப்
பல்குல மேனைப் பாலை தானே"

"பண்ணுந் திறனும்போற் பாவு மினமுமாம்
வண்ண விகற்ப வகைமையாற்—பண்மேற்
றிறம்விளரிக் கில்லதுபோற் செப்ப லகவ
லிசைமருட்கு மில்லை யினம்"

"பாடப் படுவோர்க்கும் பாடு மவன்றனக்கு
நாடப் படுநயக்க ணடாதே—பாடுமேற்
காகப்புட் சேரக் கனிபனையின் வீழ்வதுபோ
லாகிக்காற் சேரு மலர்"

"நாற்பா நடைதெரிந்த நன்னூற் பெரும்புலவர்
நூற்பா னயந்த நுழைபொருளைப்—பாச்சார்த்திப்
பாவித்துப் பார்மே னடாத்தப் படருமே
நாவித் தகத்து †நகம்"

"புலந்துறை போகிய புலவர் நாவினுட்
கலந்துறை கலைமகள் கவிதை கந்தமா

---

* "எளிதி னிருவகையுங் காண்பதற்கு நெஞ்சே
தெளியிற் றெளிந்துரைப்பன் செவ்வே—யளியிற்
பொருந்தா விரணியனைக் கொல்லுற் றரியா
யிருந்தான் றிருநாம மெண்ணு" என்பதும் பாடம்.

† 'நகும்' என்பதும் பாடம்.

நிலந்தொழப் புறப்படு நிலைய ளாகுமிவ்
விலங்கிழை பெருமையை யெண்ண வேண்டுமோ"

எனவும்,

"உள்ளப் பரவையி னூல்வரை நாட்டியொண் கேள்வியம்பா
வெள்ளப் படாமை யியையக் கடையி னிசைபெருக்கும்
வள்ளற் குணநாவர் வானோர் களைவள மைப்படுக்கும்
வெள்ளைக் கவிதை யமிழ்தமெல் லார்க்கும் வெளிப்படுமே"

"அகமுத லாய பொருள்கவிக் காவி யணிதழைப்பச்
சகமுத லோர்சொற்ற பாவினஞ் சட்டகக் கட்டுரையே
நிகழ்தரு மோசை யியனடை யானெடு நீர்வரைப்பிற்
புகழ்தரு வாய்மைப் பயன்வியன் சீர்த்திப்புத் தேளுலகே."

எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க. அறம்பொரு ளின்பம் வீடு பெறுமாறு சொன்ன நூல்களுள்ளும், அவை சார்பாக வந்த சோதிடமுஞ், சோகினமும், விக்கின கிரந்த மந்திரவாதமும், மருத்துவநூலுஞ், சாமுத்திரியமும், நிலைத்துநூலும், ஆயுதநூலும், பத்துவிச்சையும், ஆடைநூலும், அணிகலநூலும், அருங்கலநூலும் முதலாயவற்றுள்ள மறைப்பொரு ளுபதேசமும், வல்லாராயுங் கவிப் பெருமையுஞ், சாவவுங்கெடவும் பாடுமாறும், பாடப்படுவோர்க்கு வருநன்மையுந் தீமையு மறியுமாறும் வல்லோர்வாய்க்கேட் டுணர்ந்து கொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

இனிப் பாவினங்களுட் சமக்கிரதமும், வேற்றுப்பாடையும் விரவிவந்தால், அவற்றையு மலகிட்டுப் பாச்சார்த்தி வழங்கப்படும். அவை குறு வேட்டுவச் செய்யுளும், லோகவிலாசனியும், பெருவள நல்லூர்ப்பாசாண்டமும் முதலாகவுடையன எனக்கொள்க.

"செந்தமிழ்ச் செய்யுட் டெரிந்துணர்ந்து செந்தமிழ்க்கண்
வந்த வடமொழியு மாற்றுதே—சந்தம்
வழுவாமற் கொண்டியற்று மாண்பினோர்க் குண்டோ,
தழுவாமை யிற்குந் தமிழ்"

பாக்கட்கோசை பிறக்குமா றுரைத்துக்கொள்க. அவை சொல்லுமாறு:

"வெண்சீரிற் செப்பல் பிறக்கும் விகற்பத்துப்
பண்பாய்ந்த துள்ளல் படும்."

"இயற்சீருட் டோன்று மகவ லவற்றின்
விகற்பத்தால் வெள்ளோசை யாம்"

"தன்சீருட் டூங்கல் கலியடியுங் கண்டக்கால்
வஞ்சிக் கிசையாய் வரும்"

"மயங்கி வருவனவும் வல்லோர் வகுப்ப
மயங்காமற் கொண்டுணரற் பாற்று"

என இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

"தலைவன் றலைமுதலாத் தார்வேந்தன் காறும்
மலைமுதலா மாநாய்கன் மாதே—நிலமுழுது
மன்னர்கோ ளொரு மறைமுதலா வஞ்சிக்கோன்
தன்முதலோர்த் தந்தானுந் தான்"

"ஈரிரண்டு மேலெழுத்து மீரைந்து மூவைந்தும்
பாரியன்ற நாற்சீர் பதினெட்டு—மோர்பாய்
விளையும் பதினேழ் நிலத்துக் குறள்சிந்
தளவு நெடில்கழியோ டைந்து"

"ஐந்து மகவற்கு வெள்ளைக் களவடியுஞ்
சிந்து நெடிலடிக்கட் டொல்லிரண்டும்—வந்த
தளவிரண்டு மான்ற நெடிலடியுந் தன்பாற்
றளைசிதைவி ரண்டாக் கலிக்கு"

"ஈரிரண்டோ டரா றெழுவா யிறுவாயாச்
சேரு மெழுத்திருசீர் வஞ்சிக்கா—மோரு
நெடிலடிக்கு நேர்ந்தனவு மூவொருசீர் வஞ்சிக்
கடிவகுத்தா ரெட்டாதி யாய்ந்து"

"ஐந்தாதி யையிரண்டீ டரு மறுநிலமும்
வந்தவடி வெள்ளைக் களவு"

"பண்பாய்ந்த .........பயின்று"*

இவற்றின்கருத்து: நாலெழுத்து முதலாகிய மூன்றுங் குறளடி. ஏழெழுத்து முதலாகிய மூன்றும் சிந்தடி, பத்தெழுத்து முதலாகிய வைந்தும் அளவடி, பதினைந்தெழுத்து முதலாகிய மூன்றும் நெடிலடி பதினெட்டெழுத்து முதலாகிய மூன்றும் கழிநெடிலடி. அவற்றுள்

---

* இவ்வெண்பா முழுவதையும் 459-ஆம் பக்கத்திற் காண்க.

ஐந்தடியானு மாசிரியம் வரப்பெறும். சிந்தடியாலும் அளவடியாலும் நெடிலடியின் முதலிரண்டடியாலும் வெண்பா வரப்பெறும். வெண்பாவினீற்றடி ஐந்தெழுத்து முதலாகப் பத்தெழுத்தின்காறு முயர்ந்த வாறு நிலத்தானும் வரப்பெறும். பதின்மூன்றெழுத்து முதலாக விருபதெழுத்தின்காறு முயர்ந்த வெட்டு நிலத்தானு மிலக்கணக் கலிப்பா வரப்பெறும். இலக்கணக் கலிப்பா வல்லாதன மிக்குங் குறைந்தும் வரப்பெறும். இருசீரடி வஞ்சிப்பா நான்கெழுத்து முதலாகப் பன்னீரெழுத்தின்காறு முயர்ந்த வொன்பது நிலத்தானும் வரப்பெறும். முச்சீரடி வஞ்சிக்கெழுத்து எண்ணி வகுத்திலரேனும் ஏழெழுத்து முதலாகப் பதினேழெழுத்தின் காறு முயர்ந்த பத்தடியாலும் வரப்பெறும். முச்சீரடியெல்லா மொரு நிலமாகக்கொண்டு, இருசீரடி வஞ்சி நிலமொன்பதோடுங் கூட்டி வஞ்சி நிலம் பத்தென்ப. அல்லாது இருபதெழுத்தின் மிக்குவரும் நாற்சீரடிப்பாவில்லை. நாற்சீரடிப்பாவினங்களினடி இருபதெழுத்தின் மிக்கு இருபத்து நான்கெழுத்தின்காறும் வரப்பெறு மென்பது. வெண்பா வாசிரியங்களுள்ளும் இலக்கணக் கலிப்பாவினுள்ளும் வருஞ்சீர் ஐந்தெழுத்தின் மிகப்பெறா. வஞ்சியுள் வருஞ்சீர் ஆறெழுத்தாகவும் பெறும். சிறுமை மூன்றெழுத்தாவது சிறப்புடைத்து; இரண்டெழுத்தி னருகி வரப்பெறுமாயினும் எனக்கொள்க.

> "அளவியற்பா வான்றசீ ரைந்தெழுத்திற் பல்கா
> வளவஞ்சிக் காறுமா மாதோ—வளவஞ்சிச்
> சின்மை யொருமூன்று மென்பர் சிறப்புடைத்
> தன்மை தெரிந்துணர்வோர் தாம்"

என்பவாகலின்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு: "போந்து சென்று சார்ந்து சார்ந்து" என்னும் ஆசிரியப்பா நான்கெழுத்து முதலாக விருபதெழுத்தின்காறு முயர்ந்த பதினேழு நிலமும்பெற்றுக் குறளடி முதலாகிய ஐந்தடியாலும் வந்தது. இனி அவ்வெழுத்துக்களால் வெண்பா வருமாறு.

> "மட்டுத்தா னுண்டு மதஞ்சேர்ந்து விட்டுக்
> களியானை கொண்டுவா வென்றான் களியானைக்
> கியாரோ வெதிர்நிற் பவர்"

இஃது ஏழெழுத்தடி வெண்பா.

“ஆர்த்தார்த்துக் கண்சேர்ந்து வேர்த்து விரைந்துதன்
பொன்னோடை யானையின் மேற்கொண்டா னென்னுங்கோன்
மன்ன ருறையு * மதில்”

இஃது எட்டெழுத்தடி வெண்பா.

“சென்று முகந்து நுதலாட்டி மாறேற்று
வென்று பெயர்ந்தானெங் கோ”

இஃது ஒன்பதெழுத்தடி வெண்பா. இவை மூன்றுஞ் சிந்தடி.

“நின்று திரியுஞ் சுடருளை யில்லாது
வென்று திரிதருவேன் யானுளனாச்—சென்றோங்கி
மண்ணக மார்பின் மறையலோ மற்றினியென்
கண்ணகத்துப் பட்ட படி”

இது பத்தெழுத்தடி வெண்பா.

“இற்றே னுடம்பி னெழினல மென்றென்று
பற்றுவிட் டேங்கு முயிர்போல—மற்று
நறுமென் கதுப்பினா டோடோயி னண்ணா
† மறுநோக் குடையவாங் கண்”

இது பதினோரெழுத்தடி வெண்பா.

“புறத்தன நீருள பூவுள மாவின்
றிறத்தன கொற்சேரி யவ்வே—யறத்தின்
மகனை முறைசெய்தான் மாவஞ்சி யாட்டி
முகனை முறைசெய்த கண்”

இது பன்னிரண்டெழுத்தடி வெண்பா.

“இரியன் மகளி ரிலைஞெமலி யீன்ற
வரிவிரவுஞ் செங்காற் குழவி—யருகிருந்து
ஊமன்பா ராட்ட வுறங்குமே செம்பியன்றன்
நாமம்பா ராட்டாதார் நாடு”

இது பதின்மூன்றெழுத்தடி வெண்பா.

“மணிமிடைந்த பைம்பூண் மலரணிதார் மார்பன்
அணிமகர வெல்கொடியா னன்னான்—றனிநின்று

* ‘எயில்’ என்பதும் பாடம்.

† ‘பிறநோக்கு’ என்பதும் பாடம்.

* தன்னை வணங்காமற் றுன்வணங்க வல்லானே
யென்னை வணங்குரியி ஞன்"

இது பதினுன்கெழுத்தடி வெண்பா. இவை ஐந்தும் அளவடி.

"முகமறிந்தார் மூதுணர்ந்தார் முள்ளெயிற்றார் காமம்
அகமறையா தாம்வாழு மென்றே—மகமறையா
மன்னனீ வார்குழை † வையெயிற்று யென்றேமற்
றென்னையும் வாழு மெனின்"

இது பதினேழெழுத்தடி வெண்பா.

"படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பய னெய்த லரிது" (குறள்-61-6.)

இது பதினெழுத்தடி வெண்பா. இவையிரண்டும் நெடிலடி.

இனி வெண்பாவினீற்றடிக் கிலக்கியம் வருமாறு:

"பிண்டி மலர்மேற் பிறங்கெரியுட் கந்துபோல்
வண்டு சுழன்று வரும்"

இஃது ஐந்தெழுத்தீற்றடி வெண்பா.

"நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றா து புத்தே ளுலகு" (குறள்-24-4.)

இஃதாறெழுத்தீற்றடி வெண்பா.

"உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்" (குறள்-24-2.)

இஃதேழெழுத்தீற்றடி வெண்பா.

"புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்" (குறள்-24-7.)

இஃதெட்டெழுத்தீற்றடி வெண்பா.

"இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள" (குறள்-23-3.)

---

* "தன்னை வணங்காமற் றுனணங்க வல்லாளே—யென்னை யணங்குறியி ஞள்" என்பதும் பாடம்.

† 'வையெயிற்று மென்னுமற்—றென்னையாம் வாரு மெனல்' என்பதும் பாடம்.

இஃதொன்பதெழுத்தீற்றடி வெண்பா.

"குணம்புரியா மாந்தரையுங் கூடுமா லென்னே
மணங்கமழுந் தாமரைமேன் மாது"

இது பத்தெழுத்தீற்றடி வெண்பா. ஒழிந்தனவும் வந்தவழிக் கண்டுகொள்க. இனி யொருசாராசிரியர் ஈற்றடி யொழிந்த வேனை யடி யெழுத்தொத்து வருவனவற்றைக் கட்டளை வெண்பா வென்றும், ஒவ்வாது வருவனவற்றைக் கலம்பக வெண்பா வென்றும், ஈற்றடி யெழுத்தும் ஏனையடி யெழுத்தும் ஒத்து வருவனவற்றைச் சமநடைவெண்பா வென்றும், ஈற்றடி யெழுத்தினோடு ஏனையடி யெழுத்துச் சில ஒத்தும் ஒவ்வாதும் வருவனவற்றைச் சமவியல் வெண்பாவென்றும், ஈற்றடி யெழுத்து மிக்கு ஏனையடி யெழுத்துக் குறைந்து தம்முளொத்து வருவனவற்றை மயூர வியல்வெண்பாவென் றும் வழங்குவர். அவற்றுட் சில வருமாறு:

"நடைக்குதிரை யேறி நறுந்தார் வழுதி
யடைப்பையாய் கோறு வெனலும்—*இடைப்பையான்
எள்ளற் சிறுகோல் கொடுத்தான் றலைபெறினும்
† கொள்ளாதி யாங்காண் டலை"

எனவும்,

"வெறிகமழ் தண்சிலம்பின் வீங்கி யுகளும்
மறிமுலை யுண்ணாமை வேண்டிற்—பறிமுன்கை
‡ அஉ மறியா வறிவி லிடைமகனே
நொவலைய னின்னாட்டை நீ"

எனவும்,

"மாவடு வென்னு மலர்புரை கண்ணினாய்
பாவெடுத்துப் பாடும் பயனோக்கி—மேவி
யெடுத்த வினத்தினா லின்பஞ்சொற் சேரத்
தொடுத்து மொழிவ தமிழ்த்து"

---

* 'அடைப்பையான்' என்பதும் பாடம்.
† 'சொல்லாதி யாங்காண் டலை' என்பதும் பாடம்.
‡ 'அஉவறியா' என்பதும் பாடம்.

"கரவொடு நின்றார் கடிமனையிற் கையேற்
றிரவொடு நிற்பித்த தெம்மை—யரவொடு
மோட்டாமை பூண்ட முதல்வனை முன்வணங்க
மாட்டாமை பூண்ட மனம்" 

தனிப் · மே ?

"நற்கொற்ற வாயில்..............."

"இன்னமிழ்த மூட்டி யெழில்வளைசேர் முன்கைக்கொண்
டென்னையர்பேர் சொல்லென் றிரந்தாலுந்—தென்னையம்பைச்
செஞ்சுடர்வாள் வெஞ்சினவேற் சீர்ச்சேந்த னென்னுமாற்
கிஞ்சுகவா யஞ்சொற் கிளி"

எனவும் இவை ஈற்றடியல்லா ஏனையடி யெல்லாம் எழுத்து ஒத்து வந்தமையாற் கட்டளை வெண்பா.

"மந்தரமு மாகடலு மண்ணுலகும் விண்ணுலகும்
அந்தரமு மெல்லா மளப்பரிதே—யிந்திரர்கள்
பொன்சகள வாசனமாப் போர்த்து மணிகுயின்ற
வின்சகள வாசனத்தா னீடு"



எனவும்,

"தானொரு மெம்முன்னி வாராது தானண்ணி
வானோரை வாட வுரப்புங்கொல்—வானோர்
முடிக்கோடி தேய்த்தான் மூவமிழ்தந் தந்தான்
அடிக்கோடி மீளா தவன்"

இவை எல்லா வடியு மெழுத்தொவ்வாது வந்தமையாற் கலம்பக வெண்பா.

"சென்று புரிந்து திரிந்து செருவென்றான்
மின்றிகழும் வெண்குடைக்கீழ் வேந்து"

இஃது ஈற்றடியும் ஏனையடியும் எழுத்தொத்துவந்தமையாற் சம நடை வெண்பா. சமவியல் வெண்பா வந்தவழிக் கண்டுகொள்க.

"குருந்து குளிர்ந்து மயங்கு குவட்டின்
மருந்து கொணர்ந்து மகிழ்ந்து நமது
பெரும்பிணியை நீக்குவதாம் பீடு"

இஃது ஈற்றடி மிக்கு ஏனையடி குறைந்து தம்முள் ஒவ்வாது வந்தமையான் மயூரவியல் வெண்பா.

இனிப் பதின்மூன்றெழுத்தடி முதலாகிய விலக்கணக் கலி வெட்டும் வருமாறு.

"அன்றுதான் குடையாக வன்றுந்து நீர்சோரக்
குன்றெடுத்து மழைகாத்த கோலப்பூண் மார்பினாய்"

இது பதின்மூன்றெழுத்தடிக் கலிப்பா.

"மாசற்ற மதிபோல வனப்புற்ற முகங்கண்டு
தூசுற்ற துகின்மருங்கிற் றுடிநடு வெனத்தோன்றி"

இது பதினான்கெழுத்தடிக் கலிப்பா. இவை யிரண்டும் அளவடி.

"ஊனுடை வுழுவையி னுதிரந்தோ யுகிர்போல
வேனிலை யெதிர்கொண்டு முருக்கெல்லா மரும்பினவே"

இது பதினைந்தெழுத்தடிக் கலிப்பா.

* "வரியாநோய் மருந்தாகி வருந்தாநா ளிதுவன்றே"

இது பதினாறெழுத்தடிக் கலிப்பா.

"மாவலிசேர் வரைமார்பி னிகல்வெய்யோன் மணமகிழ"

இது பதினேழெழுத்தடிக் கலிப்பா. இவை மூன்றும் நெடிலடி.

"*அறனின் றமிழ்கை யொழியாள் வலங்கொண்டது வினையான்."

இது பதினெட்டெழுத்தடிக் கலிப்பா.

"உருபனிகண் ணுறைப்பவுநீ யொழிவொலாய் செலவலித்தல்"

இது பத்தொன்பதெழுத்தடிக் கலிப்பா.

"விலங்கிளையா நெடிதுயிரா விறைதளரா விரைவளையாள்
கலங்கிருந்தார்க் கதுப்புள்ளார் கயல்கடிந்த கருந்தடங்கண்"

இஃது இருபதெழுத்தடிக் கலிப்பா. இவை மூன்றுங் கழிநெடிலடி. இவையெல்லாங் குற்றிகர குற்றுகரங்களும் ஒற்றும் ஆய்தமு நீக்கி எழுத்தெண்ணி முதலடியே கொள்க.

---

* இக்குறியிட்ட அடிகள் கூறிய எழுத்திற் குறைவுபட்டுள்ளன. பிரதிக ளனைத்திலும் இவ்வாறே காணப்படுகின்றன.

இனி, நாலெழுத்துமுதலாகப் பன்னிரண்டெழுத்தின்காறு முயர்ந்த ஒன்பது நிலமும்பெற்ற இருசீரடிவஞ்சிப்பா வருமாறு:

"கல்சேர்ந்து கால்தோன்று
மல்குநீர் புனல்பரப்பும்"

இது நாலெழுத்தடி வஞ்சிப்பா.

"தண்பால் வெங்கள்ளின்"

இஃது ஐந்தெழுத் திருசீரடி வஞ்சிப்பா.

"கண்டுதண்டாக் கட்கின்பத்
துண்டுதண்டா மிகுவளத்தான்"

இஃது ஆறெழுத் திருசீரடி வஞ்சிப்பா. இவை மூன்றுங் குறளடி.

"* தாழ்வாகத் தம்பேணுக்
கடுஞ்சினத்த களிற்றெருத்தின்"

இஃது ஏழெழுத் திருசீரடி வஞ்சிப்பா.

"தாழிரும் பிணர்த்தடக்கைத்
தண்கவு ளிழிகடாத்து"

இஃது எட்டெழுத் திருசீரடி வஞ்சிப்பா.

"விலனொளியத் தொகுபிண்டி"

இஃது ஒன்பதெழுத் திருசீரடி வஞ்சிப்பா. இவை மூன்றுஞ் சிந்தடி.

"அகன்ஞால விலைதுளங்கினும்
பகன்ஞாயிற் றிருள்பரப்பினும்"

இது பத்தெழுத் திருசீரடி வஞ்சிப்பா.

"தாள், களங்கொளக் கழல்பறைந்தன"

இது பதினோரெழுத் திருசீரடி வஞ்சிப்பா.

"குருகிரிதலின் கிளிகடியினர்"

* இவ்வடி கூறிய எழுத்திற் குறைவுபட்டுள்ளது.

இது பன்னிரண்டெழுத் திருசீரடி வஞ்சிப்பா. இவை மூன்றும் அளவடி.

இனி எட்டெழுத்து முதலாகப் பதினேழெழுத்தின்காறு முயர்ந்த முச்சீரடிவஞ்சிப்பா வருமாறு:

"வேங்கை வாயில் வியன்குன்றூர்"

எனவும்

"அள்ளற் பள்ளத் தகன்சோணாட்டு"

எனவும் இவை யெட்டெழுத்து முச்சீரடி வஞ்சிப்பா.

"மதுவிரவிய மலர்களுலிய வயற்றாமரை"

இது பதினேழெழுத்து முச்சீரடி வஞ்சிப்பா.

"கொடிவாலன குருநிறத்தன குறுந்தாளன"

இதனுட் பதினாறும், பதினைந்தும், பதினான்கும், பதின்மூன்று மெழுத்துவந்தன. ஒன்பதும், பத்தும், பதினொன்றும், பன்னிரண்டும் ஆகிய எழுத்தான்வந்த முச்சீரடி வஞ்சிப்பா வந்தவழிக் கண்டு கொள்க.

எல்லாவடிகளும் எழுத்தொத்து வரும் கலிகளைக் கட்டளைக் கலியென்றும், ஒவ்வாது வருவனவற்றைக் கலம்பகக் கலியென்றும் வழங்குவர். இவ்வாறே கட்டளையாசிரியம் கலம்பகவாசிரியமென்றும, கட்டளைவஞ்சி கலம்பகவஞ்சியென்றும் வழங்கப் படும்.

"கட்டளை கலம்பகஞ் சமநடை சமவிய
மட்டவிழ் குழலினாய் மயூர சமவிய
மொட்டினு ரெழுத்தினு லொட்டி யொண்டமிழ்க்
கிட்டமா யவர்கள்வெண் பாவின் பேர்களே"

இதனை விரித்துரைத்துக்கொள்க.

இனி இருபதெழுத்தின் மிக்க நாற்சீரடிப் பாவினம் வருமாறு:

"கொடிகொடியொடு மிடைவனவுள குடைகுடையொடு குடைமிசையுள
கடிநறுமலர் சொரிவனவுள கடிமதிலுள கவரியுமுள
வடிவழிபடு மமரருமுள ரருளாழியொ டரியணையுள
விடிமுரசமு மதிர்வனவுள வினிதிவ ரதுதுறவே"

என வரும். இனிச் சந்தங்கட்குந் தாண்டகங்கட்கும் பிரத்தார முதலாகிய ஆறு பிரத்தியமுஞ் சொல்லப்படும்; என்னை?

"சந்தமும் தாண்டகமுந் தம்மு ளெழுத்திலகு
வந்த முறைமை வழுவாவேன்—முந்தி
யளவியலா மென்றுரைப்ப ரவ்வாறன் றாகி
லளவழி யாமென்ப ரால்"

இதனை விரித்துரைத்துக்கொள்க.

அளவியற் சந்தத்திற்கும், அளவியற் றண்டகத்திற்கும் பிரத்தாரமு நட்டமு முத்திட்டமும் ஒன்றிரண்டு மூனறென்னு முறைமையால் ஏறச்சொன்ன இலகு செய்கையும் எண்ணும் அலகிட்டு நில அளவையும் என்னும் இவ் வாறு பிரத்தியமுஞ் சொல்லப்படும். பிரத்தரிக்கும்படி:

"குருக்கீ ழிலகுவா மேனைய வொப்பாங்
குருத்தொகையா மாதிக்கட் கூறு"

இது பிரத்தரிப்பதற் கிலக்கணம். பிரத்தாரமெனினும் உறழ்ச்சியெனினும் ஒக்கும். |நட்டமென்பது அவ்வாறு பிரத்தரிக்கப் பட்டனவற்றுள் இனைத்தாவதென்று அறிவதன் அலகுநிலை யறியே னென்றாற், சொல்லப்பட்ட பிரத்தாரவெண்ணினை யரைசெய்து ஓர் இலகுவைத்துப் பாகஞ்செய்யப் போதாதவழி, ஆண்டோ ருருவிட்டுப் பாகஞ்செய்து ஆண்டொரு குருவிடுக. இவ்வாறே பிரத்தார வடியெழுத்துள்ளளவும் வைக்க. அதற்கிலக்கணம:

"இனைத்தாவ தென்றலகு நீடறியே னென்றா
லனைத்தரைசெய் தாண்டிலகு வைக்க—வினைத்ததனை
விள்ளத்தா னாகாதேல் வேறோ ருருவிட்டுக்
கொள்ளத்தா னாகுங் குரு"

இது \நட்டத்திற் கிலக்கணம்.|நட்டம் எனினும், கேடு எனினும் ஒக்கும்.

இனிப் பிரத்தரித்ததன் அலகிருக்கையறிவேன், எனைத் தாவதென்று அதன் எண்ணறியேன் என்றால் அதன் பிரத்தாரத்தின் மேல் ஒன் றிரண்டு நான் கெட்டுப் பதினாறென் றிவ்வாறே ஒன்று முதலாக விரட்டித்தது முடிவளவும் ஏறவிட்டு இலகுவின் மேனின்ற

இலக்கங்களைக்கூட்டி அதனோடொரு குருவிட்டு, அதனளவினால் இனைத்தாம் விருத்தமென்று சொல்லுக. இதற்கிலக்கணம்:

"ஒன்றிரண்டு நான்கெட்டென் றுள்ளளவு மோர்த்திரட்டித்
தென்று மிலகுவின்மே லெண்களோ—டொன்றிட்டு
வைத்த முறைமை வழுவாமை கட்டுரைப்ப
துத்திட்டஞ் சுட்டெனினு மொன்று"

இனி, ஓரிலகு முதலாவுடைய விருத்தம் இன்னதனையென்று விகற்பித்துச் சொல்லுமாறு: விருத்தவடியுள் எழுத்தெனைத்துள அவ்வனைத்தும் ஒன்று முதலொன் றுத்தரமனுலோமமாக மேலேற விட்டுப் பின்னை முதலிருந்த வொன்றினைச் சிதையாதே யதனை யிரண்டாவதனிற்கூட்டி இரண்டாவதனை மூன்றாவதனிற்கூட்டி மூன்றாவதனை நான்காவதனிற்கூட்டி இவ்வாறே இறுதியொழித்து இறுதியல்லனவுங்கூட்டி மீட்டுமத னயலளவுங்கூட்டி யிவ்வாறே கீழ்முதல்வைத்த *ஒன்றின் முதலளவு அயலளவுங்கூட்டி முறையானே மேலேநின்றுங் கீழிழிய † ஒன்று முதலொன்றுத்தர மாக இலக்கமிட்டு மேலைக்குப்பையினின்றுங் கீழையொன்றின் காறு நிறுத்தி, மேலைக்குப்பையில் விருத்த மோரிலகு உடையனவாக வும், இரண்டாங்குப்பையில் விருத்த மிரண்டிலகு உடையனவாக வும், மூன்றாங்குப்பையில் விருத்த மூன்றிலகு உடையனவாகவும், நான்காங் குப்பையில் விருத்தம் நான்கிலகு வுடையனவாகவும் இவ் வாறே கடைக்கணின்ற முற்றிலகு விருத்தத்தளவும் ஒன்றுத்தர மாக வெண்ணிக்கொள்க. எல்லாக்குப்பை இலகுவிருத்தங்களையும் உடன்கூட்டிப் பின்னையொரு முழுக்குரு விருத்தம் உடன்கூட்டிச் சொல்ல அச்சாதியிற்பிறந்த விருத்தங்க ளெல்லாவற்றிற்குந் தொ கையாம். அதற்கிலக்கணம்:

"ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறே ழெட்டொன்ப
தென்றுயர் விச்சை யளவொரீஇ—யொன்றிலொன்
றிட்டிட் டறுதி யொழித்தொழிய வேகாதி
யொட்டி யிலகுக்கொண் டொட்டு"

இனி, இவ்விருத்தத்தில் விரிந்த விருத்தச்சாதியில் இன்னதனை விருத்தம், இன்னதனை எழுத்து, இன்னதனைக் குரு, இன்னதனை

* 'எண்முதலளவு' என்பதும் பாடம்.

† 'ஒன்றுமுதலொன்று பிரதிலோபமாக' என்பதும் பாடம்.

இலகு, இன்னதனை மாத்திரை என்று வரையறுத்துக் கூறுமாறு: ஒரு விருத்தத்தினைப் பிரத்தாரமுறைமையால்உறழ்ந்துபெற்ற விருத்தங்களைத்திரட்டி ஐந்துபடிவைத்து, முதற்படியொழித்து ஒழிந்த நான்குபடியினையும் விருத்தத்தோரடியுள் எழுத்தெண்ணிக்கொண்டு, அவ்வெழுத்துக்களான்மாற மூன்றாம்படியினையும்நான்காம் படியினையும் அரைசெய்து முடிவிற்படியி லதன்பாத மோர்பத்திரமாகக் கூட்டினன், முதற்படி விருத்தங்களது அளவையாம்; இரண்டாம் படி எழுத்துக்களதளவையாம்; மூன்றாம்படியும் நான்காம்படியும் குருவிலகுக்கள தளவையாம்; ஐந்தாம்படி மாத்திரைகளதளவையாம். அதற்கிலக்கணம்:

"விருத்த விருத்தியினை வேறைந்தா நாட்டி
விருத்த வடியெழுத்தான் மாறி—யருத்திக்க
மூன்றோடு நான்சாய குப்பை யொருக்கதன்
பாதியுடன் வைக்கமே லே"

"விருத்த *விதிதயனை வீவி லெழுத்துக்
குருக்களோ டேனைக் குறைவி லிலகு
உருக்கத்தின் மாத்திரை யென்றிவை யைந்தும்
† விசற்பித்து வேண்டப் படும்"

இனிப் பிரத்தரித்த விருத்தங்களது விரலளவை கூறுமாறு:

‡விரித்தவப் பிரத்தார விருத்தங்களை யிரட்டித்து ஒன்றுகளைய விரலளவையாம்.

"பிரத்தார வெண்ணிரட்டித் தொன்று களைய
விரற்களவை யாகி விடும்"

என்றாராகலின். அவ்விரற் பன்னிரண்டுகொண்டது சாணும். சாண் இரண்டுகொண்டது முழமாம். முழம் நான்குகொண்டது கோலாம். கோல் ஐஞ்ஞாறுகொண்டது கூப்பீடாம். ‡கூப்பீடு நான்குகொண்டது காதமாம். இவ்வாறு வகுத்துப் பிழையாமற் கூறுக. அதற்கிலக்கணம்:

* 'விருத்தியதன்' என்பதும் பாடம்.

† 'விரித்து, விகற்பித்து வேண்டப் படும்' என்பதும் பாடம்.

‡ 'விருத்தப் பிரத்தார விருத்தங்களை' என்பதும் பாடம்,

" பெருக்கிய வாறு பிரத்தாரித் தாங்கட்
டொருக்கிய நாவலர் சந்தந் தரணி
யிரட்டித் தந்தத் தொன்று களைய
விரற்கள வாமென்று வேண்டுவர் தாமே"

" நாலிருசாண் கொண்டது நற்கோலா மைந்நூறு
கோலியைந்த நீளங் குரோசமே—நாலு
குரோசமோர் காவதமாங் குன்றுத சாணு
விரோதந்தீர் முந்நால் விரல்"

" முந்நால் விரற்சா ணிரண்டுகை நான்குகோ
லைஞ்ஞூறு கூப்பீ டளவு"

" பரமாணுத்தேர்த் துகள் பஞ்சியின் றுய் யெஞ்சா
மயிர்மண லேயவி யெண்ணெல்—விரலளவு
மெட்டெட்டா வேறு மெழில்விர லாதியா
வொட்டினவு நூன்முறையா யொட்டு"

" படையொடுதீ நீர்வளியாற் பங்கப் படாத
முடிபொருண் முந்தை யணு"

இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

" உறழ்ச்சிகே டுத்திட்ட மொன்றிரண்டென் றேத்தித்
திறப்படுத்த திண்ணிலகுச் செய்கை—சிறப்பித்தாங்
கெண்ணி னிலவளவோ டேய்ந்த விருமூன்றே
திண்ணியோர் கண்ட தெளிவு"

இது சமவிருத்தங்கட் காறு பிரத்தியமுஞ் சொன்னவாறு.

இனி ஒருசாராசிரியர் உறழ்ச்சி நிலவளவுகளை விகற்பித்துச் சொல்லுமாறு: உறழ்ச்சி யிருவகைப்படும்; முற்றக் குருவேவைத் துறழ்தலும், முற்ற இலகுவேவைத் துறழ்தலும் என. அவற்றுண் முற்றக்குருவேவைத் துறழுமாறு:

" குருக்கீ ழிலகுவா மேனைய வொப்பாங்
குருத்தொகையா மாதிக்கட் கூறு"

எனக் கொள்க.

பிரத்தாரஞ்செய்தற் கிலக்கணம்;

*" ஈறு வருக்கித் திழித்திரட்டித் தன்றவற்றான்
மாறியுய்த் திங்ஙனே வைத்து"

*" ஆர்த்த படியி னெதிர்ச்சுன் வருமாயிற்
பேர்த்திருகால் வைக்கப் பெரிது"

எனக் கொள்க.

" இரண்டொன் கெட்டுப் பதினாறு முப்பத்
திரண்டொடாறு பத்துநான் கென்றாங்—கிரட்டித்தே
யுற்கிருதி காறு முலையா முறைமையா
னற்குரைப்பா னவலனு வான் "

" ஒன்றாதி யென்றார் வடபுலவோர் சந்தங்கட்
† கென்றிரு மூன்றெழுத்தாதி—தென்றமிழாற்
சீரிரண்டா மென்றுரைத்தா ரெல்லாரு மேன்மூன்றே
டோரிரண்டா மென்றா ருயர்வு "

" ஈரைஞ்ஞூற் றெண்மூன்று மென்பர் பிரத்தரித்தால்
ஈரைந்தாஞ் சந்தத்திற் கெண் "

பத்தாஞ் சந்தத்திற்குத் தொகை ஆயிரத்து இருபத்து நான்கு என்றவாறு.

" மதிலிரண்டு மாவாறு வாய்ந்த வசுக்கள்
பதினைந்தாஞ் சந்தப் பரப்பு "

பதினைந்தாஞ் சந்தத்திற்குத் தொகை முப்பத்திரண்டாயிரத்து எழுநூற் றறுபத்தெட்டு.

" உருவுபா ழெண்பாவை யோரெட்டைந் தேழா
திருபதாஞ் சந்தத்தி னெண் "

இருபதாஞ் சந்தத்திற்குத்தொகை பத்துலட்சத்து நாற்பத் தெண்ணாயிரத்து ஐஞ்ஞூற் றெழுபத்தாறு.

" ஆறே முருவுபா ழெட்டோடு மங்கலமா
மாறொருடொன் குற்கிருதிக் காம் "

---

* இவற்றின் சரியான பாடம் கிடைக்கவில்லை. ஏட்டிலுள்ளபடியே பதிப்பிக்கப்பட்டது. சில ஏடுகளில் இவ்விரு குறள் வெண்பாக்களையும் ஒன்றாய்ச் சேர்த்து எழுதியிருக்கிறது.

† இவ்வடி பிழைபட்டுள்ளது. இதன் சரியான பாடம் கிடைக்கவில்லை, பிரதிகளில் உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டது.

இருபத்தாறுஞ் சந்தத்திற்குத் தொகை ஆறுகோடியே யெழு பத்தொருலட்சத்து எண்ணாயிரத்தெண்ணூற் றறுபத்துநாலு.

* எனவிரட்டித் திழிய வரைசெய்து கூறுக. தேறும்பொருள்: உத்தமென்னு மோரெழுத்து முதற் சந்தத்திற்குப் பிரத்தாரவெண் டொகை 2. இரண்டாஞ் சந்தத்திற்கு 4. மூன்றுஞ்சந்தத்திற்கு 8. நாலாஞ் சந்தத்திற்கு 16. ஐந்தாஞ் சந்தத்திற்கு 32. ஆறும் சந்தத் திற்கு 64. ஏழாஞ்சந்தத்திற்கு 128. எட்டாஞ் சந்தத்திற்கு 256. ஒன்பதாஞ் சந்தத்திற்கு 512. பத்தாஞ்சந்தத்திற்கு 1,024. பதி னொராஞ் சந்தத்திற்கு 2,048. பன்னிரண்டாஞ் சந்தத்திற்கு 4,096. பதின்மூன்றுஞ் சந்தத்திற்கு 8,192. பதினான்காஞ் சந்தத்திற்கு 16,384. பதினைந்தாஞ் சந்தத்திற்கு 32,768. பதினாறுஞ் சந்தத் திற்கு 65,536. பதினேழாஞ் சந்தத்திற்கு 1,31,072. பதினெட்டாஞ் சந்தத்திற்கு 2,62,144. பத்தொன்பதாஞ் சந்தத்திற்கு 5,24,288. இருபதாஞ் சந்தத்திற்கு 10,48,576. இருபத்தோராஞ் சந்தத்திற்கு 20,97,152. இருபத்திரண்டாஞ் சந்தத்திற்கு 41,94,304. இருபத்து மூன்றுஞ் சந்தத்திற்கு 83,88,608. இருபத்து நான்காஞ் சந்தத் திற்கு 1,67,77,216. இருபத்து ஐந்தாஞ் சந்தத்திற்கு 3,35,54,432. உற்கிருதியென்னு மிருபத்தாறுஞ் சந்தத்திற்குப் பிரத்தார வடித் தொகை 6,71,08,864. இது பிரத்தார வெண்களின் தொகை. உத்த மென்னு மோரெழுத்துச் சந்தமுதலாக உற்கிருதியென்னும் இருபத் தாறெழுத்துச் சந்தத்தளவு முறையானே கண்டுகொள்க. பிரத் தரித்து நின்ற சந்தத்தினுள் இரண்டுகளைய அதன்கீழ்ப்போன சந்த மெல்லாவற்றிற்கும் தொகையாம்.

இனி விரலளவு சொல்லுமாறு:

"பிரத்தார வெண்ணிரட்டித் தொன்று களைய
விரற்களவை யாகி விடும்"

"ஆதி யிரட்டித் ததனகத் தொன்றிடினும்
வேறுபா டில்லை விரல்"

---

*இவ்வரி ஏடுகளனைத்தினும் இவ்வாறே உள்ளமையின், உள்ளவாறே பதிப்பிக்கப் பட்டது. ஆயினும்,

'ஏற விரட்டித் திழிய வரைசெய்து
கூறுக தேறும் பொருள்'

என்று, 'என' என்பதை 'ஏற' எனத்திருத்திக் குறள் வெண்பாகவாகப் பாட கொள்ளுதலே பொருத்த முடைத்தெனத் தோன்றுகிறது.

" ஒருபடி நீக்கி யொழிந்த தரைசெய்தால்
ஆதி யதற்கு விரல் "

" மூன்றேழு மூவைந்து முப்பதின்மே லோருருவு
மூன்றுடை மூவிருபா னொன்றிரண்டேழ்—தோன்ற
விரட்டித்தாங் கோருருவிட் டெண்ணுவான் காணும்
விரற்றொகையா னின்ற விரி "

முதல் விருத்தத்தின் பிரத்தார நிலவளவைவிரல் மூன்று, இரண்டாவதன் நிலவளவைவிரல் ஏழு; மூன்றாவதன் நிலவளவைவிரல் பதினைந்து; நாலாவதன் நிலவளவைவிரல் முப்பத்தொன்று; ஐந்தாவதன் நிலவளவைவிரல் அறுபத்துமூன்று; ஆறாவதன் நிலவளவை விரல் நூற்றிருபத்தேழு; ஏழாவதன் நிலவளவைவிரல் இருநூற்றைம்பத்தைந்து; எட்டாவதன் நிலவளவைவிரல் ஐந்நூற்றுப் பதினொன்று; ஒன்பதாவதன் நிலவளவைவிரல் ஆயிரத்திருபத்து மூன்று; பத்தாவதன் நிலவளவைவிரல் இரண்டாயிரத்து நாற்பத்தேழு; பதினொன்றாவதன் நிலவளவைவிரல் நாலாயிரத்துத் தொண்ணூற்றைந்து; பன்னிரண்டாவதன் நிலவளவைவிரல் எண்ணாயிரத்து நூற்றுத் தொண்ணூற்றொன்று; பதின்மூன்றாவதன் நிலவளவைவிரல் பதினாறாயிரத்து முந்நூற்று எண்பத்து மூன்று; பதினாலாவதன் நிலவளவைவிரல் முப்பத்தீராயிரத்து எழுநூற்றறுபத்தேழு; பதினைந்தாவதன் நிலவளவைவிரல் அறுபத்தையாயிரத்து ஐந்நூற்று முப்பத்தைந்து; பதினாறாவதன் நிலவளவைவிரல் லட்சத்து முப்பத்தோராயிரத்து எழுபத்தொன்று; பதினேழாவதன் நிலவளவைவிரல் இரண்டிலட்சத்து அறுபத்தீராயிரத்து நூற்று நாற்பத்துமூன்று; பதினெட்டாவதன் நிலவளவைவிரல் ஐந்துலட்சத்து இருபத்து நாலாயிரத்து இருநூற்றெண்பத்தேழு; பத்தொன்பதாவதன் நிலவளவைவிரல் பத்து லட்சத்து நாற்பத்தெண்ணாயிரத்து ஐந்நூற்றெழுபத்தைந்து; இருபதாஞ் சந்தத்தின் பிரத்தார நிலவளவைவிரல்

---

* " மூன்றேழு மூவைந்து முப்பதின்மே லொன்றதுவு
மூன்றுடைய மூவிரு பஃதுமெனத்—தோன்ற
வரற்றொகைவா னென்றாகக் காணுமே சந்த
விரற்றொகையா னின்ற விரி "

என்பது வீரசோழியம் அச்சுப்பிரதியிற் கண்டபாடம். (யாப்புப்படலம். 33-வது சூத்திர உரை.)

இருபதுலட்சத்துத் தொண்ணூற்றேழாயிரத்து நூற்று ஐம்பத் தொன்று; இருபத்தோராஞ் சந்தத்தின் பிரத்தார நிலவளவைவிரல் நாற்பத்தொருலட்சத்துத் தொண்ணூற்றுநாலாயிரத்து முந்நூற்று மூன்று. இருபத்திரண்டாஞ் சந்தத்தின் பிரத்தார நிலவளவைவிரல் எண்பத்து மூன்று லட்சத்து எண்பத்து எண்ணாயிரத்து அறுநூற் றேழு; இருபத்துமூன்றாஞ் சந்தத்தின் பிரத்தார நிலவளவைவிரல் ஒருகோடியே அறுபத்தேழு லட்சத்து எழுபத்தேழாயிரத் திருநூற் றுப் பதினைந்து; இருபத்து நாலாஞ் சந்தத்தின் பிரத்தார நிலவள வைவிரல் மூன்றுகோடியே முப்பத்தைந்து லட்சத்து ஐம்பத்து நா லாயிரத்து நானூற்று முப்பத்தொன்று; இருபத்தைந்தாவது சந்தத் தின் பிரத்தார நிலவளவைவிரல் ஆறுகோடியே யெழுபத்தொரு லட்சத்து எண்ணாயிரத்து எண்ணூற்றறுபத்து மூன்று. உற்கிருதி யென்னு மிருபத்தாறாஞ் சந்தத்தின்பிரத்தார நிலவளவைவிரல் பதின் மூன்று கோடியே நாற்பத்திரண்டிலட்சத்துப் பதினேழாயிரத்து எழுநூற் றிருபத்தேழு.

இவை உத்தமுதல் உற்கிருதி யீறாகிய சமவிருத்தங்களது பிரத் தார நிலவளவைவிரல்; முறையானே கண்டுகொள்க.

"இராயிரத்து நாற்பத்தே ழென்றுரைப்பர் பத்து
விராயதற்குச் சொன்ன விரல்"

"ஆறைந்தைந் தையே ழெனவுரைப்பர் மூவைந்து
மேவிய பூமி விரல்"

"இரண்டுபாழ் மும்மூன்றே ழேகமைந் தொன்றே
வருமிருபான் பூமி விரல்"

"ஒன்றுதி நான்கிரண்டோ டொன்றேழ் முனியிரண்டேழ்
நற்கிறுதிச் சந்த விரல்"

விரலைச் சாணும், முழமும், கோலும், கூப்பீடும், காதமும் செய்து சொல்லுமாறு:

"மும்நால் விரல்சா ணிரண்டுகை நான்குகோல்
ஐஞ்ஞூறு கூப்பீ டளவு"

இதன்வழியே யொட்டிக்கொள்க.

<u>உற்கிருதி</u> என்னும் இருபத்தாறுஞ் சந்தத்தின் நிலவளவை ஆறுநூற்றுத் தொண்ணூற்றொன்பதின் காதமும், நூற்றொருகோலும், ஒருமுழமும், ஏழுவிரலும் எனக்கொள்க.

"ஏற்புடைய காதங் குறைந்த வெழுநூறு
நூற்றொருகோல் கைவிர லேழு"

பிறவும் இவ்வாறே நிலவளவை கண்டுகொள்க.

இனி உத்தமுதலாக உற்கிருதி யீறாகக் கிடந்த இருபத்தாறு சந்தங்கட்கு முறையானே பிரத்தார நிலவளவை சொல்லுமாறு. உத்தத்தின் விரலளவை மூவிரல்; இரண்டாவதன் விரலளவை யேழு; மூன்றாவதன் விரலளவை சாணே மூவிரல். இவை மூன்று சந்தமும் தமிழ்க்குரியவல்லாதன. நான்காவதற்கு, முழமே யேழுவிரல்; ஐந்தாவதற்கு, இருமுழமே கைச்சாணே மூவிரல்; ஆறாவதற்கு, ஒரு கோலே யொருமுழமே ஏழுவிரல்; ஏழாவதற்கு, இரு கோலே யிருமுழமே கைச்சாணே மூவிரல்; எட்டாவதற்கு, ஐங் கோலே யொருமுழமே யேழுவிரல்; ஒன்பதாவதற்குப், பதின் கோலே யிருமுழமே கைச்சாணே மூவிரல்; பத்தாவதற்கு, இருபத்தொருகோலே யொருமுழமே யேழுவிரல்; பதினொன்றாவதற்கு, நாற்பத்திருகோலே யிருமுழமே கைச்சாணே மூவிரல்; பன்னிரண்டாவதற்கு, எண்பத்தைங்கோலே யொருமுழமே யேழுவிரல்; பதின்மூன்றாவதற்கு, நூற்றெழுபதின் கோலே யிருமுழமே கைச்சாணே மூவிரல்; பதினான்காவதற்கு, முந்நூற்று நாற்பத்தொருகோலே யொருமுழமே யேழுவிரல்; பதினைந்தாவதற்குக், கூப்பீடே நூற்றெண்பத் திரு கோலே யிருமுழமே கைச்சாணே மூவிரல்; பதினாறாவதற்கு, இரண்டு கூப்பீடே முந்நூற்றறுபத்தைங் கோலே யொருமுழமே யேழுவிரல்; பதினேழாவதற்கு, ஒரு காதமே ஒரு கூப்பீடே இருநூற்றுமுப்பதின் கோலே யிருமுழமே கைச்சாணே மூவிரல்; பதினெட்டாவதற்கு, இருகாதமே இரண்டு கூப்பீடே நானூற்றறுபத்தொரு கோலே ஒரு முழமே யேழுவிரல்; பத்தொன்பதாவதற்கு, ஐங்காதமே ஒரு கூப்பீடே நானூற்று இருபத்திரு கோலே யிருமுழமே கைச்சாணே மூவிரல்; இருபதாவதற்குப், பதின்காதமே மூன்று கூப்பீடே முந்நூற்று நாற்பத்தைங் கோலே யொருமுழமே யேழுவிரல்; இருபத்தொன்றாவதற்கு,

இருபத்தொருகாதமே மூன்று கூப்பீடே நூற்றுத் தொண்ணூறு கோலே யிருமுழமே கைச் சாணே மூவிரல்; இருபத்திரண்டாவ தற்கு, நாற்பத்து மூன்று காதமே இரண்டு கூப்பீடே முந்நூற்றெண் பத்தொரு கோலே யொருமுழமே யேழுவிரல்; இருபத்து மூன்று வதற்கு, எண்பத்தேழு காதமே ஒரு கூப்பீடே இருநூற்றறுபத் திரு கோலே யிருமுழமே கைச் சாணே மூவிரல்; இருபத்து நான் காவதற்கு, நூற்றெழுபத்து நான்கு காதமே மூன்று கூப்பீடே இருபத்தைங் கோலே ஒரு முழமே யேழுவிரல். இருபத்தைந்தா வதற்கு, முந்நூற்று நாற்பத்தொன்பதின் காதமே இரண்டு கூப்பீடே ஐம்பதின் கோலே யிருமுழமே கைச் சாணே மூவிரல்; உற்கிருதி யென்னும் இருபத்தாறுவதற்கு, அறுநூற்றுத் தொண்ணூற்றொன் பதின் காதமே நூற்றொரு கோலே யொருமுழமே யேழுவிரல் எனக்கொள்க.

இனி, உத்த முதலாக உற்கிருதி யீறாகக்கிடந்த விருத்தச் சந்தங்களின் எழுத்து வரையறுத்துச் சொல்லுமாறு: ஓரடியுள் எழுத்தெண்ணி அவற்றை நான்கினுன் மாற நான்கடிக்கும் எழுத்தா மெனக்கொள்க.

> "அடியு ளெழுத்தினை நான்கினுன் மாற
> முடியுமா நான்கடிக்கு மெண்"

> "சந்த வெழுத்திற் றூக்கி யரைசெய்து
> சந்த வெழுத்தி னரைகூட்ட — வந்தன
> பாதத் தெழுத்தாம் பரவையான் மாறவரும்
> ஏதமி ஞன்கடிக்கு மெண்"

இவ்வுரைச்சூத்திரத்தின் கருத்தாவது: தான் வேண்டப்பட்ட சந்தத்தின் எழுத்துக்களை வருக்கித்து அரை செய்து அவ்வருக்க மூலத்துட் சந்தவெழுத்தின் அரைகூட்ட அச்சந்தங்கள் அள வெழுத்துச் சங்கையாம்; அவற்றை நான்கினுன் மாற நான்கடிக்கும் எழுத்தாம்; உத்தம் என்னும் முதற்சந்தத்திற்கு எழுத்து நான்கு; இரண்டாவதற்கு எழுத்து எட்டு; மூன்றுவதற்குப் பன்னிரண்டு; நான்காவதற்குப் பதினாறு; ஐந்தாவதற்கு இருபது; ஆறுவதற்கு இருபத்துநாலு; ஏழாவதற்கு இருபத்தெட்டு; எட்டாவதற்கு முப்பத்திரண்டு; ஒன்பதாவதற்கு முப்பத்தாறு; பத்தாவதற்கு

நாற்பது; பதினொன்றாவதற்கு நாற்பத்து நாலு; பன்னிரண்டாவதற்கு நாற்பத்தெட்டு; பதின்மூன்றாவதற்கு ஐம்பத்திரண்டு; பதினான்காவதற்கு ஐம்பத்தாறு; பதினைந்தாவதற்கு அறுபது; பதினாறாவதற்கு அறுபத்து நாலு; பதினேழாவதற்கு அறுபத்தெட்டு; பதினெட்டாவதற்கு எழுபத்திரண்டு; பத்தொன்பதாவதற்கு எழுபத்தாறு; இருபதாவதற்கு எண்பது; இருபத்தொன்றாவதற்கு எண்பத்துநாலு; இருபத்திரண்டாவதற்கு எண்பத்தெட்டு; இருபத்து மூன்றாவதற்குத் தொண்ணூற்றிரண்டு; இருபத்து நான்காவதற்குத் தொண்ணூற்றாறு; இருபத்தைந்தாவதற்கு நூறு; இருபத்தாறாவதற்கு நூற்று நாலு.

இனி அளவழிச் சந்தங்கட்குப் பெயர் சொல்லுமாறு:

அளவழிச் சந்தங்களிற் சீரொத்து ஓரடியுள் ஓரெழுத்துக் குறைந்து வந்ததனை *நிகர்த் தென்றும், இரண்டெழுத்துக் குறைந்து வந்ததனை விராட் டென்றும், ஓரெழுத்து மிக்கு வந்ததனைப் புரிக் கென்றும், இரண்டெழுத்து மிக்கு வந்ததனைச் சுராட் டென்றும், முதலடியும் நான்காமடியும் சீரொத்து ஓரெழுத்துக் குறைந்து நடுவிரண்டடியுஞ் சீரொத்து ஓரெழுத்து மிக்கதனைப் பவமத்திமம் என்றும் தோரையிடைச் செய்யுள் என்றும், இடையிரண்டடியுங் குறைந்ததனைப் பிபீலிகாமத்திமம் என்றும் †எறும்பிடைச்செய்யுளென்றும், முதலிரண்டடியும் ஒத்துக் கடையிரண்டடியும் எழுத்து மிக்கு வருவனவற்றையும், முதலிரண்டடியுந் தம்முள் ஒத்து எழுத்து மிக்குக் கடையிரண்டடியு மொப்ப வெழுத்துக் குறைந்து வருவனவற்றையும், முதலிரண்டடியுந் தம்முளொப்ப எழுத்துக்குறைந்து கடையிரண்டடியுந் தம்முள் ஒப்ப எழுத்துக் குறைந்து வருவனவற்றையும், ஒன்றிடையிட்டுக் குறைந்து வருவனவற்றையும், ஒன்றிடையிட்டு மிக்கும் குறைந்தும் வருவனவற்றையும் பாதிச்சமச்செய்யுள் என்றும், இவ்வாறன்றிச் சீரொத்து மிக்கும் குறைந்தும் வருவனவற்றை ‡அளவழி பையுட்சந்தம் என்றும் வேண்டுவர். தாண்டகங்கட்கு மிவ்வாறே சொல்லுவர் ஒருசார் வடநூல்வழித் தமிழாசிரியர். அவற்றுட் சில வருமாறு:

* 'அநிசாத்' என்பது வீரசோழியம் அச்சுப்பிரதியில் உள்ள பாடம்.

† 'எறும்புமிடைச் செய்யுள்' என்பதும் பாடம்.

‡ 'அளவழியுட்பையுட் சந்தம்' என்பதும் பாடம்.

"பங்கயக் காடுகொண் டலர்ந்த பாங்கெலாஞ்
செங்கய லினநிரை திளைக்குஞ் செல்வமு
மங்கையர் முகத்தன மதர்த்த வாளரி
யங்கயற் பிறழ்ச்சியு மருத நீரவே" (சூளா-நாட்டு-2.)

இது சீரொத்து ஓரடியுள் ஓரெழுத்துக் குறைந்து வந்தமை யால் நிகர்த்து.

"கொல்லைக் கொன்றைக் கொழுநன் றன்னை
மல்லற் பொழில்வாய் மணியோர் முறுவன்
முல்லைக் குறமா மடவாண் முறுகப்
புல்லிக் குளிரப் பொழியாய் புயலே"

இஃது ஓரடியுள் இரண்டெழுத்துக் குறைந்து சீரொத்து வந்தமையால் விராட்டு. என்னை?

"ஓரெழுத்துக் குன்றி னிகர்த்தாம் விராட்டாகும்
ஈரெழுத்துக் குன்று மெனின்"

என்பவாகலின்.

"பேடையை யிரும்போத்துத்
தோகையால் வெயின்மறைக்கும்
காடக மிறந்தார்க்கே
யோடுமென் மனனேகாண்"

இஃது ஓரடியுள் ஓரெழுத்து மிக்குச் சீரொத்து வந்தமையால் புரிக்கு.

"கலைபயி லல்குலார் காமர் மஞ்ஞைபோன்
றுலவுவர் மெல்லவே யொண்பொன் மாநகர்
அலர்ழலி வீதிக ளாறு போன்றுள
மலையென விவந்துள மதலை மாடமே"

இஃது இரண்டெழுத்து ஓரடியுண் மிக்குச் சீரொத்து வந்தமை யால் சுராட்டு. என்னை?

"ஒரெழுத்து மிக்காற் புரிக்காஞ் சுராட்டாகும்
ஈரெழுத்து மிக்க தெனின்"

என்பவாகலின்.

" மல்லன் மாமழையார்ப்பக்
கொல்லைவாய்க் குருந்திளகின
முல்லையாய் முறுவலித்தன
செல்வர்தேர் வரவுண்டாம் "

இது முதலடியும் நான்காமடியும் எழுத்துக்குறைந்து நடுவிரண்டடியும் எழுத்துமிக்கு நாலடியுஞ் சீரொத்து வந்தமையால் பவமத்திமம் எனக்கொள்க.

" பரவு பொழுதெல்லாம் பன்மணிப்பூட் டோவா
வரவு மினிக்காண வண்ணநாம் பேற்றை
விரவு மலர்ப்பிண்டி விண்ணோர் பெருமான்
இரவும் பகலும்வந் தென்றலைமே லானே"

இது முதலடியும் ஈற்றடியும் எழுத்து மிக்கு, நடுவிரண்டடியும் எழுத்துக் குறைந்து நாலடியுஞ் சீரொத்துவந்தமையால் பிபீலிகா மத்திமம். என்னை ?

" இடைக்க ணிரண்டடியு மிக்கால் பவமா
மெறும்பிடையாங் குன்றி னெழுத்து"

என்பவாகலின்.

" திருவிற்கோர் கற்பகத் தெரியன் மாலையார்
உருவிற்கு விளக்கமா மொண்பொற் பூங்கொடி
முருகற்கு மனங்கற்கு மெனக்கு மொய்சடை
யொருவற்கும் பகைத்தியா லொருத்தி வண்ணமே."

இது முதலிரண்டடியும் எழுத்துக்குறைந்து கடையிரண்டடியும் எழுத்துமிக்கு நான்கடியுஞ் சீரொத்து வந்தமையால் பாதிச்சம விருத்தம்.

" மடப்பிடியை மதவேழந்
தடக்கையால் வெயின்மறைக்கு
மிடைச்சுர மிறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்"

" இரும்பிடியை மதவேழம்
பெருங்கையால் வெயின்மறைக்கும்
அருஞ்சுர மிறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண்"

இவை முதலிரண்டடியும் எழுத்துமிக்குக் கடையிரண்டடியும் எழுத்துக்குறைந்து நான்கடியுஞ் சீரொத்து வந்தமையால் பாதிச்சமச்செய்யுள்.

" அடிமிசை யரசர்கள் வணங்க வாண்டவன்
பொடிமிசை யப்புறம் புரள விப்புறம்
இடிமுர சதிரவொ ரிளவ றன்னொடு
கடிபுகு மவளது கற்பின் *வண்ணமே. (சூளாமணி-முத்தி-22.)

இது முதலடியும் மூன்றாமடியும் எழுத்து மிக்கு இரண்டாமடியும் ஈற்றடியும் எழுத்துக்குறைந்து நாலடியுஞ் சீரொத்து வந்தமையால் பாதிச்சம விருத்தம்.

" மெய்யறி விலாமை யென்னும் வித்தினிற் பிறந்து வெய்ய
கையறு வினைகள் கைபோய்க் கடுந்துயர் விளைத்த போழ்தின்
மையுற வுழந்து வாடும் வாழுயிர்ப் பிறவி மாலை
நெய்யுற விழற்றும் வேலோ யினைத்தென நினைக்க லாமோ "

(சூளாமணி-இரதநூ-80.)

இது முதலடியும் மூன்றாமடியும் எழுத்துக்குறைந்தும் ஏனை இரண்டடியும் எழுத்து மிக்கும் நான்கடியும் சீரொத்து வந்தமையால் பாதிச்சம விருத்தம். என்னை?

" முடிவிரண்டு மிக்கு முதலிரண்டு நைந்து
முடிவிரண்டுங் குன்றி முதலிரண்டு மிக்கு
மடியிடையிட் டருகி யும்மிக்கு வருமேற்
படியின்மேற் பாதிச் சமவிருத்த மாமே "

என்பவாகலின். இதனைப் பதநெகிழ்த்து உரைத்துக்கொள்க.

இனிச் சிறப்புடைப்பையுட் சந்தங்களிற் சிலவருமாறு:

" ஆதியா னருளாழி தாங்கினா னாயிரச்செங் கதிரோ னானுஞ்
சோதியான் சுரர்வணங்கு திருவடியான் சுடுநீறு வினையப் பட்ட
†காதியா னருளிய கதிர்முடி கவித்தாண்டார் மருகன் கண்டாய்
ஓதியா னுரைப்பினு மிவன்வலிக்கு நிகராவா ருளரோ வேந்தர்"

(சூளாமணி-சுயம்வர-25.)

* 'நீர்மையே' என்பதும் பாடம்.

† 'காதியா னருளியபொற் கதிர்கொண்முடி கவித்தாண்டார் மருகன் கண்டாய்—ஓதியான் மொழியினிவ னுறுவலிக்கு நிகராவா ருளரோ வேந்தர்' என்பது சூளாமணி அச்சுப்பிரதியில் உள்ள பாடம். இப்பாடம் கொள்ளில் கூறிய இலக்கணம் பொருந்தாமை யறிக.

இது முதலடி பத்தொன்பது எழுத்தாயும், இரண்டாமடி இருபத்திரண்டு எழுத்தாயும், மூன்றாமடி இருபதெழுத்தாயும், நான்காமடி இருபத்தோ ரெழுத்தாயும் வந்தமையால் அளவழிபை யுட்சந்தம்.

"மணிமலர்ந் துமிழொளி வனப்புஞ் சந்தனத்
துணிமலர்ந் துமிழ்தருந் தன்மைத் தோற்றமு
நணிமலர் நாற்றமு மென்ன வன்னதா
லணிவரு சிவகதி *யடைவ தின்பமே" (சூளாமணி-முத்தி-6.)

இது முதலடியும் முடிவடியும் பதினொலெழுத்தாய், இடையடி இரண்டும் பதின்மூன்றும் பன்னிரண்டுமாய் எழுத்தொவ்வாது வந்தமையால் அளவழிபையுட்சந்தம். இதனை எறுப்பிடைச்சந்தச் செய்யுள் என்பாருமுளர்.

"செஞ்சுடர்க் கடவு டிண்டே ரிவுளிகா றிவள வூன்று
மஞ்சுடை மதர்வை நெற்றி வானுழு வாயின் மாடத்
தஞ்சுட ரிஞ்சி யாங்கோ ரகழணிந் தலர்ந்த தோற்றம்
வெஞ்சுடர் விரியு முந்நீர் வேதிகை மீதிட் டன்றே"

(சூளாமணி-நகர-3.)

இதுவும் முதலடி பதினேழெழுத்தாய் இரண்டாமடியும் நான்காமடியும் பதினாந்தெழுத்தாய் மூன்றாமடி பதினெறெழுத்தாய் வந்தமையால் அளவழிபையுட்சந்தம். இதனைப் பாதிச்சமப்பையுட்சந்தம் என்பாரு முளர்.

"என்னிது விளைந்த வாறித் தூதுவர் யாவ ரென்று
கன்னவில் வயிரத் திண்டோட் கடல்வண்ணன் வினவ யாருஞ்
சொன்னவின் றுரைக்க மாட்டார் துட்கென்று துளங்க வாங்கோர்
கொன்னவில் பூதம் போலுங் குறமக ளிதனைச் சொன்னாள்.

(சூளாமணி-சீய-107.)

இது முதலடி பதினாந்தெழுத்தாய், இரண்டாமடி பதினே ழெழுத்தாய்ப் பின்னிரண்டடியும் பதினெறெழுத்தாய் வந்தமையால்

---

* 'ஆவதின்பமே' என்பது சூளாமணி அச்சுப்பிரதியில் உள்ளபாடம். இப்பாடங்கொள்ளில் இவ்வடிக்குக்கூறிய எழுத்தில் ஒன்று குறைபடுதல் காண்க.

அளவழிச்சந்தப்பையுள். பிறவும் இவ்வாறு வருவனவற்றையெல்லாம் வந்தவகையாற் பெயர்கொடுத்து வழங்குக. என்னை?

" வந்த முறையாற் பெயர்கொடுத் தெல்லாந்
தந்த முறையாற் றழாஅல் வேண்டும்"

என்பவாகலின். தாண்டகமும் இவ்வாறேகொள்க; 'ஒன்றென முடித்தலென் றின்ன வகையால் யாவையு முடியும்' என்பவாகலின். குமரசேனாசிரியர் கோவையும், தமிழ்முத்தரையர் கோவையும் யாப்பருங்கலக் காரிகையும் போன்ற சந்தத்தால் வருவனவற்றின் முதற்கண் நிரையசைவரின் ஓரடி பதினேழெழுத்தாம். முதற்கண் நேரசைவரின் ஓரடி பதினாறெழுத்தாம். இவ்வாறன்றி, மிக்கும் குறைந்தும் வாரா. அவை எண்ணுகின்றுழி ஆய்தமும் ஒற்றும் ஒழித்து, உயிரும் உயிர்மெய்யும் குற்றியலிகரமும் குற்றியலுகரமுங் கொண்டு எண்ணப்படும்.

" எழுவாய் நிரைவரினு மேழுடைய வீரைந்
தெழுவாய் தனிவரினென் றேகும்—வழுவாத
கோவையுஞ் செய்யுட்கால் குன்றா பெருகாவென்
றேவினார் தொல்லோ ரெடுத்து"

அவற்றுட் சில வருமாறு:

" இருநெடுஞ் செஞ்சுட ரேகமொன் றேந்தி யிரவின்வந்த
வருநெடுங் கழுதற்கன் றேதரற் பாலதல் லாதுவிட்டாற்
கருநெடு மால்கட லேந்திய கோன்கயல் சூடுநெற்றிப்
பெருநெடுங் குன்றம் விலையோ கருதிலெம் பெண்கொடிக்கே."

எனவும்,

" காய்ந்துவிண் டாலைய காமரு கூடலிற் கண்சிவந்த
வேந்துகண் டாயென்ன வெள்வளை சோரக் கலைநெகிழப்
போந்துகண் டாயொடும் போந்துகண் டேற்கவன் பொன்முடிமேற்
போந்துகண் டானென்று போந்ததென் மாட்டோர் புறனுரையே"

எனவும்,

" திண்டேர் வயவரைச் சேனைவென் றானை தேங்கவுண்மார்
வண்போத மன்ற வளைவிழ னீக்கிய வார்சிலம்ப
நண்போ லனையிற்பொல் லாதது விற்கவெ னன்னுதலாள்
கண்போற் குவளை கனந்ததற் கியாதுங்கை மாறிலவே"

எனவும் இவற்றுட் கண்டுகொள்க.

" முன்றி லெங்கு முருகயர் பாணியுஞ்
சென்று வீழரு வித்திர ளோசையும்
வென்றி வேழ முழக்கொடு கூடிவா
ஞென்றி னின்றதி ரும்மொரு பாலெலாம்" (சூளா-நாட்டு-7.)

என்னுஞ் சந்தத்து நேரசைமுதலாய் வருமடி பதிமூன்றெழுத்தாயினவாறு. நிரையசைமுதலாய் வருமடி பன்னிரண்டெழுத்தாம்.

வரலாறு:

" அணங்க ஞரண வாடன் முழவமுங்
கணங்கொள் வாரணக் கம்பலைச் செல்வமும்
மணங்கொள் வான்முர சும்வய லோதையு
மிணங்கி யெங்கு மிருக்குமொர் பாலெலாம்" (சூளா-நாட்டு-9.)

என இதனுள் நிரையசைமுதலாய் வருமடி பன்னிரண்டெழுத்தாய் வந்தவாறு கண்டுகொள்க.

சிந்தாமணி, சூளாமணி, குண்டலகேசி, நீலகேசி, அமிர்தபதி என்றிவற்றின் முதற்பாட்டு வண்ணத்தான் வருவன; அவற்றில் நேரசை முதலாய்வரின் ஓரடி பதினன்கெழுத்தாம். நிரையசை முதலாய்வரின் ஓரடி பதினைந்தெழுத்தாம். பிங்கலகேசியின் முதற் பாட்டு இரண்டாமடி ஓரெழுத்து மிகுத்துப் புரிக்காகப் புணர்த்தார். அல்லனவெல்லாம் ஒக்கும்.

வரலாறு:

" மூவா முதலா வுலகம்மொர் மூன்று மேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னினெய்தி
யோவாது நின்றகுணத் தொண்ணிதிச் செல்வனென்ப
தேவாதி தேவனவன் சேவடி சேர்து மன்றே"

(சிந்தாமணி-கடவுள் வாழ்த்து-1.)

" வென்றான் வினையின் றொகையாகி விரிந்து தன்க
ணொன்றாய்ப் பரந்த வுணர்வின் னொழியாது முற்றுஞ்
சென்றான் றிகழுஞ் சுடர்சூ ழொளிமூர்த்தி யாகி
நின்றா னடிக்கீழ்ப் பணிந்தார் வினைநீங்கி நின்றார்"

(சூளாமணி-காப்பு.)

" மூன்றான் பெருமைக்க ணின்றான்முடி வெய்துகாறு
*நன்றே நினைந்தான் குணமொழிந்தான் றனக்கென்
றொன்றானு முள்ளான் பிறர்க்கே யுறுதிக்குழந்தா
னன்றே யிறைவ னவன்றாள் சரணாங்க ளன்றே."

(குண்டலகேசி-கடவுள்வாழ்த்து.)

எனவும்,

" நல்லார் வணங்கப் படுவான்பிறப் பாதிநான்கு
மில்லா னுயிர்கட் கிடர்தீர்த்துயி ரின்பமெய்துஞ்
சொல்லான் றருமச் சுடரோனெனுந் தொன்மையினான்
எல்லா முணர்ந்தா னவனேயிறை யாகவேத்தி"

" குற்றங்கண்மூன்று மிலனாய்க் குணங்கட்கிடனாய்'

எனவும் இவை நேரசை முதலாய்வந்து ஓரடி பதினான்கெழுத்தான வாறு கண்டுகொள்க.

" மதியங் கெடுத்த வயமீனெனத் தம்பிமாழாந்
துதிதற் குரியாள் பணியாலுட னாயவாறு
விதியின் னெறியி னவன்றோழர் விரந்தவாறும்
பதியின் னகன்று பயந்தாளைப் பணிந்தவாறும்"

(சிந்தாமணி - பதிகம் - 18.)

என நிரையசை முதலாய்வந்து பதினைந்தெழுத்து ஓரடிக்கண் வந்தவாறு கண்டுகொள்க.

" அம்பொன் மாலையார் களித்தலத் தெழுந்த ரத்தவாய்க்
கொம்பனார் கொடுத்த முத்தநீ ரவாய கோழரைப்
பைம்பொன் வாழை செம்பொனிற் பழுத்து வீழ்ந்த சோதியால்
அம்பு பாய்ந்து வாதொசிந்து சாறு †சோர்வ போலுமே"

(சூளாமணி-இரதநூ-13.)

இந்தச் சந்தத்தின் நேரசை முதலாகவருவன ஒரோவடியுட் பதினைந்தெழுத்தாயும், நிரையசை முதலாய்வருவன பதினாறெழுத் தாயும்வருதல் பெரும்பான்மைய வெனக்கொள்க.

---

* இவ்வடியில் ஒரெழுத்துக் குறைந்திருக்கிறது. இதனால் இவ்வடியின் பாடம் சரியான தன்றெனத் தோன்றுகின்றது.

† 'சார்வ மானுமே' என்பது சூளாமணி அச்சுப் பிரதியில் உள்ள பாடம்.

" கவர்கதிர் வரஃகிறுக்கு காய்கவின்ற வெட்குழாங்
துவரைகொட் பயறுழுந்து தோரையோடு சூழ்கொடி
யவரையின்ன பல்லுணு வளக்கரிய வென்பவாற்
கவரும்வண்டு சூழநின்று காந்தள்கை மறித்தவே"

இது நிரையசைமுதலாய்ப் பதினெழுத்தாயினவாறு கண்டு கொள்க.

" மாசில் கண்ணி மைந்த ரோடு மங்கை மார்தி ளைத்தலிற்
பூசுசாந் தழித்தி ழிந்த புள்ளிவேர் புலர்த்தலால்
வாச முண்ட *மாருதம் வண்டு பாட மாடவாய்
வீச வெள்ளி லோத்திரப் பொதும்பு பாய்ந்து விம்முமே"

(சூளாமணி-இரத்நூ-16.)

இது இச்சந்தத்தால்வந்து மூன்றாமடி எழுத்துக்குறைந்து வந்தது.

"தெய்வ யாறு காந்தளஞ் சிலம்பு தேங்கொள் பூம்பொழிற்
பௌவ முத்த வார்மணற் †பறம்பு மௌவன் மண்டப
மெவ்வ மாடு ‡மின்னபோ லிடங்க ளின்ப மாக்கலாற்
கௌவை யாவ §தங்கர்க் காம ஞர்செய் கௌவையே"

(சூளாமணி-இரதநூ-18.)

இதுவுஞ் சந்தத்தால் வந்து ஈற்றடி பதினொன் கெழுத்தாய்வந்தது. இவ்வாறு எழுத்துக்குறைந்தும் மிக்கும்வருவனவற்றையறிந்து, நிசர்த்தென்றும், விராட்டென்றும், புரிக்கென்றும், சுராட்டென்றும் பெயரிட்டு வழங்குக. நான்கடியும் எழுத்தொத்து வருவனவற்றைத் தலையாகுசந்தம் என்றும், ஓரெழுத்து மிக்குங்குறைந்தும்வருவனவற்றை இடையாகுசந்தம் என்றும், இரண்டெழுத்து மிக்குங்குறைந்தும் வருவனவற்றையும் பிறவாற்றான் மிக்குங்குறைந்தும் வருவனவற்றையும் கடையாகுசந்தம் என்றும் வழங்குவ ரொருசாராசிரியர். தாண

* 'மாருதங்தென்' என்பது சூளாமணி அச்சுப்பிரதியில் உள்ளபாடம். இப்பாடங் கொண்டால் இது 'மூன்றாமடி எழுத்துக்குறைந்து வந்தது' ஆகாமை காண்க.

† 'பிறங்கல்' என்பதும் பாடம்.

‡ 'நீர்ப்பொழில்' என்பதும் பாடம்.

§ 'அங்கர்க்கு மாரனர்' என்பது சூளாமணி அச்சுப்பிரதியிலுள்ள பாடம்.

டகங்கட்கும் இவ்வாறே சொல்லுவர். இவற்றையெல்லாஞ் சாணுச் சிறையமும், செயதேயமும், மிச்சாகிருதியும், பிங்கலமும், மாபிங்கலமும், இரணமாமஞ்சுடையும், சந்திரகோடிச்சந்தமும், குணகாங்கியென்னுங் கருநாடகச்சந்தமும், வாஞ்சியார்செய்த வடுகச்சந்தமும் ஆகியவற்றுள்ளும் மாபுராணம் முதலாகிய தமிழ்நூலுள்ளும் புகுதியுடையார்வாய்க் கேட்டுக்கொள்க. இவையெல்லாம் விகற்பித் தீண்டுரைப்பிற் பெருகும்.

ஒருசார் வடநூல்வழித் தமிழாசிரியர் குருவும் இலகுவும் புணர்ந்து முற்றவரினும், முற்றக்குருவேயாயும், முற்றவிலகுவேயாயும் வரினும் சமானம் என்பதாம்; இலகுவுங்குருவும் புணர்ந்து முறைவரிற் பிரமாணம் என்பதாம்; இரண்டு குருவும் இரண்டு லகுவுமாய் முறையானேவரினும், இரண்டு லகுவும் இரண்டு குருவுமாய் முறையானேவரினும் விதானம் என்பதாம் என்பர். என்னை?

"குருவிலகு வாயுங் குருவிலகு வேறாய்
வருமெனினு மைதீர் சமானங்—குருவிலகுப்
பின்றான் வருமேற் பிரமாணம் விதானமா
மொன்றிரண் டாகு மெனின்"

என்பவாகலின். வரலாறு :

"போது விண்ட புண்ட ரீக
மாத ரோடு வைக வேண்டின்
யாதி நாத ராய்ந்த நூலி
னீதி யோதி யின்மி னீடு"

எனவும்,

"கற்ற நூலினர்
செற்ற நீக்கினர்
வெற்றி வேந்தருக்
குற்ற தாதரே"

எனவும் இவை குருவும் இலகுவும் அடிமுடியளவு முறையேவந்தமையாற் சமானம் எனப்படும்.

"காரார் தோகைக் கண்ணார் சாயற்
றேரா ரல்குற் றேனார் தீஞ்சொற்

போரார் வேற்கட் பொன்னே யின்னே
வாரா ரல்லர் போனார் தாமே"

இது முற்றக் குருவே வந்தமையாற் சமானம் எனப்படும்.

"முருகு விரிகமல
மருவு சினகரன்
றிருவடிக டொழுமி
னருகு மலமகல"

இது முற்ற லகுவே வந்தமையாற் சமானம் எனப்படும்.

"கயற்கருங்க ணன்னலார்
முயக்கநீங்கி மொய்ம்மலர்
புயற்புரிந்த புண்ணியர்க்
கியற்றுமின்க ளீரமே"

இது லகுவுங் குருவு முறையே வந்தமையாற் பிரமாணச்செய்யுள் எனப்படும்.

"தூங்கக் கனகச் சோதி வளாகத்
தங்கப் பெருநூ லாதியை யாளுஞ்
செங்கட் சினவேள் சேவடி சேர்வார்
தங்கட் கமருந் தண்கட னன்றே"

இவ்விரண்டு இரண்டு குருவும் இரண்டு லகுவும் முறையே வந்தமையால் விதானச்செய்யுள் எனப்படும்.

"பொருளாளிற் புகழாமென்
றருளாளர்க் குரையாயுன்
றிருமார்பிற் சினனேயொன்
றருளாய்நின் னடியேற்கே"

இவ்விரண்டு இரண்டு குருவும் இரண்டு லகுவுமாய் முறையானே வந்தமையால் விதானச்செய்யுள் எனப்படும்.

"பூவார் பொய்கைப் பொற்போதிற்
றேவார் செங்கட் சேயாநீ
யாவா வென்னா தென்னேசூர்
மாவா னானைக் கொன்றானே"

இது முற்றக் குருவேயாய் வந்தமையாற் சமானம். பிறவும் அன்ன. இவையெல்லாம் 'பிறவும்' என்றதனாற் கொள்க.

*செய்யுளோத்துதாரணம்
முற்றும்.

---

* 'செய்யுளோத்துக் கரணம்' 'செய்யுளோத்துக் காரணம்' என்பதும் பாடம்.

[சித்திரக்கவிமாலை.]

96. மாலை மாற்றே சக்கரஞ் சுழிகுளம்
மேக பாத மெழுகூற் றிருக்கை
காதை கரப்பே கரந்துறை பாட்டே
தூசங் கொளலே வாவ ளுற்றி
கூட சதுக்கங் கோமூத் திரியே
யோரெழுத் தினத்தா லுயர்ந்த பாட்டே
பாத மயக்கே பாவின் புணர்ப்பே
யொற்றுப் பெயர்த்த லொருபொருட் பாட்டே
சித்திரக் காவே விசித்திரக் காவே
விகற்ப நடையே வினாவுத் தரமே
சருப்பதோ பத்திரஞ் சார்ந்த வெழுத்து
வருத்தன மற்றும் வடநூற் கடலு
ளொருங்குடன் வைத்த வுதாரண நோக்கி
விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டே
வுருவக மாதி விரவிய லீரு
வருமலங் காரமும் வாழ்த்தும் வசையுங்
கவியே கமகன் வாதி வாக்கியென்
றவர்க டன்மையு மவையின தமைதியும்
பாடுதன் மரபுந் தாரணைப் பகுதியும்
ஆனந்த முதலிய *வூனமுஞ் செய்யுளும்
விளம்பனத் தியற்கையு நரம்பின் விகற்பமும்
பண்ணுந் திறமும் பாலையுங் கூட்டமும்
எண்ணிய திணையு மிருதுவுங் காலமும்
எண்வகை மணனு மெழுத்துஞ் சொல்லுஞ்
செந்துறை மார்க்கமும் வெண்டுறை மார்க்கமும்
தந்திர வுத்தியுந் தருக்கமு நடமு
முந்துநூன் முடிந்த முறைமையின் வழாமை

* 'ஊனச் செய்யுளும்' என்பதும் பாடம். உரையாசிரியர் 'ஊனமும் செய்யுளும்' என்றே பிரித்து உரைகூறி யிருக்கின்றார்.

வந்தன பிறவும் வயினறிந் துரைப்போன்
அந்தமில் கேள்வி யாசிரி யன்னே

இச்சூத்திரம், நூலுரைக்கும் ஆசிரியனது பெருமையுணர்த்துதல் நுதலிற்று.

(1) மாலைமாற்றுவது: ஈறுமுதலாக வாசித்தாலும் அப்பாட்டேயாவது.

" நீமாலை மாறுடி நீறுடு நாடுறு
நீடிறு மாலைமா நீ"

எனவும்,

" பூமாலை காரணீ பூமேத வேதமே
பூணீர காலைமா பூ"




எனவும்,

" காடாமாதா லீதாகா
காதாலீதா மாடாகா"

எனவும் வரும்.

2) சக்கரம் வருமாறு: சக்கரம் பலவிதத்தவாயினும், நான்காரைச் சக்கரமும், ஆறாரைச்சக்கரமும், எட்டாரைச்சக்கரமும் என அடங்கும். அவற்றுள் நான்காரைச்சக்கரம் வருமாறு:

" மேனமக் கருளும் வியனருங் கலமே
மேலக விசும்பின் விழவொடு வருமே
மேருவரை யன்ன விழுக்குணத் தவமே
மேவதன் றிறநனி மிக்கதென் மனமே"

இது நான்காராய், நடு 'மே' என்னும் எழுத்து நின்று, முதலும் ஈறும் அதுவேயாய்ச் சூட்டின்மேல் நாற்பத்து நான்கெழுத்தாய், ஆர்மேல் ஒரோவெழுத்தாய் முற்றுப்பெற்றது.

" நவைக்கணம் வீய நன்னூ லாய்ந்து
சேட்டலர் விராய மோட்டார் பிண்டி
நன்னிழன் மேயோன் சேவடி
துன்னினர் துன்னலர் துகட்டிறும் *பிறப்பதே"

* 'பிறப்பே' என்பது சில ஏடுகளின் பாடம். இப்பாடங் கொண்டால் எழுத்துக்குறைவது கண்டுகொள்க.

இது நான்காராய், நடுவு 'மேரவிராய' வென்பதுபட்டு ஆர்மேல் ஐவைந்தெழுத்தாய்ச், சூட்டின்மேன் முப்பத்திரண்டெழுத்துப் பெற்று முடிந்தது.

இனி ஆறாரைச்சக்கரம் வருமாறு:

" பூங்கடம்பி னந்தார்தா நன்று புனைதேனார்
கோங்கெழு கொங்கந்தார் தான்பேணு—மோங்குநன்
மாக்கோதை மாதவித்தார் தாங்கோட லெண்ணுமாற்
பூக்கோதை மாதர்தம் பொற்பு"

இஃது ஆறாராய், நடுவு ரகர வொற்று நின்று, குறட்டைச்சூழத் தாவென்னும் எழுத்துநின்று, ஆர்மேல் ஏழெழுத்து நின்று, சூட்டின்மேற் பன்னிரண்டெழுத்துப் பெற்று முடிந்தது.

" தக்கவர் சம்பந்தந் தாங்கி யிவணெஞ்சா
மக்கட் டொகைஞாலந் தந்தோம்பி—மிக்கின்றே
விண்மணந் தஞ்சாந்தந் நீவி விரைத்தந்த
தண்மணவிற் சான்றோர் தயா"

இதுவும் ஆறாராய் நடுவுத் தகார நின்று, குறட்டைச்சூழ நகர வொற்று நின்று, ஆர்மேல் எவ்வேழெழுத்து நின்று, சூட்டின்மேற் பன்னிரண்டெழுத்துப் பெற்று முடிந்தது.

' ஆறாரா யவ்வார்மே லெவ்வே ழெழுத்தாகி
யேரார்ந்த நேமிமே லீராறாய்ச்—சீரார்ந்த
பொன்குறட்டைச் சூழ நடுவோர் தகாரமேற்
றண்மணவிற் சக்கரமாந் தான்"

இதன்வழியே எழுதிக் கண்டுகொள்க.

" கொலைமான் விழியசறல் குன்றாத செவ்வி
கலிமான்சென் றான்ற மடங்கி—யொலிபரவி
விண்க ணிடித்தலற லின்றாகி மின்னுக
கொண்கன் விரவிரவின் கண்"

இஃது ஆறாராய்க், கலிமல்லன் என்னும் பெயர் குறட்டைச் சூழ நின்று, நடுவுறகர நின்று, ஆர்மேல் அவ்வாறு எழுத்துப் பெற் றுச், சூட்டின்மேற் பன்னிரண்டெழுத்துப் பெற்று அவ்வெழுத்து மாலை மாற்றாய் முடிந்தது.

"மண்பாய வையகத்து மாலைமாற் றீறாக
வெண்பா லெழுத்து மிணையொப்ப—வெண்பாவின்
சீர்கிடப்பத் தென்றமி ழாளி கலிமல்வன்
பேர்கிடப்பப் பேச லரிது"

இதன்வழியே எழுதிக் கண்டுகொள்க.

இனி, எட்டாரைச்சக்கரம் வருமாறு:

"கார்க்கட லொலிமா வார்ப்போ டாணுக்
கோளகட் டரவ மாழ்துய ரழுந்த
வாகந் திருநல மாகமுன் னடைமத்
தாவரை கீறிஇய மால்வரை கடிந்த
காடவர் கோன்றிரு வாரமிழ் தாடவர்க்
கடைந்த தப்புரத் தக்கது தானே"

"ஆரெட்டா யவ்வார்மே லையைந் தெழுத்தாகி
யேரொத்து நேமிமே லெண்ணுன்காய்—வாரத்தால்
வாழ்க வலிவலய மாவளதேன் மாதவர்கோன்
சூழ்தருமச் சக்கரமாச் சொல்லு"

இதன்வழியே அதனை யெழுதிக் கண்டுகொள்க.

"பருவரை கிவந்து புடையிருங்கடல் வளவிய
அகன்பெருங் கிடக்கைப் பார்மிசைப் பல்வரைமுன்
மல்குவளங் கெழுமிய வசையறு கீதிய
மீதில புரிக பாரி போலவொன்
றினிதி னேத்திக் கவியெல்லாஞ் சொல்ல
வீவோர்ப் பெறுதெனப் டல்கிளை தேம்பச்
செந்தீக் கட்புலத் துளங்கொண்டு துளங்க
வோங்குமிசை யிலவன் களிறுசெவி சாய்த்துக்
கேழலோ டாழ்தரு நீரகடுங் கலுழி
நீந்திக் கண்டேன் களைகண் பூந்தேன்
பண்ணியல் யாழ்நல மொழியவர்
கண்மலர் புல்லக் கலக்கலின் றேளதே"

இது,

எட்டாரா யார்மேற்பத் தொன்ப தெழுத்தாகி
வட்டத்து ளெண்ணுண்காய் வன்குறட்டி—லெட்டு
மரிதிரன் பாட்டுடன்றங் கார்நடுவ ணின்ற
விருநான் கியைவதுபார்த் துண்ணென் ருெருவாமை
யாராழி பாய்ந்த விடந்தோ றழகிதாப்
பாராளும் பல்லவ மல்லனென்—ருராய்ந்
தொருங்கமைந் துள்ளாற்கவ் வாகி யொலிநீர்க்
கருங்கடற் றண்களந்தை வேந்த—னிருங்கழற்கால்
வண்டுறையுந் தண்டார் மருசாதி வாட்களகண்
டிண்டோ ளிணைச்செவ்வித் தண்டாதாக்—கொண்டமைத்
தாசிரிய மாக்கி யதனுட் கரந்தது
மாசில்சீர் வள்ளுவன் பாட்டினு—ளேசிலா
எல்லா விளக்கும் விளக்கல்ல சான்ருேர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு"

எனக் கொள்க.

"தடங்கடன் மண்ணிற் றருமருள் விரும்பிய
சின்மென் கிளவித் தெய்வப் பாரியு
மில்லை யாகிய திரவலர் வினையெனத்
தன்னுடல் பொத்திய தாசிடு சிதவலு
மடுத்த மெய்யள் கடைத்தலை முன்சனத்
தீவது நோக்கி யேனை முனைகெட
வேவிய வெட்சி சால்பிற் றந்தோலா
தாங்கே மதிலை வென்றி வேழ
மிகுதி பாடி னின்றனள் விறலி
நெருநலின் றஞ்சி பாடிய வவ்வைபோல
வறுமை யுற்ற சிறுமை மூதுரை
தணந்து மிக்க கழற்பொலி திருமணி
யணிந்தரைத் துஞ்ச *வலகின் ருேளதே"

இதுவும்,

"வட்ட மிரட்டித்து வன்குறட் டுள்ளமைந்த
வெட்டாரச் சக்கரமிச் சக்கரத்தி—னிட்டமையப்
பட்ட வெழுத்துப் பதிற்றெட்டோ டைந்துதலை
யிட்ட வொருநூ றிவையிடுமா—செப்பிய

* 'வல்லிகின் ருேளே' என்பதும் பாடம். இப்பாடம் வட்டத்திற்கேற் றப் பொருந்தவில்லை.

வாழியின்மே னின்றங் கணிசிறந்த வாயுங்கா
லேழு மிருபது மைந்து மினமுறையே
வாழியாகின் றரின்மேல் வல்லோர் வகுத்தனவு
மாழி முறையிற் பதினெட்டாஞ்—சூழியன்ற
வின்கூறட்டு ளெட்டு மிரவலர்தம் பல்கிளைக்கே
யன்புரைக்கு மஞ்சாதான் பாட்டென்று—முன்புரைத்த
வாராழி பாய வணிதங் கிடந்தொறவன்
றீராச் சிறப்புப்பேர் சேர்வித்து—நேரொத்த
சவ்வகத்து மூன்று வதுதந்த சக்கரத்தின்
செவ்வகத்து வேந்துந் தெரிந்திவற்று—லிவ்வகையே
யாசிரிய மாக்கி யதனுட் கரந்துரைத்த
நேரிசை வெண்பா வினைக்குங்காற்—பாரிற்
றருமலிந்த வண்மைத் தலைத்தந்து மிக்க
திருமலிந்து தீதிலவே யாக—வுருமலிந்த
வென்னரசன் * மள்ளன் மதினிலை யேதிலர்க
டுன்னரிய வஞ்சினத்தான் றேள் ”

எனக் கொள்க.

சக்கரத்திற்குந் திரிபாகிக்கும் எழுத்தெண்ணுகின்றுழி எல்லா எழுத்துங் கொள்ளப்படும். அடிக்கெழுத் தெண்ணுமாறுபோலக் குற்றிகரக் குற்றுகரங்களும் ஒற்றும் ஆய்தமும் ஒழித்தெண்ணப் படா. திரிபாகிக்கும் அத்தொடக்கத்தன கொள்க. சக்கரத்திற்குக் காட்டின பாட்டுள்ளுங் கண்டுகொள்க. இதனுட் சக்கரம் என்ற தனுனே பூமிச்சக்கரமும், ஆகாயச்சக்கரமும், பூமியாகாயச்சக்கரமும், வட்டச்சக்கரமும், புருடச்சக்கரமும், சதுரச்சக்கரமும், கூர்மச்சக்கர மும், மந்தரச்சக்கரமும், காடகச்சக்கரமும், சனிபுருடச்சக்கரமும், சலாபச்சக்கரமும், சக்கரச் சக்கரமும், அர்ரவுச்சக்கரமும் முதலாக வுடையன புணர்ப்பாவையுள்ளும், போக்கியத்துள்ளும், கிரணியத் துள்ளும், வதுவிச்சையுள்ளும் கண்டுகொள்க. அவையெல்லாம் சாவவும், கெடவும் பாடுதற்கும், மனத்தது பாடுதற்கும்பற்றும் என்று கொள்க.

(3)
இனிச் சுழிகுளமாவது எட்டெழுத்தாய் நான்கு வரியும் முற்றுப் பெற்ற பாட்டு, முதலுமீறுஞ் சுழித்து வாசித்தாலு மப்பாட்டே யாவது. வரலாறு:

* ‘ வள்ளன் ’ என்பதும் பாடம்,

" அதிகமலமாகாவே திண்ணிறமேற போகா
கணிநீங்குமாறமா மறங்குவகுமேல "

எனவும்,

" கதமிருவன கோழிதன்குன்றீ வாற்கோ
மிகுதிறமாநீவானகுன்றதன்மாறீவ "

எனவும்,

" சதமகலா வேலவா தனதிண்டேரகல
மதியடுவாணூரவே கண்டுயிலா வாடேலா "

எனவுங் கொள்க.

இனி ஏகபாதம் (4) ஆவது, ஓரடியே நாற்காலுச்சரித்தாற் பாட்டுப் பொருள் வேறுபட்டு முடிவது. வரலாறு:

" நாணுணிறைந்த மதியாள் கலைநான்கு மொத்தாள் "

எனவும்,

" அம்புதைத்த விலங்காவித்தன் "

எனவும்,

" வாளும் வாளியுங் கோத்தெறிந்திட்டன "

எனவும்,

" சீலீமுகம்பாய்தருகுஞ்சி யாயினூர் "

எனவும்,

" களிறும் வந்தன கண்டு வந்தனரோ "

எனவும்,

" அரையர் கோனிராவண மேறினான் "

எனவும் இவற்றை நாற்காலுச்சரித்து ஏகபாத மாமாறு கண்டு கொள்க.

இனி, எழுகூற்றிருக்கை (5) யாவது ஏழறையாக்கி முறையானே குறுமக்கண் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றி யான் வழுவாமை ஒன்றுமுதலாக ஏழிறுதியாக முறையானே பாடுவது. வரலாறு:

"ஒருபொருட் கிருதுணி புரைத்தனை யொருகா
லிருபிறப் பாளர்க்கு மூவமிழ் தாக்கி
யீரறம் பயந்த வோரரு ளாழியை
யிருமலர் நெடுங்க ணரிவையர் தம்மொடு
மூவகை யுலகி னால்வகைத் தேவரு
மும்மையி னிறைஞ்சு மீரடி யொருவனை
யிருவினை பிரித்து மூவெயின் முருக்கி
நாற்கதி தவிர்த்த வைங்கதித் தலைவ
நான்மறை யாள மும்மதிற் கிழவ
விருகுண மொருமையிற் றெரிவுறக் கிளந்த
விருசுடர் மருட்டு முக்குடைச் செல்வ
நால்வகை வருணமு மைவகைக் குலனு
மாற்றி மாந்தர்க் கறிவுற வகுத்தனை
யைந்நிற நறுமலர் முன்னுற வேந்தி
நாற்பெரும் படையொடு மும்முறை வலங்கொண்
டிருகையுங் கூப்பி யொருமையின் வணங்கி
யரசர் நெருக்குறூஉ முரசுமுழங்கு முற்றத்
திருவிதிப் பிறங்கலோ டிமையவர் சொரிதலின்
முருகயர் வுயிர்க்கு மும்மலர் மாரியை
நால்வகை யனந்தமு நயந்தனை தேவரி
னைவகை விழைவு மையற வெய்தினை
யாறுபுரி கிலையுந் தேறினர்க் கியம்பினை
யெழுநயம் விரித்த திருமறு மார்பினை
யறுபொரு ளறைந்தனை யைம்பத மருளினை
நான்குகின் முகமே மூன்றுகின் கண்ணே
யிரண்டுகின் கவரி யொன்றுகின் னசோகே
யொருதன்மையை யிருதிறத்தினை
முக்குணத்தினை நால்வகையினை
யைம்பதத்தினை யறுபிறவியை
யெழகற்றிய மாதவத்தினை
யரிமருவிய மணியணையினை
வளர்கதிரொளி மண்டலத்தினை
அதனால், மாகெழு நீழற் கேவலந் தோற்றிய
யாதியங் குரிசினிற் பரவுதும்
தீதறு சிவகதி சேர்கயா மெனவே"




எனவும்,

"ஒருடம் பிருவரா யொன்றி யொன்றுபுரிந்
தீரிதழ்க் கொன்றை சூடினை மூவிலைச்
சூல மேந்தினை சுடருஞ் சென்னியிசை
யிருகோட் டொருமதி யெழில்பெற மிலைச்சினை
யொருகணை யிருதோள் செவியுற வாங்கி
மூவெயி லொற்றிசை முனையரண் செகுத்தனை
யாற்ற முந்நெறி பயந்தனை தேற்றி
யிரண்டி னீக்கி யொன்றி னொன்ற
விரண்டு மில்லோர்க்கு
முந்நெறி யுலகங் காட்டினை யந்நெறி
நான்கென வூழி தோற்றினை வாள்செலு
மைந்தலை யரவரைக் கசைத்தனை நான்முகன்
மேன்முகக் கபால மேந்தினை நூலின்
முப்புரி மார்பினை மூவா மேனியை
யிருவரை குடையா வேந்திய வாற்ற
லொருபெருங் கடவு ளொருவ னியினை
யாங்குனிற் காண
திருவரு மூவுல கியைந்துடன் றிரிதர
நாற்றிசை,
யைம்பெருங் குன்றத் தழலாய்த் தோற்றினை
யாறுனின் சடைய தைந்துனின் றுறையே
நான்குனின் வாய்மொழி மூன்றுனின் கண்ணே
யிரண்டுனின் படையே யொன்றுனின் னேறே
யொன்றியல் காட்சி யுமையவ ளடுங்க
விருங்களிற் றுரிவை போர்த்தனை நெருங்கிய
முத்தீ நான்மறை யைம்புல னடக்கிய
வறுதொழி லாளர்க் குறுதுயர் தீர்த்தனை
யேழிய லின்னரம் பியக்கினை தாழா
வாறின் னமுதம் பயந்தனை யைந்தினில்
* வீற்மா கோவை விழுத்தக வேந்தினை
யால நீழ லருந்தவர்க் கறநெறி
நால்வர் கேட்க நன்கினி துரைத்தனை
நன்றியின்,
முந்நீர்ச் சூர்மா முரணறக் கொன்றங்
கிருவரை யெறிந்த வொருவன் றுதையை
† யொருமிடற் றிருவடி வாக்கினை தரும

---

* 'வீறுயர்' என்பதும் பாடம்.

† 'ஒருமிட திருவடி வாக்கினை' என்பதும் பாடம்.

மூவகை யுலகுட னுணரக் கூறினை
நால்வகை யிலக்கண விலக்கிய நலம்பட
மொழிந்தனை யைங்கணைக் காமற் காய்ந்தனை
யறுவகைச் சமயமு நெறியுளி வகுத்தனை
யேழி னோசை யிராவணன் பாடத்
தாழாக் கேட்டவன் றலைநனி பொருந்தி
யாறிய சிந்தை யாகி யைங்கதித்
தேரொடு மற்றவன் செல்கென விடுத்தனை
நாற்றோ ணளனே நந்திபிங் கிருடியென்
றாற்றற் பூத மூன்றுடன் பாட
விருகண் மொந்தை யொருகண்கொட்ட
மட்டவிழ் கோதை மலைமகள் காண
நட்ட மாடிய நாதனீ யதனால்
மண்டிணி ஞாலத்து மன்னுயிர்க் கெல்லா
மூழி நின்னடி யேத்தி நின்றபல்
லூழியும் பொன்னுல கெய்துவர் காண்பர்
அதனால்,
அறியேன் சொன்ன வறிவில் வாய்மொழி
வறிதெனக் கொள்ளா யுலகம் வேண்டும்
வெறிகமழ் கொன்றையொடு வெண்ணில வணிந்து
கீதம் பாடிய வண்ணநின்
பாதம் பரவுதுஞ் சென்னியிற் பணிந்தே "*

எனவும் இவை எழுகூற்றிருக்கை.

இனித் தூதைதரப்பு என்பது, ஒரு பாட்டினுண் மற்றொரு பாட்டுக்கு எழுத்துளவாய்ச் சொற்புகாமே பாடுவது. வரலாறு:

"பல்லார்க்கு மீயும் பரிசிற் கொடைத்தடக்கை
மல்லார் மணிவரைத்தோள் வண்கோசன்—மல்லலந்தார்
செஞ்சொற் செருந்தைதன் றென்னுறுந்தை யென்றோளும்
வஞ்சிக் கொடிமருங்கின் வந்து."

இதனுட் போந்த செய்யுள்:

"எல்லார்க்கு நன்றும் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து" (குறள்-13-5.)

---

* இது நக்கீரர் பாடிய திருவெழு கூற்றிருக்கை. பதினோராந் திருமுறை அச்சுப்பிரதியிற் காணப்படும் பாடம் இதனின் மிகவும் வேறுபட்டுள்ளது. ஒப்பு நோக்கிக் கொள்க.

என இக்குறள்வெண்பாவின்கண் நேரிசை வெண்பாவின் எழுத்துளவாய்ச் சொற்புக்கிலாமை யெழுதித் தெரிந்துகொள்க.

(7)

இனிக், கரந்துறைப்பாட்டு என்பது: ஒருபாட்டுச் செவ்வே எழுதினால், அதனை ஈற்றுநின்று மொழிக்கு முதலாயின எழுத்துத் தொடங்கி ஒன்றிடையிட்டு எழுத்துக்கொள்ள மற்றொரு பாட்டுப் போதுவது.

வரலாறு:

" காண்க வினன் காரோர் திரைக
* நல்ல பரம்பு வாய்கா னலம்விடு
திசைசோ ரலமா போரளிக் கொருங்கு
தோலினங்கோ ளோங்குமெ மைவா யகலில
மெனுள்ளார் வார்கலைக் கூவீ வார்ந்தார்த்
தேறுநற் றுளிக்கணங் கருவிகதிர் கோளாய
தாதோர்ந் தாடுந் தோர்வதிற் றெகின்
கடவிட்டேகா காசிலெழிலிய போமே
யாடுசெவி ஞேன்ற ளானை யாடினனே"

இதனைக் கீழ்மேலாக வொன்றிடையிட்டெழுதப் போந்த செய்யுள்.

" ஆளான் விடுமே யழிசிகாட் டன்றெதிர்ந்தார்
தாளார் கருங்களிற்றுத் தார்வீக்க—வாளா
† னுலகவா மெங்கோன தோங்கொளிபோல சோதி
விலகாவாம் பல்கதிரோன் விண்"

என வந்தவாறு கண்டுகொள்க.

தூசங்கொளல் (9) என்பது: ஒருவன் ஒரு வெண்பாச் சொன்னால் அதனீற்றெழுத்தே யீறாக, அதன் முதலெழுத்தே முதலாக மற்றொரு வெண்பாவினீற்றினின்று மேற்பாடுவது.

வாவனாற்றி (9) என்பது: ஓரெழுத்துக் கொடுத்தால் அது முதலாக ஈற்றடிபாடிப் பின்னும் ஓரெழுத்துக் கொடுத்தால் எருத்தடிபாடி, மற்றோரெழுத்துக் கொடுத்தால் இரண்டாமடிபாடிப், பின்னும் ஓரெழுத்துக் கொடுத்தால் முதலடிபாடிப், பொருண்முடிய எதுகை வழுவாமற் பாடுவது.

---

* 'நல்லாயம்புபாயம்பகநலம்விடு' என்பதும் பாடம். இப்பாடம் கூறிய இலக்கணத்தோடு பொருந்தாமையறிக.

† இவ்வடியின் சரியான பாடம் கிடைக்கவில்லை.

(10)

கூடசதுக்கமாவது: நான்காமடிக்கு எழுத்து முதன்மூன்றடியுள்ளும் பெருக்கிக்கொள்ளப் பாடுவது. வரலாறு:

"கருமால் வினைகள் கையேறிச் செடிசெய்து காறடப்போ
யருமா னிரயத் தழுந்துதற் கஞ்சியஞ் சோதிவளர்
பெருமான் மதிதெறு முக்குடை நீழற் பிணியொழிக்குந்
திருமா ரிருந்தடிக் காளா யொழிந்ததென் சிந்தனையே"

எனக் கொள்க.

(11)

கோமூத்திரி என்பது: இரண்டு வரியாகவெழுதி மேலுங்கீழு மொன்றிடையிட்டு வாசித்தாலும் அதுவேயாவது. வரலாறு:

"மேவார் சார்கை சார்வாகா
மேவார் சார்கை சார்வாமா
காவார் சார்கை சார்வாகா
மேவார் சார்கை சார்வாமா"

"பரவிப் பாரகத்தார் பணியுங்கழ
லிரவி யீர்ந்தண் வலம்புரி மாலையே
விரவிப் போர்வைத் தார்துணி வெங்கழ
லிரவி யீர்ந்தண் வலம்புரி மாலையே"

என வரும்.

(12)

ஓரெழுத் தினத்தால் உயர்ந்த பாட்டு என்பது: ஓரெழுத்தினாலேயும், ஒரு சார் இனத்தினாலேயும் பாடுவது. வரலாறு:

"காக்கைக் காகா காக்கைக் காகா
காக்கைக் காகா காக்கைக் காகா
காக்கைக் காக்குக் ககாக்குக் கூக்கக்
கூகூகைக் காகக்க காக்கைக்குக் க்கை"

"தீத்தித் தாதூது தீதாதூதித் தத்துதீ
துத்ததை திதுத்து தைத்தா தூது
தித்தித் திததித் தாதூது தீதுத்
தாத்தெத் தாதோ தித்தித் தாது"

எனவுங் கொள்க.

(13)

இனி, இனவெழுத்துப்பாட்டென்பது மூன்று வகைப்படும், வல்லினமு மெல்லினமு மிடையினமும் என. அவற்றிற்குச்செய் யுள் வருமாறு:

"கற்புடைத்தாக் காட்டுதற் காகாதோ கைகாட்டிச்
சொற்படைத்துக் காட்டற்கட் டுக்கத்தாற்—பொற்புடைத்தாப்
பாட்டாற்றப் பாடிப் பறைகொட்டக் கொட்டத்துக்
கோட்டாற்றுச் சேதிகத்துக் கூத்து"

"தெறுக தெறுக தெறுபகை தெற்றாற்
பெறுக பெறுக பிறப்பு"

என இவை வல்லினத்தான் வந்த பாட்டு.

"நன்மனமு நாணமு முன்னினு நான்முன்னே
னின்மனமு னின்னுனு மென்னென்னே—நன்மனமு
நண்ணுமே நன்மாமை நண்ணுமா மெண்ணுமினே
மண்ணின்மேன் மானன்ன மா"

இது மெல்லினத்தால் வந்தது.

"வில்லாள ருள்ளாரேல் வாளிலர் வாளாளர்
வில்லாள ருள்ளாரை வெல்வாரேல்-வில்லாளர்
வல்லாள ருள்ளாரை வைவ ரவர்வயின்
வல்லாள ருள்ளார் வலி"

"வயலுழுவார் வாழ்வாருள் வாழ்வா ரயலுழுவார்
வாழ்வாருள் வாழா தவர்"

என இவை யிடையினத்தான் வந்தன.

இனிப், பாதமயக்காவது[14]: மூவர் மூன்றாசிரியவடி சொன்னால் தானோரடிபாடிக் கிரியைகொளுத்துவது. வரலாறு:

"ஈயற்புற்றத் தீர்ம்புறத் திறுத்த
கற்றேய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
நன்னாட் பூத்த † நாகிள வேங்கை
மலர்கொய லுறுவதென் மனமவண் மாட்டே"

இது பழவடி மூன்றனோடு தாமோ ரடிபாடிப் பாக்கனார் பாடிய பாதமயக்கு.

(15)

இனிப், பாவின்புணர்ப்பாவது: நால்வர் நான்கு பாவிற் கட்டுரை சொன்னால் அவையே யடிக்கு முதலாகப்பாடிப் பொருண்முடிப்பது. வரலாறு:

---

* இப்பாட்டின் முதலடி அகம்-8; இரண்டாமடி (பத்து) முல்லைப்பாட்டின் 37-வது அடி; 'நன்னாட்பூத்த நாகிள வேங்கை' என்பது அகம்-85.
† 'பொன்னிணர்' என்பதும் பாடம்.

"மலைமிசை யெழுந்த மலர்தலை வேங்கை
போத்தகத் திருந்த நெய்த்தலைத் தீந்தேன்
கண்டகம் புக்க செங்கண் மறவன்
யாழி னின்னிசை மூழ்க
வீடுகெழு பொதியி னுடுகிழ வோனே"

இது பாவுக்கொப்பப் பாடியது.

(16)
இனி, ஒற்றுப்பெயர்த்தல் என்பது: ஒரு மொழியைப் பாட்டின் இறுதிக்கண் வைத்துப் பிறிதொருபொருள் பயக்கப்பாடுவது. வரலாறு:

"நறுமாந் தளிர்மேனி நாணுருப் பிள்ளை
யுறுமாறு கொள்ளின் வருந்தும்—பெறுமாறு
வெண்ணெ யுருக்கி நறுநெய் கொடுத்தேனு
மெண்ணெய்கொண் டப்புந் தலை"

"என்னைநீ காய வெரிகதிரோ யான்பயந்த
பொன்னங் கழலான்பின் போகிய—மின்னைக்
கருதிலரே யாகிக் கருணனைக் கொன்றிட்ட
பருதிவேற் பாண்டவரைக் காய்"

"செய்துமோ பாண திருவி னுடனேர்திப்
பொய்தீர் நெடுந்தேர் புகுதக—மெய்யே
பலமுறை யாலிர வென்மா மகிழார்
குலமுறையாற் சென்றான் குறை"

இவை *பொய்கைக் கதத்தயானைச் சூழாசிரியர் பாடியன. அவர் வைத்த விரதமாவது:

"தேருடைத்தாய்க் †காமர் திணைமருதாய்த் திண்மர
மோரடியுட் பத்துட னொற்றுப்போர்த்—தேருடைய
பண்பாவு தொல்சீர் மறமன்னர் தம்முன்னால்
வெண்பா வுரைப்பான் கவி"

என வரும். பிறவுமன்ன.

---

* 'பொய்கைக் கதயானைச் சூழாசிரியர்' என்பதும் பாடம்.
† 'கற்பாய்' என்பதும் பாடம்.

(17)

ஒருபொருட் பாட்டாவது; ஒன்றனையே வருணித்துப் பாடுவது. வரலாறு:

“ மனங்கனிந் தன்ன மண்மிசைத் தோன்றிப்
பனங்கனி நிறத்த பருஉத்தாண் முழுமுத
னூர்பொதி வயிற்றி னீர்பொதி மென்மூளை
தந்துநிறத் தன்ன தோற்றமொடு கவின்பெறத்
திரித்துவிட் டன்ன திண்கெழு நுண்சுருள்
ஊழி நூழிலை யுயரிய வரைபுரை
கலிங்க மேய்ப்ப வாய நெகிழ்ந்து
வாளினங் கருக்கி னவ்வயி றழுங்கச்
சூல்சுமந் தெழுந்த செம்மூக் கணிகுலை
மூங்கர் மூக்கெனத் தோன்றியாங் கெய்தி
யலரங் கோதை யாயிழை மகளிர்
பரிசர மேய்ப்பப் பலபோது பொதுளி
நாய்சிரித் தன்ன தோற்றமோ டுடும்பின்
றோலுரித் தன்ன பூம்படு பட்டை
கிளிச்சிற கேய்க்கும் பாவையம் பசுங்காய்
இழுதி னன்ன வின்கனி யேந்தி
வாழைதன் னகலிலை மறைக்கு மூரன்
முரண்கொள் யானை முத்துப்படை யழுங்க
வரண்கொண் மாக்களிற் றோன்று நாடன்
அன்புதர வந்த வென்புருகு பசலை
தணிமருந் தறியா ளன்னை யுருவுகிளர்
அந்தளி ரென்னுமென் றடமென் றோளே”

என வரும். பிறவுமன்ன.

(18)

சித்திரத்து வென்பது. நான்கு கூடினவெல்லாம் பத்தாகவும், மூன்று கூடினவெல்லாம் பதினைந்தாகவும் பிறவாற்றானும் வழுவாது பாடுவது. வரலாறு:

“ ஒருதிரட் பிண்டிப் பொன்னெயின் மூன்றி
னீரறம் பயந்த நான்முக வண்ண
மூவகை யுலகிற்கு மொருபெருங் கடவு
ணால்வகை யோனியு ளிருவினை கடிந்து
முந்நெறி பயந்த செந்நெறி யொருவ
னால்வகை யளவையு மிருவகைப் பண்பு

மொன்ற வுரைத்த முக்குடைச் செல்வ
னீரடி பரவின ரென்ப
பேரா *நாவெறி பெறுகிற் போரே."

இஃது இணைந்து நான்கு கூடினவெல்லாம் பத்தாகிய சித்திரக்கா. இதனைச் செவ்வே நான்கு வரியு மெழுதிப் பின்னை யீறு முதலாக வெழுதுக.

"ஒருமன மாந்தர் மூவகை யுலகி
னிருமனம் பட்டு நாற்கதி யுழல்வோரே
இருமனம் பட்டு நாற்கதி யுழல்வோர்
ஒருமன மாகி மூன்றுதிரி விலரே
மூன்று திரிவறிந்து முதலொன் றறிந்தோர்
ஆன்ற நாற்கதி யிரண்டன் வரவிலரே
யான்ற நாற்கதி யிரண்டன் வரவுடையோர்
மேற்செயன் மூன்றி னொன்றுணர்ந் தோரே"

இது நான்கு புணர்ந்து கூடியவெல்லாம் பத்தாகிய சித்தரக்கா. இதனை நான்கு வரியு முறையே யெழுதிக் கண்டுகொள்க.

" இருவரமா மேழுநா ளாறமர்ந்தான் கோயி
லொருவனை நாடிய போந்தே—மொருவனு
மெண்கையான் முக்கணு னென்முகத்தா னென்பானே
டைந்தலைய நாகத் தவன்"

இஃது இணைந்து மூன்று கூடினவெல்லாம் பதினொந்தாகிய சித்திரக்கா. இதனை ஈசானன் றிசை முதலாக எட்டுத் திசைமேலும் நிறுத்தி நடுவே பின்னொந்து நிறுத்தி விடுவது. பிறவுமன்ன.

(19)

இனி விசித்திரக்கா வெண்பது: எங்கும் ஏழுறையாக எழுதி, †மேலே ஒழுங்கினுண் மொழிக்கு முதலாயின எழுத்து ஒருபொருள் பயக்க நிறுவி, அவ்வெழுத்துக்களை ஒழுங்குங் கண்ணறையும் படாமே நிறுவி, ஓரெழுத்துக்கு ஓரடியாகவானும் ஒருசீராகவானு முற்றுப்பெறப் பாடுவது. எழுத்து நிறுவுதற்கிலக்கணம், ஒருவன் பாண்டவர் யானைக்கொம்பே புள்ளித்தாய்க் கண்ணன் ஒருடு

* 'நன்னெறி' என்பதும் பாடம்

† ' இப்பகுதியின் சரியானபாடம் புலப்படவில்லை,

திசையே எனக்கொள்க. நான்காவது முதலா நான்கிறுதியாக அதன் மூன்று முதலாகமுடிவது எனவுங்கொள்க. 'அமிதபதிகவி' எனவரும். பிறவுமன்ன.

(20)

விகற்பநடையவினாவுத்தரமாவது: வினாவினார்க்கு வினாக்குறை யாகிய ஒரு மொழியும், தொடர்மொழியும் புணர்ப்பது. வர லாறு:

"பூமேலா ளாரென்பார் பூம்போர்வை யென்செய்யுந்
தீமேற் படிற்கொடுத்தாற் கொள்வதெவ—னாமே
* நலந்திகழுஞ் செங்கை நயதீர னெங்கோன்
சிலம்பின் றிருவேங் கடம்"

இது தொடர் மொழி வினாவுத்தரம். ஒருமொழி வினாவுத்த ரம் வந்துழிக் கண்டு கொள்க. இவற்றின் விகற்பமும் அறிந்து கொள்க.

(21)

சருப்பதோபத்திரமாவது: எட்டெழுத்தான் இயன்ற நான்கு வரியாம். அவை மாலைமாற்றும், சுழிகுளமுமாய் ஒருங்குவரச் சொல்வது. வரலாறு.

"நீகா வாமா மாவா காநீ
காமா வாதா தாவா மாகா
வாவா கோதா தாகோ வாவா
மாதா தாமா மாதா தாமா"

எனவும்,

"பீநீ காமா மாகா நீபீ
நீகா மாவா வாமா காநீ
காமா வாகோ கோவா மாகா
மாவா கோதா தாகோ வாமா"

எனவும்,

"மாநீ காமா மாகா நீமா
நீகா மாவா வாமா காநீ
காமா வாகோ கோவா மாகா
மாவா கோதா தாகோ வாமா"

எனவும்,

* 'நயங்கிளருந் தொல்சீர்' என்பதும் பாடம்.

" மாமா தாரீ ரீதா மாமா
மரீதீ யாகா காயா தீமா
தாயா வேடா டாவே யாதா
ரீகா டாயா வாடா காரீ"

எனவும் கொள்க.

இப்பெற்றியே எல்லாவெழுத்தும் மொழிக்கு முதலாயினவே நிறுவி, ஓரெழுத்துக் கோரடியாகப் பாடிப் பொருண் முடிப்பனவுஞ் சருப்பதோ பத்திரமெனப்படும். அவையும் வந்தவழிக் கண்டு கொள்க.

(22)

எழுத்துவருத்தனமாவது: ஓரெழுத்து முதலாக ஒன்றுதலைச் சிறந்து ஏறியவெழுத்துக்களான் முறையே பொருள்பயக்கச் சொல்லுவது.

" கூர்ப்பதனை யோரெழுத்தா லென்சொல்லுந் துய்ப்பதற்குப்
பேர்த்தெழுத் தொன்றிட்டாற் பேரென்னும்—பேர்த்தும்
பிணக்கு மெழுத்தொன்று பேர்த்துரைத்தா லென்னும்
மணத்தின் பெயர்வதுவை யாம்"

எனக் கொள்க. பிறவுமன்ன. 'சார்ந்த எழுத்து வருத்தனம்' என்று சிறப்பித்தவதனால் முன்னம் ஒரு சொல்லேயாய்ப் பின்னை முறையானே ஓரோவெழுத்து ஏறச்சொல்லப்படுவனவும் எழுத்து வருத்தனம் எனப்படும். அவை வந்தவழிக் கண்டுகொள்க.

'மற்றும் வடநூற் கடலுள், ஒருக்குடன் வைத்த வுதாரண நோக்கி, விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டே' என்பது, ஆரியம் என்னும் பாரிரும் பெளவத்துக் காட்டிய அக்கரச்சுதகமும், மாத்திரைச்சுதகமும், பிந்துமதியும், பிரேளிகையும் முதலாக வுடையன வும் இப்பெற்றியே தமிழாகச் சொல்லு மிறைக்கவிகளும் அறிந்து கொள்க, என்றவாறு. அவற்றுட் சில வருமாறு:

" நெற்பெயர தொன்றை நிறுவிக் கடைநீக்க
நற்பயத்தி னற்கால தொன்றாகும்—மற்றதன்
ஈற்றெழுத்து நீக்க வியல்புடைய நூற்செய்கை
பாற்படத் தோன்றும் பயின்று"

இஃது அக்கரச்சுதகம்; எழுத்துச் சுதகமெனவுமமையும். பாலாவி, பாலா, பா எனக் கொள்க.

" வாம மணிமே கலையார் மயிர்குறங்கி
ஞமவர் பெய்யு மணி "

எனவும்,

" வண்ணத்தி ஞென்ஞேரதி மாத்திரையிற் குன்றுமேற்
கண்ண னுமிழ்ந்த பொருள் "

எனவும் இவை மாத்திரைச்சுதகம்; அளவுச் சுருக்கம் எனவு மமையும். கூழை—குழை; நீலம்—நிலம்; எனக் கொள்க.

" மயிர்சிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பிற்
செயிர்தீர் மரமாகுஞ் சென்று "

இது பிந்துமதி என்பது. ஓதி—ஒதி.

" மெய்கொண்டே னெட்கொண்டே னெற்கொண்டேன் கொட்கொ [ண்டேன்
செய்கொண்டேன் செம்பொன்கொண் டேன் "

எல்லா வெழுத்தும் புள்ளியுடையனவே வந்தமையால் இதுவும் பிந்துமதி.

" தறியு மிரண்டு தையலா ரணியு மிரண்டு தார்வேந்தர்
அறிய வரசர் வீற்றிருக்கு *மணையு மிரண்டொன் றுடையராய்ச்
செறிய வல்லான் றேய்த்தமையாற் செழும்பூச் சோலை தாமுடையர்
வெறிகொ டொண்டை யார்வேந்த னவையுள் விரவா ரொருவரே"

இது பொத்தகம் பிரேளிகை. பிறவுமன்ன.

'விரித்துமுடித்த மிறைக்கவிப்பாட்டு' என்று சிறப்பித்தவதனால் நிரோட்டி பாடுதலும், அலகிருக்கை வெண்பாப் பாடுதலும், முண்டப்பாட்டு வாசித்தலும், தேர்கையும், திரிபாகியும், துண்டகட்டும், கல்லவலும் முதலாக வுடையனவும் அறிந்துகொள்க.

அவற்றுள் நிரோட்டியாவது:

" ஆறிரண்டா மாவியு மையிரண்டா மாவியு
மாறிகந்த உவவு மோனமுங்—கூறில்
வகர பகரமஃகான் வந்தணையாச் செய்யு
ணிகரி னிரோட்டி யெனல்"

* 'அணியும்' என்றும் பாடமுண்டு.

வரலாறு:

"ஆர்கலிநீர் ஞாலத் தலந்தார்கட் காற்றலாற்
காரெழிலி நாணக் கலந்ததே—சீர்சான்ற
சண்டர சண்டன் சனந்தாங்கிச் சங்கையார்
கண்டர் கண்டன கை"

பிறவுமன்ன.

தேர்கையாவன: குறைத்தலைப் பிணங்கண் கொவிப்பல்லன், என்ருன் என்பதும், குதிரைபட்டநிலமிதுவெனச் செத்தது பெட்டைக்குதிரை என்ருன் என்பதும முதலா வுடையன. விரலும், கண்டமுங் கண்டறிந்தான் என்பது. பிறவுமன்ன.

திரிபாகியாவது: மூன்றெழுத்தாய் ஒன்றின் பெயராய், முதலும் ஈறும் ஒன்றின் பெயராய், இடையும் ஈறும் ஒன்றின் பெயராயினவென்று வாயின்வாசகஞ் செய்வது, நிறுவுவதுமாம். பாதிரி, என நிறுத்தி, பாதிரி, பாரி, திரி என்றவிழ்ப்பது. பிறவுமன்ன.

கண்ட கட்டு என்பது: பசுக்கொண்டு போதென்று சொல்லப் போயினுன், சென்று கண்டு மீண்டுவந்து அவையுள்ளாயினவென்னிற் போதாவாயினவென் றவிழ்ப்பது. பிறவுமன்ன.

கல்லவலாவது: நாடறிசொற்பொருள் பயப்பப் பிழையாமை வாசகஞ் செய்வது. வரலாறு:

"மனையிற்கு நன்று முதுபோக்குத் தீது
முதுபோக்கே யன்று பெருமூர்க்குத் தீது"

என்பது.

'உருவகமாதி விரவியலீரு வருமலங்காரமும்' என்பது: | உருவகமும், | உவமையும், | வழிமொழியும், | மடக்கும், | தீபகமும், | வேற்றுமை நிலையும், | வெளிப்படைநிலையும், | நோக்கும், | உட்கோளும், | தொகைமொழியும், | மிகைமொழியும், | வார்த்தையும், | தன்மையும் | பிறபொருள் வைப்பும், | சிறப்புமொழியும், | சிலேடையும், | † மறுமொழியும்,

* 'கண்டர கண்டன்றன் கை' என்பதும் பாடம்.

† 'மறுத்து மொழிநிலை' என்பதும் பாடம்.

உடனிலைக்கூட்டமும், நுவலாநுவற்சியும், உயர்மொழியும், நிதரிசன மும், மாறாட்டும், ஒருங்கியன்மொழியும், ஐயமும், உயர்வும், விரவிய லும், வாழ்த்தும் என்றோதப்பட்ட அலங்காரங்களும் என்றவாறு. அவை அணியியலுட் கண்டுகொள்க.

வாழ்த்து இரண்டு வகைப்படும், மெய்வாழ்த்தும், இருபுற வாழ்த்தும் என.

வரலாறு:

"கார்நறு நீலங் கடிக்கயத்து வைகலும்
நீர்நிலை நின்ற பயன்கொலோ—கூர்நுனைவேல்
வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியார்
கொண்டிருக்கப் பெற்ற குணம்"

இது மெய் வாழ்த்து.

இனி, இருபுற வாழ்த்து வருமாறு:

"பண்டு மொருகாற்றன் பைந்தொடியைக் கோட்பட்டு
வேங்கடம் வில்லேற்றிக் கொண்டெழுந்தான்—றெண்களந்தைப்
பூமான் றிருமகளுக் கின்னும் புலம்புமால்
வாமான்றேர் வையையார் கோ"

இஃது இருபுற வாழ்த்து.

வசையும் இரண்டுவகைப்படும், மெய்வசையும் இருபுறவசையும் என.

வரலாறு:

"தந்தை யிலைச்சுமடன் *றாய்தொழிலி தான்பார்ப்பான்
எந்தைக்கி தெங்ஙனம் பட்டதுகொன்—முந்தை
அவியுணவி னோர்தெரியின் யாவதாங் கொல்லோ
கவிகண்ண னார்தம் பிறப்பு"

இது மெய்வசை.

"படையொடு போகாது நின்றெறிந்தா னென்றுங்
கொடையொடு நல்லார்கட் டாழ்ந்தான்—படையொடு

* 'தாய்தோழி' என்பதும் பாடம்.

பாடி வழங்குந் தெருவெல்லாந் தான்சென்று
கோடி வழங்கு மகன்"

இஃது இருபுறவசை.

'கவியே கமகன் வாதி வாக்கியென் றவர்க டன்மையும்' என்பது: கவியும், கமகனும், வாதியும், வாக்கியும் என்று இந்நால்வரது தன் மையும் என்றவாறு.

அவருட் கவி என்பார் நான்கு வகைப்படுவர், ஆசுகவியும், மதுர கவியும், சித்திரகவியும், வித்தாரகவியும் என. அவ்வரைக் கடுங்கவி: இன்கவி, அருங்கவி, பெருங்கவி என்று வேண்டுவாரும் உளர்.

ஆசுகவி யாவான், தொடுத்த பொருளும், தொடுத்த சூழலும், அடுத்த தொடையும் வழுவாமாற் கடுத்துப் பாடுவான்.

மதுரகவி யாவான், சொற் செல்வமும் பொருட் பெருமை யும் உடைத்தாய்த் தொடையும் தொடைவிகற்பமுந் துதைந்து உருவகமுதலாகிய அலங்காரங்களை யுட்கொண்டு ஓசைப் பொலி வுடைத்தாய் உய்த்துணரும் புலவர்கட்கு ஒலிகடலமிழ்தம்போன்று இன்பம் பயக்கப் பாடுவான்.

சித்திரகவி யாவான், மாலைமாற்று முதாலகிய அருங்கவி பாடு நன்மையையுடையான்.

வித்தாரகவி யாவான், மும்மணிக் கோவையும், பன்மணிமாலை யும், மறமும், கலிவெண்பாவும், மடலூர்ச்சியு முதலாகிய நெடும் பாட்டும், கோவையும், பாசாண்டமும், கூத்தும், விருத்தமும், கதை முதலாகிய செய்யுளும், இயலிசை நாடகங்களோடுங் கலைநூல்களோ டும் பொருந்தப்பாடும் பெருங்கவி எனக்கொள்க.

ஒழிந்த விகற்பங்கள் கவிமயக்கறையுள்ளும், பிறவற்றுள்ளுங் கண்டு கொள்க.

இனிக் கமகனவான் பலநூல்களது வகைமையாலும், மதியது பெருமையாலும் கல்லாத நூல்களையுங் கற்றோர் வியப்ப உய்த்துரைக் குங்கருத்துடைய புலவன் எனக்கொள்க.

வாதியாவான், மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டும் நாட்டி அளவைசெய்து, தன்கோணிறீஇப் பிறன்கோண்மறுப்பான் எனக் கொள்க. வரலாறு:

நிலைபேறில்லை சொல், செயப்படுதலால்; குடம்போல: என்பது நிரலே மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டும் ஆயின. நிலைபே றில்லை சொல் என்பது மேற்கோள்; செயப்படுதலால் என்பது ஏது; குடம்போல என்பது எடுத்துக்காட்டு.

நிலை பேறுடைத்துச் சொல், செயப்படாமையால்; ஆகாயம்போ லும்: என்பதும் ஓரளவை. 'அளவை' எனினும் 'பிரமாணம்' எனி னும் ஒக்கும்.

இனி, வாதம் என்பது வாதமும், சலவாதமும், விதண்டா வாதமு முதலாகப் பலவென்று எடுத்தோதுவாருமுளர்.

இனி, வாக்கியென்பான் அறம்பொருளின்பம்வீடுகண்மேற் கேட்க வேட்கைபிணிக்கச் சொல்லுமாற்றல் உடைய ஆசிரியன் எனக் கொள்க.

அவையினதமைதியும்' என்பது அவையோரது தன்மையும் என்றவாறு. அவைதாம் நான்குவகைப்படும்; நல்லவையும், தீயவை யும், குறையவையும், நிறையவையும் என. என்னை?

" அவையெனப் படுமவை யரிறபத் தெரியி
னல்லவை தீயவை குறையவை நிறையவை
யெனச், சொல்லுப வென்ப தொல்லை யோரே"

என்பவாகலின்.

" அவற்றுள்,
நல்லவை யென்பது நாடுங் காலை
யெத்துறை யானு மிருவரு *மியம்பும்
அத்துறை வல்லோ ரறனொடு புணர்ந்தோர்
மெய்ப்பொருள் கண்டோர் மிக்கவை யோர்ப்போர்
கற்றவர் கல்விக் கடாவிடை யறிவோர்
செற்றமுஞ் சினமுஞ் சேரா மனத்தோர்

* 'மொழியும்' என்பதும் பாடம்.

முனிவொன் றில்லோர் மூர்க்க ரல்லோர்
இனிய முகத்தோ ரிருந்துரை கேட்போர்
*வேந்த னொருவற்குப் பாங்கு படினும்
தாந்தா மொருவர்கட் பாங்கு படாதோர்
அன்னோர் முன்னரக் கூறிய பொழுதிற்
றொலைவு மாயினுந் தொலைவெனப் படாது
வெல்லு மாயினு மிகச்சிறப் புடைத்தே''

எனக் கொள்க.

'' தீயவை யென்பது தெரியுங் காலைச்
சலாவுஞ் சுண்டுந் தாமேற் கொண்டு
சிலவாப் பொருள்களைக் குலவி யெடுத்தாங்
குரைத்த வொருவற்காய்ச் செருவென மொழிந்து
சொல்லிய துணரா தல்லவை யுணர்ந்து
வாரம் படுவது தீயவை யாகும்''

எனக் கொள்க.

'' நிறையவை யென்பது நினையுங் காலை
யெல்லாப் பொருளுந் தன்னகத் தடக்கி
'' யெதிர்வரு மொழிகளை யெடுத்துரைப் பதுவே''

எனக்கொள்க.

'' குறையவை யென்பது கூறுங் காலை
நிறைவில் சொல்லே நினைந்தவை யெடுப்ப
வரைபு மென்ப வாணையி னிகந்தே''

எனக் கொள்க.

'' தொலைவெனப் படுபவை சொல்லுங் காலை
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
பொருளில கூறன் மயங்கக் கூறல்
கேட்போர்க் கின்னா யாப்பிற் றாகிப்
பழித்த மொழியா னிழித்துக் கூறல்
தன்னா னொருபொருள் கருதிக் கூறல்
இன்னா வகையின் மனங்கோ ளின்மை
அன்னவை பிறவு மவற்றினெறி யாகும் ''

* 'வேந்த னொருவர்தண் வாரம் படினும்' என்பதும் பாடம்.

எனக் கொள்க.

'பாடுதன் மரபு' என்பது, குலனும், விச்சையும் ஒழுக்கமும் பருவமும் என்றிவற்றிற்குத் தக்க வகையாற் பாட்டுடைத் தலைமக னையும் அவன் சின்னங்களையுமே பாடுதலும் கிளவிப்பொருளல்லவற் றோடு பாட்டுடைத் தலைமகனைப் பெயரும் ஊரும் முதலிய வுறுப்பு களைச் சேர்த்திப் பாடுதலும், தீயனவற்றை அவன் பகைவரைச் சார்த்திப்பாடுதலும் என இரண்டாம். அவையெல்லாம் பெரியமுப் பழம் முதலாயினவற்றுட் கண்டு கொள்க.

'தாரணைப் பகுதியும்' என்பது: தாரணை விகற்பங்களும் என்ற வாறு. தாரணை விகற்பங்களாவன நாமதாரணையும் அக்கரதாரணை யும், செய்யுட்டாரணையும், சதுரங்கத்தாரணையும், சித்திரத்தாரணை யும், வயிரத்தாரணையும், வாயுத்தாரணையும், நிறைவுகுறைவாகிய வெண்பொருட்டாரணையும், வச்சிரத்தாரணையும் முதலாயினவற்றை உருவக்கரசங்கேதங்களால் இடம்படவறிந்து தரித்து, அனுலோம மாகவும், பிரதிலோமமாகவும் பிறவாறுகவுஞ் சொல்லுவது. அவை யெல்லாந் தாரணைநூலுட் கண்டு கொள்க. சதுரங்க அறையில் உருவு களை உருவக்கர சங்கேதங்களால் திரித்துக் குதிரையடியாகவும், குதிரையும் யானையுமாகவும் பாய்ந்து வருவதற்கு இலக்கணம் வரு மாறு:

" கடிகம ழிலைமலர் சீரிதழ்த் தாமரைப்
பனிமலர் வாட்டிய மீமிசை சிகரி
னூபுரமிக வூன்றலின் மேலொளி நெருங்கிய
சேண்விளங் கெழிலடி குறுகுதுர் தூசிறப்
பெருமலர் வேங்கையு மூங்கிலு நடங்கிப்
பிணியவிழ் வித்த மாத்த ணறவமும்
சாந்தமு மகிலுங் கிளர்ந்து தீங்கனிச்
சூரலு முகிரலுங் கெழுமித் தேறிய
நூலவர் பேணும் வெட்சியு முறித்தை
விரைமலர் மகிழு நாகமும் பீடுடைத்
திருவுஞ் சகமலி யாதி கீர்த்தி
யூனமில் கேள்வியிற் றெளிந்து சுரும்பிவர்
நீடிணர்ப் பாசிலை வடுமா மிசைமிக
வுருகெழு * மென்கனி நேரே பூசணித்

* 'மென்கணம்' என்பதும் பாடம்.

துகளறு செங்கா யெங்கெனக் கூறி
யீண்டிய காதலிற் றடவிய சிறுநுதற்
பெருமதர் மழைக்கட் செவ்வாய்ப்
புரிகுழ லியக்கியர் பொதிபெறற் பொருட்டே"

இந்நேரிசையாசிரியம் வேண்டியதோ ரறை முதலாக வாயினும், வேண்டியதோர் அறை யீறாகவாயினும் பாய்த்துவது. சிறுநுதலவரைப் பாய்த்த அறுபத்துநாலு வெங்குதிரை வரும்.

இனிக், குதிரையும் யானையுமாகப் பாய்த்துமாறு:

"செங்கை யுந்திச் சீர்மலி யாரம்
கீழணி தாழ்பொழில் கண்ணகன் திண்ணிலஞ்
சகமலி யிருவினைச் சார மீரம்
சித்திர மத்திரங் கிளரொளி தளரகிற்
கார்மழை தீரணி நான்மறை மீனுரு
வாடை பீடை வித்தா பத்தா
நிலமும் மலையும் பிரமனு மவர்மணி
மிகவு நகுமதி மாரி நீரில்
பார வீரர் புள்ளி வெள்ளை
முத்தி நெய்த்த நூலோர் மேலோர்
பேரா வீழி பெரிய வுருவுடை
பூதிய வேதன் மூரி தோன்ற
மெய்மை நுண்மை தெள்ளிய குருபரன்
எந்தையன் சுந்தர னூரன் சேரன்
தாசன் கேசவன் சூழ்பொழி வேழணி
கூறிய நேர்வு கெழுமிய துத்தி
சீரிய கரிபரி *தெளிந்தனன் றெளிந்தே"

இதனடைவே கரியும் பரியும் வேண்டியதோ ரறை முதலாகவும், வேண்டியதோ ரறையீறாகவுந் துதித்து வரைய அறுபத்து நாலும் வரும்.

இனி, இவற்றைச் சிறுநுதல் கடிகமழ் பெருமதர் மழைக்கண், துதித்துச் செங்கை சீரிய கரிபரி, எனமாறியும் படிக்கக் கடிதின் உதவும். அறைகட்கு எழுத்து நிறுத்துவதற்கு இலக்கணம்.

* 'தெரிந்தனன்' என்பதும் பாடம்.

" அன்னங் கழிசங்கு தத்தை நகர்பறவை
மன்னன் வலம்புரியோ டெட்டு"

" அன்ன மொன்றுங் கழியிரண்டா மணிநீர்ச் சங்க மொருமூன்றுந்
தண்ணந் தத்தை யீரிரண்டாந் நகைசா னகர மைந்தாகும்
பன்னும் பறவை யிருமூன்றும் பழிதீர் மன்ன னேரேழாம்
மன்னு மொழியாய் வலம்புரியேன் மருடீ ரிருநான் காகுமே"

எனக் கொள்க.

இவற்றை நிரலே அ, க, ச, த, ந, ப, ம, என வணிந்து அந்த அறைகளில் ஏகார வெழுத்தளவெதிர் நடாத்த அறுபத்து நாலறைக் கும் எழுத்துக்களாம்.

ஆனந்தம் ஆறுவகைப்படும். எழுத்தானந்தமும், சொல்லானந் தமும், பொருளானந்தமும், யாப்பானந்தமும், தூக்கானந்தமும், தொடையானந்தமும் என.

" உறுபுகழ் மரபி னுயர்ந்தோர் கூறிய
வறுவகை மரபின வானந் தம்மே"

" அவைதாம்,
இயனெறி திரிந்த வெழுத்தா னந்தமும்
சொன்னெறி வழீஇய சொல்லா னந்தமும்
புகழ்ச்சிநிலை திரிந்த பொருளா னந்தமும்
யாப்புநிலை திரிந்த யாப்பா னந்தமும்
தூக்குநெறி திரிந்த தூக்கா னந்தமும்
தொடையறி புலவர் நாடின ரிவையே"

அவற்றுள் எழுத்தானந்தமாவது—பாடப் படுவோன் பெய ரைச் சார்த்தி எழுத்தளபெழப் பாடுவது. என்னை?

" இயற்பெயர் சார்த்தி யெழுத்தள பெழினே
இயற்பா டில்லா வெழுத்தா னந்தம்"

என்றாராகலின். வரலாறு:

" ஆழி யிழைப்பப் பகல்போ *மிரவெல்லாம்
தோழி துணையாத் துயர்தீரும்—வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ வென்னும்
செறுமாலை சென்றடைந்த போது"

* 'இரவரில்' என்பதும் பாடம்

இது பொய்கையார் வாக்கு. இதனுள் 'திரையவோஓ' என்புழி இயற்பெயர் சார்த்தி எழுத்தளபெழுந்தமையான் எழுத்தானந்தம்.

இனிச் சொல்லானந்த மாவது—இயற்பெயர் மருங்கின் மங்கல மழியத் தொழிற் சொல்லைப் பாட்டுடைத்தலைமகன்மேல் ஏறப் பாடுவது. என்னை?

" இயற்பெயர் மருங்கின் மங்கல மழியத்
தொழிற்சொற் புணர்ப்பின து சொல்லா னந்தம்"

என்றாராகலின். வரலாறு:

" என்னிற் பொலிந்த திவண்முக மென்றெண்ணித்
தன்னிற் குறைபடுப்பான் றண்மதிய—மின்னி
விரிந்திலங்கும் வெண்குடைச் செங்கோல் விசயன்
எரிந்திலங்கு வேலி னெழும்"

இதனுண் மதியை விசயன் வேல்போல் எழும் என்பான், 'விசயன் எரிந்து' என அத்தொழில் அவன்மேல் ஏறச்சொன்னமையாற் சொல்லானந்தம்.

பொருளானந்த மாவது—பாட்டுடைத் தலைமகன் நாட்டின் யாதானு மொன்றனைச் சிறப்பித்துச் சொல்லலுற்றவிடத்து அத்திணைக்குரிய இறைச்சிப்பொருளை யூறுபடச் சாவவுங் கெடவுஞ் சொல்லுவதூஉம், புகழ்தலுற்ற விடத்து ஆகாதபெற்றியின் மங்கல மழியச்சொல்லுவதூஉம், மங்கலமாகிய உவமையான் மங்கலமில்லாத உபமேயத்தை உவமிப்பதூஉம், தலைமகனோடு உவமிக்கப்பட்டதற்கு இடையூறுபடச் சொல்லுவதூஉம் முதலாகவுடையன எனக் கொள்க. என்னை?

" இறைச்சிப் பொருளை யூறுபடக் கூறினும்
புகழ்ச்சிக் கிளவியிற் பொருந்தா வாயினும்
உவமைக் காட்சியி னானந் தோன்றினும்
இவையல பிறவு மின்னன வரினே
அவையென மொழிப பொருளா னந்தம்"

என்றாராகலின். வரலாறு:

' முறிமே யாக்கைதன் கிளையொடு துவன்றிச்
சிறுமை யுற்ற களையாப் பூசல்" (பத்து-மலைபடு-313, 314.)

என மலைபடுகடாத்துக் கூத்தரை யாற்றுப் படுப்பான் நீர் போம் வழியுள் இன்னவும் இன்னவும் ஏதங்களாவன; அவற்றைச் சாராதே போமினென்பான் குரங்கு ஒரு வரைமேலிருந்து வழுவி யொரு விடரகம்புக்கு விழுந்தது கண்டு, மற்றைக் குட்டியுந்தாயும் விடரகம்புக்கு வீழ்ந்தன; வீழக் குரங்குகள் எல்லாம் அவற்றுக் கிரங்கியழுது பெரியதோர் ஆர வார மெழுந்தது; அவ்வரையை யொருவிப் போமின் என்றான். அவன் மலைக்குரிய இறைச்சிப் பொருளாகிய குரங்கிற்கு இடையூறு சொன்னமையால் இது பொரு ளானந்தம்.

> "கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ
> விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத்
> திலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்ற" (பத்து-மலைபடு-44-46.)

என்பது, பீலிவிரித்துப் பல மயிலிருந்தாற்போல வழி வந்து அசைந்த வருத்தத்தாற் றத்தங் கேசங்களை யெடுத்து முடிக்ககில் லாது விரித்திருப்பர் அவர் மலைமேல் வழிபோங் கூத்தப் பெண்டிர் என்று புகழ்தலுற்றான். பெண்சாதிகள் ஊறுபட்டு அழுகை நிகழ்ந்த விடத்து மயிர்விரித்திருப்பார்; அவ்வகை மங்கல மில்லாத மயிர் விரியை அவன் நாட்டோடும் புகழ்ந்தமையான் இதுவும் பொருளா னந்தம்.

> "பெயலொடு வைகிய வியன்க ணிரும்புனத்
> தகலிரு விசும்பி னூஅல் போல
> வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை" (பத்து-மலைபடு-99-101.

என்பது, நாடுபுகழ்தலுற்றான் மற்று மங்கலமுளவாகவைத்து வானத்துள் துறுமித்தோன்றுங் கார்த்திகைமீனொடு கடைப்பட்டா தின்னும் அடகாகிய முசுண்டையின் பூவை யொப்பித்தமையால இஃது உவமக்காட்சியுள் ஊனந்தோன்றிய ஆனந்தவுவமை.

> "திண்டேர் வயவரைச் சேவைவென் றானன்ன தேங்கவுண்மா
> வண்போ தமன்ற வழைகிழ னீக்கிய வார்சிலம்ப
> நண்போ வினையிற்பொல் லாதது நிற்கவென் னன்னுதலாள்
> கண்போற் குவளை கொணர்ந்ததற் கியாதுங்கைம் மாறிலமே"

இதனுள் தலைமகனோடு உவமிக்கப்பட்ட யானையைத்துரந்தானென ஊறுபடச் சொன்னமையான் இதுவும் உவமக்காட்சியில் ஊனந்தோன்றிய வானந்தவுவமம்.

"*வள்ளெயிற்றுப் பேழ்வாய் ஞமலிக்கு மான்குழா
மெள்ளி யிரிந்தாற்போ லெவ்வழியும்—வள்ளற்கு
மாலார் கடலன்ன மண்பரந்த வாட்டானை
மேலாரு மேலார் விரைந்து"

இதனுட் புலியினோடு உவமிக்கப்படுகின்ற தலைமகனாகிய வீரனோடு நாயை உவமித்தமையால் இறப்பஇழிந்த வானந்த வுவமை.

"இந்திரனே போலு மிளஞ்சாத்தன் சாத்தற்கு
மந்தரமே *போன்றிலங்கு மல்லாக—மந்தரத்துத்
தாழருவி போன்றுளது தார்மாலை யம்மாலை
யேழுலகு நாறு †மிணர்"

இதனுட் கீழ்மகனாகிய சாத்தனைக் குலமன்னரை உவமிக்கற்பாலனவற்றோடு அவனுக்குப் பரிக்கலாகாமை யுவமித்தலின் இறப்பவுயர்ந்த ஆனந்தவுவமை.

"சென்றுபடு பருதியிற் சிவந்த தோற்றத்தை"

இதனுட் படுஞாயிற்றுக்கு உவமையாகக் காட்டலின் இறந்துபாட்டுவமையானந்தம்.

"தீயி னன்ன வொண்செங் காந்தட்
டூவற் கலித்த புதுமுகை யூன்செத்
தறியா தெடுத்த புன்புறச் சேவல்
ஊஉ னன்மையி னுண்ணா துகுத்தென
நெருப்பி னன்ன பல்லிதழ் தாஅய்
வெறிக்களங் கடுக்கும் வியலறை தோறும்"(பத்து-மலைபடு-145-150.)

இதனுள் தீப்போலா முருவந்தோன்றுஞ் செங்காந்தட்பூவினை ஊன் என்று கருதி அறியாது எடுத்த பருந்து காலானிடுக்கி வாயிற்

* 'போன்றதெங்கும்' என்பதும் பாடம்.
† 'இனிது' என்பதும் பாடம்.

குத்தி ஊனன்மையின் கைவிட்டது என்று காந்தட்பூவினது சிவப்பினைக் குணனேறச் சொல்லுவான், அவாவிச்சென்றது கொண்டு அவாவிய தன்மையால் விட்டது என்று பரிசிற்கவி, அவாவியகவியை அவாக்கெடக் கூறினமையின் இது பரிசிற் பொருளானந்தம்.

யாப்பானந்தமாவது—முன்தொடுக்கப்பட்ட சிறப்புடைமொழியின் பின்னர்ப் பாட்டுடைத் தலைவன் பெயர்நிறீஇ, அதன் பின்னே சிறப்புடைமொழிநிறீஇச் சிறப்பிக்கப்படுவதனை இவ்வாறிடர்ப்படப் பாடுவது. என்னை ?

" முதற்றொடை மருங்கின் மொழிசிறந் தொருபெயர்
இடைப்படுத் தவ்வழி *யிடுஞ்சீர்ப் படினே
வாய்ப்ப நோக்கி வல்லோர் கூறிய
யாப்பா னந்தமென் றறியல் வேண்டும்"

என்றாராகலின். வரலாறு:

" ஊகத்தி னன்மல்கு சோலை யுளிய னுயர்வரைவாய்
மேகத்தி னுலுமின் னலு மிகவு மெலிந்துரைத்த
ஆகத்தி னேற்கரு ளாயென் பணியு மைவாயெயிற்றி
னாகத்தி னன்மால் கடைந்திடப் பட்ட நளிகடலே"

எனக் கொள்க.

தூக்கானந்த மாவது—கஞ்சத்தாள முதலாகிய கருவிகளோடும் இசைந்த இசைக்கீழ்ப் பாடுதற்கண், அவன் பெயரைச்சார்த்தி உயரவும், இறுகவும், பெயர்பிளந்து பண்ணியும், ஒருவர்க்கும் பெயர் புலனாகாமையுஞ் சொல்லுதல். என்னை?

" தாழா மரபினர் யாழொடு புணர்ந்த
பாவகை யொருவனைப் பாடுங் காலைத்
தொல்வகை மரபி னவன்பெயர் தோற்றி
யேங்கினு மிடுங்கினு மெழுந்துபிரிந் திசைப்பினுந்
தூங்கினுங் குழறினுந் தூக்கா னந்தம்"

என்றாரா்கலின். அவற்றிற் கிலக்கியம் வந்தவழிக் கண்டுகொள்க.

தொடையானந்த மாவது—அளபெடைத் தொடைப் பாட்டினுட் பாட்டுடைத்தலைவன் பெயர்சார்த்தி அளபெடுப்பத் தொடுப்பது. என்னை?

* 'இருசீர்ப்படினே' என்பதும் பாடம்,

"அளபெடை மருங்கிற் பாடப் படுவோன்
பெயரொடு தொடுப்பிற் பெற்றியில் வழுவாத்
தொடையா னந்த மெனவே துணிக"

என்றாராகலின். வரலாறு:

"வாஅம் புரவி வழுதியோ டெம்மிடைத்
தோஒ றுவவுமிவ் வூர்"

இதனுட் புரவிவழுதி யென்று அடைப்பெயர் சார்த்தியளபெடுப்பத் தொடுப்பினுந் தொடையானந்தம்.

"வாஅ வழுதி மதுரை மறுகினிற்
போஒ பகைமுனைப் போர்"

இஃது அடையடாமையின் மிக வழு.

இனி, ஆனந்தப்பையுள் என்பதும் ஒன்றுண்டு. அஃதாவது, களவினுளாயினும், கற்பினுளாயினும் தலைவனும் தலைவியுந் தம்மிற் பிரிந்துழிப் பிரிவாற்றாது கையறு துயரமொடு காட்சிக்கு அவாவி மெய் மெலிவுற்று அழிவுழியிரங்கிப் பாட்டுடைத் தலைவனது நாடானும் ஊரானுங் குறித்து அவனூர்மேல் அன்றில் ஏங்கினும், குயில் கூவினும், ஆயர்குழலிசை கேட்பினும், ஏற்றின் மணிக்குரல் கேட்பினும், அவனுடு சூழ்ந்து கிடந்து அவளேங்கினும், என்னுயிர் கழியும் என்று இவ்வாறு கூறினும், அவனூரனையாள் நாடனையாள் உயிர்கழிகின்றதெனினும், பிறவாற்றானும், குணமேம்பட்டன ஊருநாடும் பார்த்துச் சார்த்திக் கூறினும், உவப்பினும் அவை ஆனந்தப்பையுள். என்னை?

"களவினுங் கற்பினுங் கலக்க மில்லாத்
தலைவனுந் தலைவியும் பிரிந்த காலைக்
கையறு துயரமொடு காட்சிக் கவாவி
எவ்வமொடு புணர்ந்து நனிமிகப் புலம்பப்
பாடப் படுவோன் பதியொடு நாட்டொடு
முள்ளுறுத் திறினே யுயர்கழி யானந்தப்
பையு ளென்று பழித்தனர் புலவர்"

என்று எடுத்தோதினார் அகத்தியனார். அவற்றுக் கிலக்கியம் வந்துழிக் கண்டுகொள்க.

இனி, மாபுராணமுடையார் கூறுமாறு: விகார மாத்திரையாகிய உயிரளபெடையும், கான்மாத்திரையாகிய வொற்றும் பாட்டுடைத்தலைமகன் பெயருக்கும் அவன் பெயர்க்கு அடையாகிய சொற்கண்ணும் புணர்ப்பிற் குற்றம் என்றார். என்னை?

> "கழிநெடி லசையுங் காலெழுத் தசையும்
> பெயரயற் புணர்ப்பினும் பெயரிடைப் புணர்ப்பினும்
> வழுவென மொழியு மாபு ராணமே"

என்பவாகலின்.

அவர் உதாரணம்:

> "மன்னும் வழுதி வருமருங்கு நின்றுளென்
> றின்னு முரைக்குமிவ் வூர்"

என்பதனுள் விகார மாத்திரையாகிய கான்மாத்திரையாய் மகர வொற்றுப், பெயர் அருகு வரலின் வழு. "வழுதிவா அம்புரவிக் கிவ்வூர்" என்பதனுள் விகாரமாத்திரையாகிய உயிரளபெடையை வழுதி என்னும் பெயர்க்கடையாகிய புரவிக்குப் புணர்த்தலின் வழு.

இனி, இசையானந்தம் ஒன்று. அஃதாவது, அவல முற்றிருந் தோர்க்கு இசையாகிய பஞ்சமமும், குறிஞ்சியும், பியந்தையும், பாலையாழும், காந்தார பஞ்சமமும், இவற்றொடு பியந்தையாழும், தலைவனைப் புகழ்ந்த பாடாண்பாட்டிற்கும் இசையாகிவரப் புணர்ப்பது இசையானந்தம் எனப்படும். என்னை?

> "சிறையழி துயரொடு சிந்தையிற் பிரிந்த
> கவலை கூர்ந்த கருணைக்குப் பெயரே
> அவல மென்ப வறிந்திசி னோரே"

> "அவல மென்பதற் கிசையெனப் படுவது
> குறிஞ்சி புறநிலை பியந்தை யென்றார்
> பரந்த விகற்பிற் பாலை யாழே
> கருதிய கற்பிற் காந்தார பஞ்சமம்
> இசையா னந்த மென்மனார் புலவர்"

என்றாராகலின்.

பாட்டுடைத்தலைவனையே கிளவிப்படக் கிளவித்தலைவனாகக் கூறுவதூஉம் ஆனந்தமெனக் கொள்க. என்னை?

"உருவி யாகிய வொருபொருங் கிழவனை
யுருவி கூறுத லானாந் தம்மே"

என்றாராகலின்.

'ஆனந்த முதலிய வூனமும்' என்றதனாற் பிரிபொருட்டொடர் மொழி முதலியகுற்றங்களும் மறுவாராமற் புணர்க்கப்படும். அவை,

"பிரிபொருட் டொடர்மொழி முரண்மொழி யெனாஅ
வொருபொருண் மொழியே யையமொழி யெனாஅ
முறைபிறழ் வைப்பே சொல்வழு வெனாஅ
யாப்பின் வழுவே நடைவழு வெனாஅப்
பொருளின் வழுவே புணர்ப்புவழு வெனாஅக்
கலையொடு மலைவே காலமலை வெனாஅ
வுலக மலைவே யிடமலை வெனாஅ
மேற்கோண் மலைவே யேதுமலை வெனாஅ
வெடுத்துரை மலைவே நூன்மலை வெனாஅ
விருநான் கடுத்த வீரைம் புறவு
முய்த்துணர் மொழியே யொட்டுப் பிரிமொழியே
பிறிதுபடு மொழியே பிசிபடு மொழியே
யுத்தி மறுதலை யெனவரூஉ மிவையு
மிடக்க ரிசையவு மிடக்கர்ப் பொருளவு
மிடக்கர்ப் படவரூஉஞ் சந்தி யிசையவும்
இன்னா விசையவு மெனவெடுத் திவற்றொடு
முன்னாக் கூறிய பிறழ்வுந் தொகைஇ
ஏழுடை யிருபா னூன நீக்குபு
பாட வல்லோன் கவிஞ னன்றேல்
அடங்காப் புதல்வற் பயந்த பரத்தையிற்
புறஞ்சொற் பெறூஉம் புலவ ரானே"

எனக் கொள்க.

இனிச் செய்யுளாவன:

"செய்யு டாமே மெய்பெற விரிப்பிற்
றனிநிலைச் செய்யுட் டொடர்நிலைச் செய்யுள்
அடிபல தொடுத்த தனிப்பாச் செய்யுள்
உரையிடை மிடைந்த பாட்டுடைச் செய்யுள்
இசைநுவன் மரபி னியன்ற செய்யுள்

நயனிலை மருங்கிற் சாதியொடு தொகைஇ
யவையென மொழிப வறிந்திசி னோரே"

என்றோதப்பட்ட வெல்லாம் அணியியலுட் காண்க.

இனி, 'விளம்பனத்தியற்கையும்' என்பது:

" விளம்பனத் தியற்கை விரிக்குங் காலை
யாரியந் தமிழொடு கோதி நடக்கிய
உலகின் றோற்றமு மூழி யிறுதியும்
வகைசா லொண்ணூற் றறுவர தியற்கையும்
வேத நாவின் வேதிய ரொழுக்கமும்
ஆதி காலத் தரசர் செய்கையும்
அவ்வவ நாட்டா ரறியும் வகையால்
ஆடியும் பாடியு மறிவரக் கிளத்தல்"

எனக் கொள்க.

இனி, 'நரம்பின் விகற்பமும்' என்பது: நரம்பு எழுவகைய; குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என.* என்னை?

" இளிகுரல் துத்த நான்கு மாத்திரை
விளரி கைக்கிளை மூன்றே யாகுந்
தார முழையிரண் டாகத் தகுமே"

என்றாராகலின்.

இனிப் பண் நான்குவகைய. அவை பாலையாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், செவ்வழியாழ் என்பன. என்னை?

" பாலை குறிஞ்சி மருதஞ்செவ் வழியென
நால்வகைப் பண்ணு நவின்றனர் புலவர்"

என்றார் வாய்ப்பியனார். விளரி யாழோ டைந்து மென்ப.

இனிப் பண் சார்பாகத் தோன்றியன திறமாம். என்னை?

---

" *குர றுத்த நான்கு கிளைமூன் றிரண்டாங்
குரையா வுழையிளி நான்கு—விரையா
விளரியெனின் மூன்றிரண்டு தாரமெனச் சொன்னார்
களரிசேர் கண்ணுற் றவர்"

என்பது சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரை மேற்கோள்.

"பண்சார் வாகப் பரந்தன வெல்லாந்
திண்டிற மென்ப திறனறிந் தோரே"

என்றாராகலின். அத்திறம் இருபத்தொருவகைய.*

"† அராக நேர்திற முறழம்புக் குறுங்கலி
யாசா னைந்தும் பாலையாழ்த் திறனே"

"நைவளங் காந்தாரம் பஞ்சுரம் படுமலை
மருள்வியற் பாற்றுஞ்
செந்திற மெட்டுங் குறிஞ்சியாழ்த் திறனே"

"நவிர்படு குறிஞ்சி,
செந்திற நான்கு மருதயாழ்த் திறனே"

"சாதாரி பியந்தை நேர்ந்த திறமே
பெயர்திறம் யாமையாழ்
சாதாரி நான்குஞ் செவ்வழியாழ்த் திறனே"

என்றார் வாய்ப்பியனார்.

பாலை எழுவகைய; செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை என.

குரல்குரலாகச் செம்பாலை பிறக்கும். துத்தங்குரலாகப் படுமலைப்பாலை பிறக்கும். கைக்கிளை குரலாகச் செவ்வழிப்பாலை பிறக்கும். உழைகுரலாக அரும்பாலை பிறக்கும். இளிகுரலாகக் கோடிப்பாலை பிறக்கும். விளரி குரலாக விளரிப்பாலை பிறக்கும். தாரம் குரலாக மேற்செம்பாலை பிறக்கும் என்க.

---

* திறம் பன்னிரண்டென்பது அடியார்க்கு நல்லார் உரை—(சிலப்பதிகாரம்—புறஞ்சேரி யிறுத்தகாதை 184-188.) இஃதும் ஒருவகைப் பகுப்புப் போலும்.

† 'தக்கராக நேர்திறங் காந்தார பஞ்சமமே
துக்கங் கழிசோம ராகமே—மிக்கதிறற்
காந்தார மென்றைந்தும் பாலைத் திறமென்றார்
பூந்தா ரகத்தியனார் போந்து'

என்பது சிலப்பதிகாரம், (அந்திமாலைச் சிறப்புச் செய்காதை, 72-76.) அடியார்க்குநல்லார் உரை மேற்கோள்.

இனிக் கூடமாமாறு:

"உகுதிறத்துத் துப்பார்யார் தாவென்பார்க் கில்லென்பான்
அகப்பையாய்க் குற்று விடும்"

"இல்லென்பான் கையிற் குடாஅ விரகிலி
யுள்ளதென் றய்ப்பதென் றூன்"

"விடுகைபோ லுள்ளத துத்திரத்திட் டானு
மிடுகுவையிற் கைக்குங் குறை"

"தாவென்பார்க் கில்லென்பான் கையுண்டேற் குன்ற
விடாஅ னுலகத் தது"

"குன்றா விளையு ளுயர்விலந் துன்புற்றுத்
தாவென் றிரப்பாடன் கை"

"துப்பாயார் தாவென்பார்க் கில்லென்பான் கையுட்
குடாஅன் விடாஅ னுழைப்பு"

"கைமாட்சி விரக னுலகத்
துண்மாட்சித் தாயினு மில்"

இவை ஏழுங் கூடப்பாட்டு;

"நின்ற நரம்புக் காறு நரம்பு
சென்றமு னிற்பது கூடமாச் செப்பு"

என்றாராகலின். இவற்றின் பயன் வல்லோர்வாய்க் கேட்க. ஈண்டு உரைப்பிற் பெருகுமாகலின் அகத்தியத்துட் காண்க.

இனி, எண் இரண்டுவகைய, கணிதமும் காரணமும் என. அவற்றுட் கணிதமாவன பதினாறு வரிகருமமும், ஆறு கலாசவருணமும், இரண்டு பிரகரணச்சாதியும், முதகுப்பையும், ஐங்குப்பையும் என்றிப்பரிகருமமும், மிச்சிரகமு முதலாகிய எட்டதிகாரமும். அவை அவினந்தமாலையும், அரசசட்டமும், வருத்தமானமு முதலியவற்றுட் காண்க.

இனித், திணையாவது நான்குவகைய, அகத்திணை, அகப்புறத் திணை, புறத்திணை, புறப்புறத்திணை என. என்னை?

"அகமே யகப்புறம் புறமே புறப்புற
மெனநான் கென்ப திணையின் பகுதி"

என்றாராகலின்.

அகத்திணை யிருவகைய, களவு கற்பு என. என்னை?

"களவுங் கற்புங் கைகோ ளாக
அளவி லன்பின தகமெனப் படுமே"

"ஐந்திணை தழுவியதக் கற்பே யவற்றுட்
* களவெனப் படுவ தூஉம்
காவன் மரபாற் பாட வருமே"

"கற்பெனப் படுவது கரணமோ டியைய
கூடிய பிறவுங் கூறுதற் குரித்தே"

"எய்திய விரண்டுங் கைகோ ளென்ப"

"கிழவன் பாங்கன்,
கிழத்தி தோழி திறத்தன கூற்றே"

இன்ன பிறவும் அகத்திணை.

இனி, அகப்புறமாவன, காந்தள், வள்ளி, பாசறை முல்லை, யில்லாண் முல்லை என இவைபத்தும்,† கைக்கிளை, பெருந்திணை யென்று இவை யிரண்டும் என்க.

"ஆய வகப்புற மையிரண்டு மாயுங்காற்
காந்த ளமர்த்த வீரைந்து மகத்தின் புறமே"

"கைக்கிளை யென்பது புறனே"

இவை பன்னிருபடலம். அவற்றுட் கைக்கிளையாவது: காட்சி முதலாங் கைகாமம். என்னை?

"கைக்கிளை தானே காணுங் காலை
கூட்டமில் கிளவி கைக்கிளை யகப்புறம்"

"பெருந்திணைப் பொருளே பொருந்தக் கூறின்
அறத்தி னியன்ற வகத்தொடு புணராத்
திறத்த தென்ப திறனறிந் தோரே"

"கிளையா வன்பி னீடா வின்பத்
துலகமலை வெல்லாம் பெருந்திணை யகப்புறம்"

என்றாராகலின்.

---

* 'கரவெனப் படுவதூஉம்' என்பதும் பாடம். † இப்பகுதியின் சரியான பாடம் அகப்படவில்லை.

இனிப் புறமாவது:

"வெட்சி கரந்தை புறனென மொழிப"

"வெட்சி முதலாத் தும்பை யீறாச்
செப்பிய வேழும் புறப்பொரு ளாகும்"

எனக்கொள்க.

வெட்சி *ஆகவர்தலானும், கரந்தை யுட்குவ்ரச்சென்று விடுத்தலானும் 'வெட்சியுங் கரந்தையுந் தம்முண் மாறே' வஞ்சி மேற்செல்லலானும், காஞ்சி அஞ்சாதெதிர்சென்றான்றலானும் 'வஞ்சியுங் காஞ்சியுந் தம்முண் மாறே.' உழிஞை யாரெயின் முற்றலானும், நொச்சி விழுமிதினவ்வெயிற் காத்தலானும் 'உழிஞையு நொச்சியுந் தம்முண் மாறே'

"பொருதல் தும்பை புணர்வ தென்ப"

இவற்றின் விகற்ப மெல்லாம் பன்னிரு படலத்துட் காண்க.

புறப்புறமாவன, | வாகையும் |பாடாண்பாட்டும்| பொதுவியற் றிணையும். என்னை?

"வாகை பாடாண் றிணையென்ப புறப்பொருளே"

என்றார் தொல்காப்பிய வகத்தியம் உடையார்.

"மதுவிரி வாகையும்,
பொதுவியற் படலமும் புறமா கும்மே',

என்றார் வாய்ப்பியனார். இவையாமாறு வெண்பாமாலையுள்ளும் பன்னிருபடலத்துள்ளும் காண்க. இன்னும் திணையே யென்றதனாற் குறிஞ்சி முதலிய வைந்திணையும் உணர்த்தும். என்னை?

"குறிஞ்சி பாலையோ டைந்து மகமே"

என்றாராகலின்.

அவையாமாறு:

"மெய்வகை கூதிர் முன்பனி வகையே"

இது குறிஞ்சித் திணை.

---

*'ஆதரலானும்' என்பதும் பாடம்.

"வெம்பாலத்தம் * * * வகையே"

இது பாலைத்திணை.

" தவலரும் * * * உறுப்பே"

இது முல்லைத்திணை.

" அருங்கடல் * * * உறுப்பே"

இது நெய்தற்றிணை.

" ஒல்லென் * * * யே"

இது மருதத்திணை.

" இடனே பருவம் பொழுதூண் பொருள்பெயர்
கடவுண் மாந்தர் களவிழ வூர்நீர்
மாமரம் புட்பறை யாழெண் றிவற்றின்
ஆகிய மரபி னகனைந் திணைக்கு
முந்தை மூன்று முதல்கரு வேனை
யைந்தா நிலைய துரிப்பொரு ளாகும்"
" மற்றவை தம்முண் மயங்கினு மப்பெயர்
பெற்ற திணையின் பெயர்க்கொடை பெறுமே"
" செவ்வி யுரிப்பொருட் கேது வாகி
யெவ்வகை யிறைச்சியு மியற்றுப தெரிந்தே"
" ஒருவன் பெயர்மலை யாறுநா டூரிவை
வரினுண் டலகியல் வழக்கந் தோற்றல்"
" ஐந்திணை தழுவிய வகமெனப் படுவது
கந்தருவ நெறிமையிற் களவொடு கற்பே"

இவற்றைப் பதநெகிழ்த்துரைத்துக் கொள்க. இன்னும் அவ் விதப்பான் உயர்திணையும் அஃறிணையும் *ஆமாறுணர்த்தும்.

" உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனா ரவரல பிறவே
ஆயிரு திணையி னிசைக்குமன சொல்லே" (தொல்-சொல்-கிளவி-1.)

எனவும்,

" மக்கட் சுட்டே யுயர்திணை யாகும்"

எனவும்,

---

* 'உரைத்தும்' என்பதும் பாடம்.

"தேவரு நரகரு மேவவும் பெறுமே"
"ஏவிய விம்மூன் றன்றி யொழிந்தவை
யாவகைப் பொருளு மஃறிணை யாகும்"

எனவுங் கொள்க.

இனி, ஒருசாரார் அகத்திணை, புறத்திணை, அகப்புறத்திணை என மூன்று யடங்குமென்ப. ஆமாறு அவிநயத்துட் காண்க.*

இனி, இருது ஆவன:

"காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் வேனி லென்றாங்
கிருமூ வகைய பருவ மவைதாம்
ஆவணி முதலா †விவ்விரண் டாக
மேவின திங்க ளெண்ணினர் கொளலே"

இந்த இருது வருணனை அணியியலுட் காண்க.

இனிக், காலம் மூவகைய, இறந்தகாலம், எதிர்காலம் நிகழ் காலம் என. என்னை?

"இறந்தது நிகழ்வது மெதிர்வது மென்னுந்
திறந்தெரி வுடையன கால மாகும்"

என்றாராகலின். அன்றியும், நன்னற் காலம், நற்காலம்; தீந்த காலம், தீக்காலம்; நற்றீக்காலம், தீத்தீக்காலம் என இவையுமாம் நான்கு யுகமும் எனினும் ஆம். இவையாமா றுரைப்பிற் பெருக லின் உலக சமய பேதம் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

இனி, 'எண்வகை மணம்' ஆவன: பிரமமணம், விதிமணம், ஆரிடமணம், தெய்வமணம், அசுரமணம், இராக்கத மணம், பைசாச மணம், கந்தருவ மணம் என்பன.

பிரமமணமாவது: ஓரிருதுகண்ட கன்னியை மற்றையிருது காணுமே கொளற்பால மரபினோர்க்கு நீர்பெய்து கொடுத்தல் என்னை?

---

* இப்பகுதி திணைக்குக் கூறிய நால்வகைப் பாகுபாட்டின் பின்னர் இருத்தல் பொருத்தமுடைத்தேனும், ஏடுகளனைத்திலும் ஈண்டே உள்ளமை யின் அவ்வாறே பதிப்பிக்கப்பட்டது.

† 'இரண்டிரண்டாக' என்பதும் பாடம்.

" ஒப்பாருக் கொப்பா ரொருபூப் பிரிந்தபி
னிப்பான் மதிதோன்ற வெல்லைக்க—ணப்பாற்
றருமமே போல்கென்று தக்கார்க்குச் சேர்த்தல்
பிரமமாம் போலும் பெயர் "

என்றாராகலின்.

விதிமணமாவது: கொடுத்த பரியத்தின் இருமடங்கு மகட்கொ டுப்போன் கொடுத்தல். என்னை?

" கொடுத்த பொருள்வாங்கிக் கொண்டபேர் * * *
மடுப்பர் மடுத்தற் கமைந்தா—லடுப்போ
னிரண்டா மடங்குபெய் தீவ ததுவே
யிரண்டா மணத்தி னியல்பு "

என்றாராகலின்.

ஆரிடமாவது: ஏறும் ஆவுங்கொணர்ந்து நிறீஇ, அவற்றின் முன்னர்க் கைக்கு நீர்பெய்து கொடுத்தல். என்னை?

" இற்குலத்தோ டொப்பானுக் கொப்பா னிமிலேறும்
பொற்குளம்பிற் பொற்கோட்ட வாப்புனைந்து—முற்படுத்து
வாரிடம்பே ராமுலையை வாழ்க்கைக்கண் வைப்பதுரை
ஆரிடம் பேரா மதற்கு "

என்றாராகலின்.

தெய்வமாவது: வேள்விக் களத்துத் தீப்பாரித்துத் தீமுன்னர் வேள்வியாசிரியர்க்குக் கைக்கு நீர்பெய்து கொடுத்தல். என்னை?

" மெய்ப்பாலைப் பெண்டன்மை யெய்தியபின் மெல்லியலை
யொப்ப வுணர்ந்த பொழுதுண்ட—லொப்பூர்க்கு
செய்தயங்கு தீமுன்னர் நேரிழையை யீவதே
தெய்வப்பே ராகுந் தெரிந்து "

என்றாராகலின்.

இவை நான்கும் அந்தணர்க்குரிய.

அசுரமாவது: இன்னது செய்தார்க்கு இவளுரியள் என்ற இடத்து அன்னது செய்தெய்துவது. அவை வில்லேற்றுதல், திரி பன்றியெய்தல், கொல்லேறு கோடன் முதலிய. என்னை?

"வில்லேற்றல் வேள்வியைக் காத்தன் மிகுவலிக்
கொல்லேற் றியல்குழையைக் கோடலென்—றெல்லா
மரியனசெய் தெய்திஞ ளுயி னசுரம்
அரியவா மந்த மணம்"

இராக்கதமாவது: ஆடைமேலிடுதல், பூமேலிடுதல், கதவடைத்தல் முதலியவற்றால் வலிதிற்கோடல். என்னை?

"பூந்துகிலோ டின்னனவு மேலிட்டும் புதவடைத்தும்
பாய்ந்து *கதந்தாஅய்ப் பற்றிக்கொண்—டேந்திழையை
யெய்தப் படுவ திராக்கத மென்பதே
மைதீர்ந்தார் சொல்லு மணம்"

பைசாசமாவது: துஞ்சினாரோடும், மயங்கினாரோடும், சரித்தாரோடும், செத்தாரோடும், விலங்கினோடும், இழிதகுமரபில் யாருமில்லா வொருசிறைக்கண் புணர்ந்து ஒழுகு மொழுக்கம். என்னை?

"துஞ்சல் களித்தல் மயங்குதன் மாழாத்த
லஞ்ச லறிவழித லாதலென்—றெஞ்சினவும்
இன்ன திறத்தா னிழித்தக வெய்துபவேற்
பின்னைப் பசாசமணப் பேர்"

எனவும்,

"குணத்தி னிழிந்த மயங்கியவ ரோடும்
பிணத்தினும் விலங்கினும் பிணைவது பைசாசம்"

எனவுஞ் சொன்னாராகலின்.

கந்தருவமாவது: ஒத்தகுலனும், குணனும், அழகும், அறிவும், பருவமும்உடையார், யாருமில் ஒருசிறைக்கண் அன்பு மீதூரத் தாமே புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம். என்னை?

"ஒத்த குலத்தார் தமியரா யோரிடத்துத்
'தத்தமிற் கண்டதம் மன்பினா—லுய்த்திட
வந்தர மின்றிப் புணர்வ ததுவரோ
கந்தருவ மென்ற கருத்து"

எனவும்,

---

* 'வலிந்துதாய்' என்பதும் பாடம்.

"முற்செய் வினையது முறையா வுண்மையி
னொத்த விருவரு முள்ளக நெகிழ்ந்து
காட்சி யையந் தெரித றேற்றமெனக்
நான்கிறந் தவட்கு நாணு மடனும்
அச்சமும் பயிர்ப்பு மவற்கு
முயிர்த்தகத் தடக்கிய,
வறிவு நிறைவு மோர்ப்புந் தேற்றமு
மறைய வவர்க்கு மாண்டதோ ரிடத்தின்
* மெய்யுறு வகையு முள்ளல்ல துடம்புறப்படாத்
தமிழியல் வழக்கமெனத்
தன்னன்பு மிகைபெருகிய
களவெனப் படுவது கந்தருவ மணமே"

என்றார் அவிநயனார்.

இனி, எழுத்து நான்குவகைய; உருவெழுத்தும், உணர்வெழுத்தும், ஒலியெழுத்தும், தன்மையெழுத்தும் என. என்னை?

"அவற்றுள்,
உருவே யுணர்வே யொலியே தன்மையென
விருவகை யெழுத்து மீரிரண் டாகும்"

என்றாராகலின். அவற்றுள், உருவெழுத்தாவது எழுதப்படுவது. என்னை?

"காணப் பட்ட வுருவ மெல்லா
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவி லோவியன் கைவினை போல
வெழுதப் படுவ துருவெழுத் தாகும்"

என்றாராகலின்.

உணர்வெழுத்தாவது :

"கொண்டவோர் குறியாற் கொண்ட வதனை
யுண்டென் றுணர்வ துணர்வெழுத் தாகும்"

ஒலியெழுத்தாவது :

"இசைப்படு புள்ளி னெழாஅல் போலச்
செவிப்புல னாவ தொலியெழுத் தாகும்"

* 'மெய்யுறுவகை யுள்ளல்ல துடம்புறப்படா' என்பதும் பாடம்.

தன்மை யெழுத்தாவது :

"முதற்கா ரணமுந் துணைக்கா ரணமுந்
துணைக்கா ரணத்தொடு தொடரிய வுணர்வும்
அவற்றொடு புணர்ந்த வகத்தெழு வளியின்
மிடற்றுப்பிறந் திசைப்பது தன்மை யெழுத்தே"

என எழுத்தினது விகற்பமும் எழுத்தினது புணர்ச்சியும் எழுத்ததிகாரத்தினுட் காண்க. அ,க,ச,ட,த,ப,ய, முதலியவாயவெழுத்தும், அ,ச,ல,வ,ர,ங,ய, முதலிய இராசியெழுத்தும், கார்த்திகை முதலிய நாளெழுத்தும், தோபமுதலிய நால்வகை யெழுத்தும், சாதிமுதலிய தன்மையெழுத்தும், உச்சாடன முதலிய உக்கிரவெழுத்தும், சித்திராகாருடம் முதலிய முத்திற வெழுத்தும், *பூகியல் முதலிய நால்வகை யெழுத்தும், புத்தேண்முதலிய நாற்கதி யெழுத்தும், தாது முதலிய வொளி யெழுத்தும், மாகமடையம் முதலிய சங்கேத வெழுத்தும், கலிமுதலிய சங்கேத வெழுத்தும், பூரப்பான் வழக்காகிய பதின்மூன்றெழுத்தும் என்றித்தொடக்கத்தனவும், கட்டுரை யெழுத்தும் வச்சிரமுதலிய வடிவெழுத்தும், மற்றும் பலவகையாற் காட்டப்பட்ட எல்லா எழுத்தும் வல்லார்வாய்க் கேட்க.

இனிச், சொல் நான்குவகைய; பெயர்ச்சொல், தொழிற்சொல், இடைச்சொல், உரிச்சொல் என.

"எப்பொரு ளேனு மொருபொருள் விளங்கச்
செப்பி நிற்பது பெயர்ச்சொல் லாகும்"

"வழுவின் மூவகைக் காலமொடு சிவணித்
தொழில்பட வருவது தொழிற்சொல் லாகும்"

"சுடுபொன் மருங்கிற் பூற்று சேய்ப்ப
விடையின் நிசைப்ப திடைச்சொல் லாகும்"

"மருவிய சொல்லொடு மருவாச் சொற்கொணர்ந்
துரிமையோ டியற்றுவ துரிச்சொல் லாகும்"

என்பது 'வாய்ப்பியம். இனி யொருசாராசிரியர் இயற்சொல், திரிசொல், திசைச்சொல் என்று உரைப்பர். அவற்றுள் திரிசொற் சில வருமாறு:

* 'பாகியல் முதலிய வகையெழுத தும்' என்பதும் பாடம்.

"பைஞிலம் பைதிரம் விரற்றலை யோர்பித்தை
பூழிலவம் பீளைதருவையனல் தொடப்பகை பிறடி
கருவுள நவிரல் வசிதலையல் விவப்பு
செப்பிய பிறவுந் திரிசொல் லாகும்"

ஆடு, எருது, விடை, ஏறு, மோத்தை, சேவல், ஒருத்தல், கலை, களிறு, ஏற்றை, கடுவன், கூரன், பகடு என இவை ஆண்பெயர்; மகடு, ஆ, பிடி, குமரி, கன்னி, பிணவு, முடுவல் என்றின்னவை பெண் பெயர்; குழவி, மகவு, மறி, குருளை என்று இன்னவை இளமைக்கு எய்திய பெயர்.

"பெயரிவை மும்மையும் பிறவுமிப் பொருட்கண்
இயைபெதி ரியலு மென்றுணர்ந் தியையக்
குறியொடு காரணங் கொளவகுத் தொழிந்தது
அறிய வுரைப்போ ஞசிரி யன்னே"

என இவற்றின் விரிவறிந்து வந்துழிக் காண்க. இடைச்சொல் லும் உரிச்சொல்லுந் தொல்காப்பியம், தக்காணியம், அவிநயம், நல்லாறன்மொழிவரி முதலியவற்றுட் காண்க.

இனிச் செந்துறை மார்க்கமும் வெண்டுறை மார்க்கமும் ஆமாறு: நாற்பெரும்பண்ணும், இருபத்தொருதிறனும் ஆகிய இசையெல்லாஞ் செந்துறை; ஒன்பது மேற்புறமும் பதினோராடலும் என்றிவை யெல்லாம் வெண்டுறையாகும் என்பது வாய்ப்பியம். இனி ஒருசாரா சிரியர் சொல்லுமாறு:

"கந்தருவ மென்பது கசடறக் கிளப்பிற்
செந்துறை வெண்டுறை யெனவிரு வகைத்தே"

அவற்றுட், செந்துறை என்பது பாடற்கேற்பது; வெண்டுறை என்பது ஆடற்கேற்பது. என்னை?

"செந்துறை யென்ப தொலிகுறித் தற்றே
வெண்டுறை யென்பது கூத்தின் மேற்றே"

என்பவாகலின்.

செந்துறைவிரி மூவகைய; செந்துறையும், செந்துறைச் செந் துறையும், வெண்டுறைச் செந்துறையும் என. வெண்டுறைவிரி மூவ

கைய ; வெண்டுறையும், வெண்டுறை வெண்டுறையும், செந்துறை வெண்டுறையும் என. என்னை?

"ஆங்கிரு துறையு மறுவகைப் பகுதிய
பாங்கி னுணரும் பண்பி னேனே"

என்றாராகலின்.

அவற்றுட், செந்துறைப் பாட்டாவன: பரிபாடலும், மகிழிசையும், காமவின்னிசையும் என்பன. என்னை?

"தெய்வங் காம
மையில் பொருளாம் பரிபா டல்லே
மகிழிசை நண்ணிசை யுரிபெரு மரபிற்
காமவின் னிசையே யாற்றிசை யிவற்றைச்
செந்துறை யென்று சேர்த்தினர் புலவர்"

என்றாராகலின்.

செந்துறைச் செந்துறைப் பாட்டாவன:

"ஒங்கெழில் குன்று கூதிர்பண்பு செந்துறை"

எனக்கொள்க.

வெண்டுறைச் செந்துறைப் பாட்டாவன: கலியும், வரியும், சிற்றிசையும், சிற்றிசைச் சிற்றிசையும் என்றித்தொடக்கத்தன. என்னை?

"கலியே வரியே சிற்றிசை யென்று
மலிதரு பேரிசைச் சிற்றிசைச் சிற்றிசை
யென்றிவை யெல்லாம் பாணி யியந்துக்
கொன்ற நோக்கி வொளிபட வந்த
வெண்டுறைச் செந்துறை வேண்டுங் காலே"

என்றாராகலின்.

வெண்டுறைப் பாட்டாவன: விலக்கு நாட்டிச் செய்யப்படுங் கூத்திற்குரியவாகிய வரியும், குரவையும், மண்டிலமும், சேதமுமுதலிய.

வெண்டுறை வெண்டுறைப் பாட்டாவன: பதினோராடற்கு மேற்றபாட்டு. அவை அல்லிய முதலியவும் பாடல்களாக ஆடுவாரை

யும், பாடல்களையும், கருவியையும் உந்துஇசைப்பாட்டாய் வருவன. என்னை ?

> " அவ்வப் பொருளா வரிறப னாடிப்
> பாட்டினிற் புகழ்தல் பாடலி தாகலிற்
> பதினோ ராடற் பாட்டாய் வந்தன
> வெண்டுறை, வெண்டுறை யெனவிரித் தனரே"

என்றாராகலின்.

இனி, இவற்றினுறுப்பு ஐம்பத்துமூன்றுவன: அல்லியவுறுப்பு 6. கொட்டியுறுப்பு 4. குடையுறுப்பு 4. குடத்தினுறுப்பு 5. பாண்டரங்க உறுப்பு 6. மல்லாடலுறுப்பு 5. துடியாடலுறுப்பு 6. கடையத்துறுப்பு 6. பேட்டின் உறுப்பு 4. மரக்காலாடலுறுப்பு 4. பாவையுறுப்பு 3. எனவிவை. இவற்றின்றன்மை செயிற்றியமும், சந்தமும், பொய்கையார்நூலு முதலியவற்றுட் காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

பதினோராடலுமாட்டினோர் யாரோவெனின்,

> " அல்லிய மாயவ னாட லதற்குறுப்புச்
> சொல்லின ராறுகத் துணிந்து"

> " கொட்டி கடம்பமர்ந்தா னாட லதற்குறுப்
> பொட்டினார் மூன்றுட னொன்று"

> " அறுமுகத்த னாடல் குடைக்கூத் ததற்குப்
> பெறுமுறுப்பு நான்காகப் பேசு"

> " குடத்தாடல் குன்றெடுத்தா னாட லதற்கு
> மடக்கிய வைந்துறுப் பாம்"

> " முக்கண னாடிற்றுப் பாண்டரங்க மற்றதற்
> கொக்குமுறுப் பாறு வுணர்"

> " மாயவ னாடிற்று மல்லாடன் மற்றதற்
> காய வுறுப்புக்க ளைந்து"

> " துடியாடன் மங்கை யெழுவர தாடற்
> கடியா முறுப்புக்க ளாறு"

> " கடைய மயிராணி யாட லதனிற்
> குடைய வுறுப்பைந்தோ டொன்று"

“காமன தாடலாம் பேட்டா டதற்குறுப்பு
நாயிக வாராயி ஞன்கு”
“மாயவ ளாடல் மரக்கா லதற்குறுப்
பேய்வன வீரிரண் டென்”
“திருவாடல் பாவை யதற்குறுப்புத் தேரி
னொருவா திரண்டுட னென்று”

என்பன.

“பல்வரை நின்றாட லாறுமற் றைந்துந்தன்
னெல்லையின் வீழ்ந்தாட லென்”

செந்துறை வெண்டுறைப் பட்டாவன: தெய்வதமும், பாவை யும், வாரணர்மதியமும், இலங்கிரும், வைளவமும், ஒன்று கொட்டும், முருட்டும் என்றித் தொடக்கத்து மேற்புறச் செய்யுள் எனக்கொள்க. என்னை ?

“தேவ பாணி முதலா வேவிய
வொன்றீ றாகக் கிடந்தவும் வந்த
விலங்கிரு வைளவம் வாரணர் மதியம்
என்றிவை மொழிந்த மேற்புற மெல்லாஞ்
செந்துறை வெண்டுறை சேர்த்துங் காலே”

என்றாராகலின்.

இனி, முப்பத்திருவகை யுத்தியாவன, முன்கூறியவே.

தருக்கமாவன: ஏகாந்தவாதமும், அநேகாந்த வாதமும் என் பன. அவை குண்டலம், நீலம், பிங்கலம், அஞ்சனம், தத்துவதரிச னம், காலகேசி முதலிய செய்யுட்களுள்ளும், சாங்கிய முதலிய ஆறு தரிசனங்களுள்ளுங் காண்க.

இனிச், செய்யுளாவன :

“வரியே குரவை மதலை மேட
முரியே தாழிசை முன்னிலை வாழ்த்தே
தேவ பாணி சிற்றிசை பேரிசை
பாவை தனிநிலை பாங்கமை மடலே”

என்றோதப்பட்டன. அவை இன்மணியாரத்துள்ளும் பிறவற்றுள் ளுங் கண்டுகொள்க.

'முந்துநூன் முடிந்த முறைமையின் வழாஅமை—வந்தன பிற வும் வயின்றிந் துரைப்போன்—அந்தமில் கேள்வி யாசிரி யன்னே என்பது: மேனூன்முடிந்த முறைமையின் வழாமை சொன் னவும், சித்திர சமையபத்திர சேதக கணிதகத்தவுத்தி முதலிய பிற வும் அறிந்து இடத்திற்கேற்றவாற்றான் உரைக்கவல்லோன் கேள்வி முற்றிய ஆசிரியன் என்று கூறப்படுவான் என்றவாறு.

"சொல்விற் சுருங்கிப் பொருள்பெருகித் * தொன்ஞான
மெல்லாம் விளக்கி யிருளகற்றும்—நல்யாப்
பருங்கலம் வல்லவர் தாமன்றே கேள்வி
† யொருங்கறிய வல்லா ருணர்ந்து"

யாப்பருங்கலம் மூலமும்

விருத்தியுரையும்

முற்றும்.

---

* 'தொன்ஞாலம்' என்பதும் பாடம்.

† 'ஒருங்கலர்த்த வல்லா ருணர்ந்து' என்பதும் பாடம்.



யாப்பருங்கலம்

# சூத்திர முதற்குறிப் பகராதி.


பக்கம்.

அ

அகவலிசையன ... 251
அடிமுதற் பொருள். 355
அடியெனைத்தாகி. 329
அடியொரு மூன்று. 243
அந்தடி குறைநவு ... 241
அந்தவடியினயல் ... 256
அவற்றொடு முடு ... 297
அளபெடையொன். 156
அளவடி நான்கின. 333

ஆ

ஆதியெழுத்தே ... 129

இ

இணைக்குறளிடை. 257
இயற்சீருரிச்சீர் ... 57
இயற்சீர்வெள்ளடி. 115
இரட்டையடி ... 180
இரண்டாமெழுத்து. 131
இருசீர்மிசைவர ... 159
இறுவாயொப்பின். 153

ஈ

ஈரசைகூடியசீர் ... 59
ஈரசைச்சீர்நின்று ... 85
ஈரடிகுறள்சிந்து ... 224
ஈரடிவெண்பா ... 121
ஈறுமிடையும் ... 54
ஈறுமுதலா ... 183
ஈற்றயற்சீர் ... 168

உ

உயிரே மெய்யே ... 20
உரைத்தனவிரண்டும்243

எ

எழுத்தசைசீர் ... 17

ஒ

ஒத்தவடியினதாகி. 261
ஒத்தாழிசைக்கலி... 276
ஒழுகியவோசை ... 240

ஓ

ஓரசைச்சீரும் ... 67

க

கடையதனயலடி ... 265
கடையிணைபின் ... 148
கலியொடுவெண்பா. 109
கழிநெடிலடியே ... 101
கழிநெடிலடிநான்கு 269

கு

குறளடி சிந்தடியிரு. 99
குறளடி சிந்தடியள 98
குறளடி நான்கும... 340
குறள் சிந்தின்னிசை 221
குறிப்பே செய்வல் ... 49
குறிலிணைகுறில் ... 52

சி

சிந்தடி குறளடி ... 107
சிந்தடி நான்காய் ... 342

சீ

சீரிரண்டிடை ... 163
சீரொடு சீர்தலைப்... 83
சீர்தொறுந்தொடுப்ப 170

செ

செந்தொடையிரட். 173
செந்தொடையொவ் 178
செப்பலிசையன ... 212
செய்யுட்டாமே ... 199

த

தரவேதரவிணை ... 311
தரவொன்று ... 280
தளைசீர்வண்ணம்... 39
தனிநிலை யொற்று. 36
தன்சீரிறுதிநிரை... 88
தன்றளையோசை... 308

தா

தாழிசை துறை ... 210

து

துள்ளலிசையன .. 274

தூ

தூங்கலிசையன ... 335

தொ

தொடைபல ... 187
தொடையேயடி ... 127

நா

நாலசைச்சீர் ... 65
நாலோரடியாய் ... 227
நான்கடியானும் ... 248

நி

நிரனிறை முதலிய. 359
நிரைநடுவியலா ... 78
நிரையீறில்லா ... 87

பக்கம்.

நெ

நெடிலடி நான்காய். 332
நெடில் குறில் ... 48

நே

நேரசை யென்ரு ... 47
நேரிசையம்போ ... 278
நேரிசையிணைக்குறள் 254

பா

பாதம் பலவரில் ... 236
பாவினமெல்லா ... 112

ம

மனப்படுமடிமுதல். 259

மா

மாலைமாற்றே ... 492

பக்கம்.

மி

மிக்குங்குறைந்தும் . 344

மு

முதலயற்சீரொழித். 167
முதலொடுமூன்ரும். 161
முந்தியதாழிசைக்கு. 285
முழுதுலகிறைஞ்ச . 1

மூ

மூவகைச் சீருரிச்சீர் 61
மூவொரு சீரும் ... 165
மூன்றடிமுதலா ... 245
மூன்றடி யொத்த... 263

மொ

மொழியினும் ... 144

பக்கம்.

மோ

மோனையெதுகை... 128

வ

வஞ்சியுளகவல் ... 119
வருக்கநெடிலினம். 134

வி

விகற்பொன்ருகி ... 233
விரவியு மருகியும்... 68

வெ

வெண்கலியொன்றே 279
வெண்சீரொன்றலும் 84
வெண்பாவாசிரியம். 200
வெள்ளடி கலியினு. 119
வெள்ளையுட்பிறதளை 92
வெறிகமழ் தாமரை 2

# யாப்பருங்கலம்

## இலக்கண மேற்கோள் முதற்குறிப் பகராதி.

(* இக்குறியிடப்பட்டவை தொல்காப்பியச் சூத்திரங்கள்.)


பக்கம்.

### அ

அ ஆ ஐ ஔ வென்றிவை ... 196
அ இ உ எ ஒ இவை குறிய ... 22,51
*அ இ உ அம்மூன்றுஞ் சுட்டு 381
அகத்திணை யல்வழி ... 118
அகத்திணை யகவயின் ... 120
அகத்திணை மருங்கினளவு ... 120
அகப்பாவகவலுள் வஞ்சி ... 121
அகப்பாவகவல், ஐயீருறுப்பின் 270
*அகப்பாட்டு வண்ணம் ... 384
அகமுதலாய பொருள்கவிக்காவி 461
அகமேயகப்புறம் புறமே ... 528
அகரமுதலா ஔகாரமீறு ... 21
அகரமோடாகாரமைகாரம் ... 196
அகவலென்பதாசிரியப்பா 78,109
அகவலென்பதாசிரியப் பெயரே 251
*அகவலென்பதாசிரியம்மே ... 214
அகவலோசையாசிரியம்மே ... 254
அகவல்வெண்பாவடிவிலே ... 219
அகவலுட்டன்சீர்வெண்சீர் ... 70
அகவற்கினமாயவாறிவையும் ... 274
*அகைப்புவண்ணமறுத்தறுத்து 387
அஃகேனமாய்தந்தனிநிலை ... 28
*அஃதான்றென்ப வெண்பா . 214
*அங்கதப்பாட்டவற்றளவோடு 124
அசைகளுமொரோவழி ... 416
அசைகூனுகுமென்மனார் ... 356
அசையடி முன்னரராகம் ... 311
அசையாக்குந்தன்மையவே ... 35
அசையிரண்டு மூன்றுமவை ... 82

பக்கம்.

அசையினுஞ் சீரினுமிசை .. 179
அசையினுஞ் சீரினுமடி ... 183
அசையேயிரண்டு மூன்றும் ... 67
அடக்கியலுறுப்புமாறடித்தாக . 292
அடிதொறுமுதலெழுத்தடைவ 137
*அடிதொறுந்தலையெழுத்து... 143
அடிபலவாகியுங்கடையடி ... 331
அடிமறிச்செய்தியடிநிலை ... 369
அடிமுதலோரெழுத்தடி ... 130
அடிமுதற்கணுங்கிற்கும் ... 358
அடிமுதற் பொருள்பெற ... 357
அடிமுழுதொருசீர்வரின் ... 180
அடிமூன்றொத்திறின் ... 265
அடிமூன்றாகி வெண்பா ... 245
அடிமோனையேனைக்கிளை ... 177
அடியினிற்பொருளைத்தான் 356,411
அடியுஞ்சீருமசையுமெழுத்து . 183
அடியுளெழுத்தினை நான்கினுல் 480
அடிமைந்தாகியுமிக்குமீற்றடி . 247
அடிவரையின்றியளவொத்து . 334
அடுத்தவடியிரண்டியாவகை... 127
அதிக்கண்ட மென்றுமிசை ... 97
*அதுவேதானுமீரிருவகைத்தே 2,406
அந்தங்குறையாதடியிரண்டு ... 240
அந்தமுதலாத் தொடுப்பது ... 187
அந்தாதித்தொடையினும் ... 305
அந்தமில்பாதந்தாழிசையே ... 242
அந்தமுமாதியுநடுவும் ... 412
அந்நாற்சொல்லுந்தொடுக்கும் . 373
அந்தடிமிக்குப்பலசிலவாய் ... 331
அந்தத்திற்பாவிற்கினமாய ... 344

| | பக்கம். |
|---|---|
| அர்தவடிமிக்கல்லாவடியே ... | 331 |
| அம்புவண்ணகமிருமூன்றடி... | 282 |
| அம்மூவளவிற்குமராகவடி ... | 293 |
| அராகநேர்திறமுறழும்பு ... | 527 |
| அரிறீரகவற்கடித்தொகை ... | 437 |
| அருங்கடல்......உறுப்பே ... | 531 |
| அருணைக்கு நீராரசைச்சீர் ... | 376 |
| அரைநொடியளவினவறுமூ ... | 25 |
| அரைநொடியென்பதியாநெதன | 25 |
| அரையளவுகுறுகன்மகரம் ... | 29 |
| அல்லாவொற்றுமகவலினிறுதி . | 254 |
| அல்லாவொற்றினுமதனினும் . | 262 |
| அல்லாப்பாவினடிவகை ... | 110 |
| அவலமென்பதற்கிசையென . | 524 |
| அவற்றுள், ஒருவேயுணர்வே | 535 |
| *அவற்றுட், சூத்திரந்தானே... | 3,406 |
| அவற்றுள், ஆசிரியமென்பது. | 125 |
| அவற்றுள், நல்லவை யென்பது | 514 |
| *அவற்றுட், பாஅவண்ணம்... | 381 |
| அவைதாம், அகப்பாவகவல் ... | 269 |
| அவைதாம், இயனெறிதிரிந்த . | 518 |
| *அவைதாம், பாஅவண்ணம்... | 380 |
| அவைதாம், பாட்டுரைநூலே . | 407 |
| அவைதாம், முதலோடயல் ... | 172 |
| அவைதாம், முன்னும் பின்னும் | 270 |
| அவைதிரிபாகின் விசாதியாகும் | 458 |
| அவையெனப்படுமவையரிறப . | 514 |
| அவையே, தேவபாணியென்று | 291 |
| அவ்வியனிலையுமேனைமூன்றே | 28 |
| அளபெடைதனியிரண்டு ... | 29 |
| அளபெடைத் தொடைக்கே... | 159 |
| அளபெடைமருங்கிற்பாட ... | 523 |
| அளபெடையினம்பெற ... | 159 |
| *அளபெடை வண்ணமளபெடை | 383 |
| அளபெழினல்லதையாய்தமும் | 37 |
| அளபெழுந்தியாப்பினஃது ... | 159 |
| அளவடியந்தமுமாதியுமாகி ... | 258 |
| அளவடியைஞ்சீர் நெடிலடி ... | 268 |
| அளவடிமுதலாவனைத்தினும் . | 298 |
| அளவியற்பாவென்றசீர் ... | 107 |
| அளவியற்பாவான்றசீரைக் ... | 463 |
| அளவிருநிலத்தொடு நெடில்... | 431 |

| | பக்கம். |
|---|---|
| அறமுதலூன் கென்றுமகமுதல் | 210 |
| அறுசீர்முதலா நெடியவை ... | 273 |
| அறுசீரெழுசீரடிமிகவரூஉ ... | 275 |
| அறுசீரெழுசீரடிமிகினறவும் | 273 |
| அறுத்திசைக்குஞ் செய்யுட்பால் | 430 |
| அனந்தனுங்குளிகனுமாதி ... | 263 |
| அன்னங்கழிசங்குதத்தை ... | 518 |
| அன்னமொன்றுங்கழியிரண்டா | 518 |


## ஆ


| | |
|---|---|
| ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ ... | 22 |
| ஆங்கிருதுறையுமறுவகை ... | 538 |
| ஆங்கென்கிளவியடையா ... | 285 |
| ஆசிரியத்தொடுவெள்ளை ... | 110 |
| ஆசிரியத்துளைச்சீரடி ... | 437 |
| *ஆசிரியப்பாட்டினளவிற்கு ... | 124 |
| ஆசிரியப்பாவினயற்பாவடி ... | 121 |
| ஆசிரியப்பாவின்சிறுமைக்கு... | 123 |
| *ஆசிரியநடைத்தேவஞ்சி ... | 124 |
| ஆசிரியப்பாவெண்பாக்கலி ... | 110 |
| ஆசிரியமென்பதகவலின் ... | 125 |
| ஆசிரியம்வெண்பாக்கலியொடு | 110 |
| ஆசிரியம் வெண்பாவென ... | 285 |
| ஆசிரியமருங்கினைந்துமுரிமை | 431 |
| ஆசிரியம் பெற்றவடிநிலமே ... | 438 |
| ஆசிரியவுரிச்சீர் வெண்பா ... | 423 |
| ஆணைவழிநிற்றன்மாண்வினை . | 339 |
| ஆதியாயாற்றலுடைத்தாய் ... | 239 |
| ஆதியிரட்டித்ததனசத்து ... | 476 |
| ஆயவகப்புறமையிரண்டும் ... | 529 |
| ஆயிரமிறுதிமூவடியிழிபா ... | 124 |
| ஆய்தந்தானே குறியதன் ... | 28 |
| ஆய்தமு மொற்றெனப்பெற்று. | 39 |
| ஆய்தமு மொற்றுமளபெழ ... | 37 |
| ஆய்தமுமொற்றுயடங்கினும்... | 34 |
| ஆய்தமும் யவ்வுமவ்வொடு ... | 30 |
| ஆய்தவுறுப்பினகவுதலின்றி . | 276 |
| ஆரமுறுவலணிவடமேகலை ... | 66 |
| ஆரமரிசந்தனம் பழுப்போடு . | 459 |
| ஆரன்மகமோடனுடமவிட்டம். | 458 |
| ஆரிடச் செய்யுள்பாடுதற்கு ... | 350 |
| ஆரெட்டாயவ்வார்மேல் ... | 495 |

பக்கம்.

ஆர்த்தபடியினெதிர்ச்சுன்வரு . 475
ஆறடிமுக்காற்பாட்டென ... 238
ஆறுராயவ்வார்மேல் ... 494
ஆறிரண்டாமாவியுமு ... 510
ஆறிரண்டோடைந்தடியை ... 175
ஆறுமுதலாவெண்சீர் கூறும் ... 273
ஆறுவகையினகவலொடு ... 269
ஆறெழுத்தாதிபதினேழு ... 433
ஆறேழுருவுபாழெட்டோடு ... 475
ஆறைந்தைந்தையேழென ... 478
ஆற்றல் சாலாவிழுயல ... 46
ஆற்றுச்செலவு மனைமறிநாகமும் 262

இ

இ உ இரண்டன் 46,409 418
இசைநிலைநிறைய 68,416
இசைப்படுபுள்ளினெழாஅல்... 535
இடனேபருவம்பொழுதாண் 531
இடைக்கணிரண்டடியுமிக்கால் 483
இடைமை யாவன-யரலவழள . 24
இடையுங் கடையுமிணையும் ... 54
*இடைநிலைப்பாட்டேரவக . 281
இடைபலகுறைவதிணைக்குறள் 258
இடையிடைசீர்தபினிணை ... 258
இணைநடுவியலாவஞ்சியுரிச்சீர் . 82
இணைகூழைமுற்றேடிரு . 177
இணைச்குறில்குறிலெனடிலணை . 53
இமிழ்கடல்வரைப்பினெல்லை 18,252
இயலசை மயக்கமியற்சீராகும் . 423
இயற்சீரிரண்டுதலைப்பெய ... 85,91
இயர்சீருரிசசீரெனுமிருசீரும 70
இயற்சீருரிச்சீர் பொதுச்சீர் ... 58
இயற்சீரெல்லாமாசிரிய ... 61
இயற்சீரொன்றுநிலையது ... 92
*இயற்சீரிறுதிமுனேரவணிற்பின் 4
இயற்சீரிறுதிநேரிற்றகால ... 70
இயற்சீர் வெண்டளையான் ... 216
*இயற்சீர் வெள்ளடியாசிரிய... 115
இயற்சீர் வெள்ளடி வஞ்சியடி . 117
இயரசீர்த்தாகியுமயற்சீர்விரவி . 254
இயற்சீருட்டோன்றுமகவல்... 462
இயற்சீரொருபதுந்தன் ... 432
இயற்சீர் நேரிறநன்றளையுடை 413
*இயற்சீர்ப்பாற்படுத்தியற்றினர் 429
இயற்பெர்சார்த்தியெழுத்தள 45
இயற்பெயர்மருங்கின்மங்கல... 519
இயன்றசெய்யுட்கியைந்த ... 99
இயைபுத்தொடைகிளையின் ... 176
இயைபேயிறுசீரொன்று ... 156
*இயைபுவண்ணமிடை ... 382
இரண்டடியெதுகை ... 139
இரண்டடிசிறுமைபெருமை ... 282
இரண்டாஞ்சீர்வரினிணை ... 160
இரண்டாமெழுத் தொன்றன் 177
இரண்டாமடியை யினிதினின் 268
இரண்டாமடியினீற்றேரசை ... 230
இரண்டினு மூன்றினும் வஞ்சி . 110
இரண்டுமுதலாவெட்டீறாக ... 102
இரண்டுபாழ்மும்மூன்றேழ் ... 478
இரண்டுபுளிமாவெண்ணிறன் . 442
இரண்டுநான்கெட்டுப்பதிறுறு. 475
இரண்டுநான்குமெட்டும் ... 268
இரண்டெழுத்துமூன்றெழுத்து 438
இரண்டொன்பதாயினு ... 442
இரவுவரவுபேரின்றநெறி ... 410
இராயிரத்து நாற்பத்தேழ் ... 478
இருகுறணடுவெட்டணிச்சொல் . 231
இருக்கையுநூனெறியதியல்வகை 300
இருசீரொன்றினியைபெண ... 156
*இருசீரிடையிடிடெனருஉ ... 163
இருசீரடியுமுச்சீரடியும் ... 108
இருசீரடிமேலொருசீர் ... 256
இருசீர்குறளடிசிந்தடிமுச்சீர் . 100
இருசீர்மிசையிணையாகும் ... 173
இருசீர்நாலடிமூன்றிணைந்து... 342
இருதலைக்காமமன்றி ... 204
இருநான்ககவற்சீரைந்தியற்சீர் 428
இருநூற்றிருபத்தெட்டுவிரித் 22
இருநூற்றிருமுப்பத்தொன் 176,447
இருபதின்மேலா றென்பரேனை 437
இருபன்னிரண் டென்பரேனை 436
இருவகையுகரமோடியைந்தவை 89
இருவர்நூற்கு மொருசிறை ... 4
*இழுமென் மொழியான் ... 378

